# பயணம் ஒருகலை ஆனால்?




மானிட இயல் அறிஞர்

பிலோ இருதய நாத்




பசும்பொன் பதிப்பகம்

114, உஸ்மான் சாலை

தி. நகர், :: சென்னை-600 017.

**ARCHBISHOP'S HOUSE,**
Santhome, Madras-4.
23rd March, 1970.

*Mr. Philo Iruthayanath is one of those rare men who are prepared to do anything and undergo any difficulty or inconvenience to achieve the object proposed for realization. He took it upon himself to study the life and history of the many tribal people who are still found in India. For this he has had to travel to far, out of the way areas, live with the people for days together, experience many inconveniences and even dangers.*

*The many interesting facts he has gathered and brought out in attractive publications are a real contribution to the history of our country. One may perhaps look down upon the tribal life as primitive, barbarous and uncivilized, but a perusal of these books will show that in their poverty and primitive live these people have many traits of character and life which may, at times, put to shame the so-called modern civilization. His books certainly make very interesting reading and are bound to contribute towards a greater appreciation of our country. I wish therefore that these rather original publications find a place in all the libraries of our country and the Government may recognise his work and further promote his research capacity.*

*I wish God's blessing on the tireless work of Mr. Philo Iruthayanath.*

**(Sd.) R. ARULAPPA**
Archbishop of Madras & Mylapore,
South India.

# பதிப்புரை

உலகம் முழுவதும் வாழும் மக்கள் ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்வதில் எப்பொழுதுமே மகிழ்ச்சி அடைவார்கள். குழந்தை முதலே, இந்த எண்ணம் இந்தப் பழக்கம் ஏற்பட்டு விடுகிறது. சுற்றுப்புரத்தே நிகழும் நிகழ்ச்சிகளைப் புரிந்துகொள்ள உதவியாக பயணம் அமையும். அப்படி அமையும் பயணம், திட்டமிட்டபடி, ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமேயானால் அது சிறப்பானது.

அத்தகைய பயணத்தை ஒருகலை என்றே சொல்லலாம். பயணக்கலையிலேயே தன்னை முழுதும் ஈடுபடுத்திக்கொண்ட பிலோ இருதயநாத் அவர்கள் அதனைச் சிறப்பாகச் சொல்கிறார்கள். பயணம் எவ்வளவு பயங்கரமானதாக சில சமயம் அமைந்தும் விடுகிறது! அதனை எவ்வாறு எல்லாம் தவிர்க்கலாம். பயணத்தை எப்படி ஏற்பாடு செய்யவேண்டும், அதனை எப்படி அனுபவிக்க வேண்டும் என்பனவற்றை சிறப்பாக எழுதியுள்ளார்.

இதனை பசும்பொன் பதிப்பகத்தின் முதல் வெளியீடாகக் கொண்டுவருவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

வணக்கத்திற்குரிய ஆர்ச்பிஷப் அருளப்பா அவர்களுக்கு எங்கள் நன்றி.

பதிப்பகத்தார்.

# பயணக்கலை

பயணத்தைப்பற்றிய நூல்கள் இன்று நூற்றுக்கணக்காக வெளிவந்துள்ளன. ஆனால், நீங்கள் இதுவரையில் படித்த பயண நூல்கள் எல்லாவற்றிலும்கூட இந்த நூலில் படிக்கும் பயணக் கலையைப் பற்றிய செய்திகளை வாசித்திருக்க மாட்டீர்கள்—என்பது உங்களுக்கே தெரியும். காரணம் மக்கள்வாழ்க்கையில் ஏற்பட்டவைகளை இங்கு அப்படியே தீட்டியுள்ளேன்.

இந்த நூலை படித்தால் உண்மையில் பயணம் செய்யப் பயம் ஏற்படும். இத்தலைப்பை வாசிக்கும் நண்பர்கள் கூட "ஊம்'' என்ன? பயணத்திலா இவ்வளவு அபாயமிருக்கிறது? தற்காலத்தில் சிறு சிறு மாணவர்கள் எல்லாம் உல்லாசப் பிரயாணம் செய்துவிடுகின்றனர். இந்த நூலாசிரியர் என்னவோ இப்படி யெல்லாம் எழுதுகிறாரே'' என்று நினைக்கலாம்.

இந்தப் பிரயாணக் கட்டுரையில் வரும் ஒவ்வொரு சம்பவமும் உங்களுக்குத் தெரிந்த நண்பர்களுக்கும், உங்கள் உறவினர்களுக்கும் எனக்கும் பிரயாணத்தில் ஏற்பட்ட சொந்த அனுபவமே யாகும். இதில் ஒன்று கூடக் கட்டுக் கதையோ, கற்பனையோ இல்லை. ஆனால் யார் யாருக்கு எங்கே? எப்பொழுது? எப்படி? நேர்ந்தது என்பது பற்றிப் பெயர் விலாசம் உட்பட முழுதும் என் குறிப்பு நோட்டில்

பல்லாண்டுகளாக எழுதி வைத்துள்ளேன். அந்த முழு விவரத்தையும் இங்கே கொடுத்தால் என் நண்பர்கள், உறவினர்கள் முதலியவரின் உள்ளம் ஒரு வேளை புண்படும் அல்லவா? ஆகையால் பொது மக்களாகிய என் அருமை வாசகர்களுக்கு எந்தச் செய்திகள் வேண்டுமோ அந்தச் செய்தியை மட்டும் இங்கே எடுத்துக் கூறியுள்ளேன். இதில் வரும் சம்பவங்களைப் பற்றிக் கேட்க வேண்டியதாக இருந்தால் உங்கள் நண்பர்களிடம் கேளுங்கள். அவர்களே, "இந்த ஆபத்தில் நானும் சிக்குண்டேன்." என்று சாட்சி கூறுவார்கள்.

"பயணம் செய்யக் கூடாது!" என்று நான் கூறவில்லை. ஒவ்வொருவரும் கட்டாயம் பயணம் செய்ய வேண்டும். ஆனால் பயணம் செய்வதற்கு முன்பே நல்ல திட்டங்களைத் தீட்டிக் கொள்ள வேண்டும். முன் ஜாக்கிரதை வேண்டும். முன் ஜாக்கிரதையாக இருப்பவனைப் பார்த்துப், "பெரிய கோழை போலிருக்கிறதே!" என்று கூறுவார்கள். அதற்காகக் கவலைப்படக் கூடாது. பயணத்தில் அனுபவமில்லாதவர்கள், அப்படித்தான் தற்பெருமையாகப் பேசுவார்கள், என்று நினைத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் இந்த முப்பத் தைந்தாண்டுகளில் என்னைக் கண்டு, "கோழை" என்று கூறிச் சிரித்தவர்கள் பலர். ஆனால் அவரே அதில் சிக்கியபின் என்னிடம் வந்து "நீங்கள் சொல்லும்போது என்னவோ வென்று இருந்தேன். உண்மையில் பயணத்தில் ஜாக்கிரதையாக இல்லாவிட்டால் ஆபத்துத்தான் உண்டாகும் என்பதை என் அனுபவத்தால் உணர்கிறேன்" என்று கூறியிருக்கிறார். பட்டம் பெற்று, கல்லூரியில் ஆசிரியர்களாக இருப்பவர்களும் பயணம் செய்யும்போது ஆபத்தில் சிக்கிய சில விஷயங்களும் இதில் இடம் பெற்றிருக்கின்றன.

"அனுபவமுள்ளவர்கள்" என்று பட்டம் வாங்கியவருக்கும் ஏற்பட்ட பல ஆபத்துக்களும் இங்கே இடம் பெற்றிருக்கின்றன. இக்கட்டுரையை நான் எழுதும் பொழுது அவர்கள் எல்லோரும் என் மனக் கண் முன் வந்து

நின்று, நின்று மறைந்தார்கள். இங்கே இடம் பெற்றிருக்கும் சில சம்பவங்களைச் சில சமயங்களில் கட்டுரைகள் எழுதும் பொழுது கோவைக்காக அந்தந்தக் கட்டுரையில் சுருக் கமாக எழுதியிருக்கிறேன். ஆனால் அந்தச் சம்பவங்களை இங்கே விளக்கத்திற்காகவும் பிரயாணக் கோவைக்காகவும் சேர்த்ததாகக் கொள்ள வேண்டுகிறேன். கூறுவது கூறல் என்று கொள்ளக் கூடாது. இந்த நூலில் முதலில் எனக்கு காட்டிலும், மலையிலும், ஏற்பட்ட அனுபவங்களையும், ஆபத்துக்களையும், சிக்கலையும் கஷ்டங்களையும் பற்றி எழுதுகி றேன். இவைகளை வாசித்தபின், ' இக்கஷ்டங்கள் எல்லாம் கிராமங்களிலும், நகரங்களிலும் ஏன் ஏற்படப் போகின் றன.'' என்று நினைக்கலாம். ஆனால் மலைகளிலும் காடு களிலும் பிரயாணத்தில் ஏற்படும் அபாயங்களைவிட, கிராமங்களிலும் நகரங்களிலும் உண்டாகும் அபாயங்களே பெரியவை. நான் முதலில் மலைகளிலும், காடுகளிலும் பிரயாணம் செய்த போது ஏற்பட்ட அபாயங்களைப் பற்றி எழுதி விட்டு பிறகு கிராமங்களிலும், நகரங்களிலும், என்னென்ன அபாயங்கள் ஏற்படுகின்றன என்பதைப் பற்றி விளக்குகிறேன். பிறகு நீங்களே தீர்ப்பளிப்பீர்கள்.

இத்தகைய ஆபத்துக்களெல்லாம் என் அன்பர்களுக்கும் வாசகர்களுக்கும் உண்டாகக் கூடாது என்பதற்காகத்தான் இந்தப் பிரயாணக் கட்டுரையை நூலாக என் நண்பர்களும், வாசகர்களும், உறவினர்களும் எழுதும்படி கட்டளையிட்டார் கள் நானும் அவர்கள் கட்டளைக்கு என் கரங்களை ஒப்படைத் தேன்.

இத் தலைப்பைக் கண்டதும், ''பிரயாணத்தில் கூடவா அபாயம் உண்டு.'' என்று பலர் சிந்தனை செய்யலாம். அனுபவமுள்ளவர்கள் இப்படித்தான் சொல்லுவார்கள். பிரயாணம் என்பது நல்ல கலைதான். ஆனால் யோசனை இல்லாமல், நிதான புத்தி இல்லாமல், முன் எச்சரிக்கை யில்லாமல் பிரயாணம் செய்தால் இந்தக் கலை கடைசியில் கொலையாக மாறும் என்பது திண்ணம்.

என்னுடைய தகப்பஞர் பெயர் டாக்டர் *A.F.* மைக்கேல் அவர் ஒரு பெரிய டாக்டர். அவர் 1914–ஆம் ஆண்டு "பெரிய யுத்தம்" நடந்த பொழுது, "காப்டனுகப் பணிப் புரிந்தார். அந்தக் காரணத்திற்காகப் பல நாடுகளுக்கும் இந்தியாவில் பல ஊர்களுக்கும் பிரயாணம் செய்தவர். பல விஷயங்களே அவர் மூலமாக நாங்கள் கேள்விப்பட்டதுண்டு.

என் தாயாரை ஈன்ற என் பாட்டஞரோ மேல் நாடுகளிலிருந்து, இந்தியாவுக்கு வரும், ஆங்கிலேயரை, இந்தியா முழுவதும் அழைத்துக் கொண்டு போய் சரித்திரச் சான்றுகள் உள்ள இடங்களேச் சுற்றிக் காட்டும் "கைடாகப்" பணிபுரிந்தவர். ஓர் ஆண்டில் சுமார் 10—15 நாட்கள்தான் என் தாத்தா வீட்டிலிருப்பார்.

என் தாத்தா போகாத ஊர்கள் இந்தியாவில் இல்லே. கீழ்த் திசை நாடுகளும் இல்லே. அவருடைய அத்தாட்சிப் பத்திரங்கள் எல்லாம் இன்றும் என்னிடமிருக்கின்றன. என் தகப்பஞர் நான் பத்து வயதுப் பையஞக இருக்கும் பொழுது நான் தைரியமாக ஏதாவது ஒரு காரியத்தைச் செய்தால், "இது முட்டாள் தைரியம்" என்றும் "இது புத்திசாலி தைரியம்" என்றும் கூறுவதுண்டு. "சிங்கம் தைரியமுள்ளது. ஆஞல் நரியோ நிதான புத்தியுள்ளது. ஆகையால் அது சிங்கத்தைக் கொன்றது." என்று அடிக்கடி கூறுவார்.

ஆஞல் நான் பிரயாணத்தில் அனுபவமில்லாதவஞக இருந்ததால், "தைரியத்தில் முட்டாள் தனம் வேறு, புத்திசாலி தனம் வேறு என்று வேறுபாடு இருக்கிறதா? என்று அடிக்கடி கேட்பதுண்டு. ஆஞல் அவ்வப்பொழுது அவர் எனக்கு விளக்கியும், பத்திரிகையில் அன்று வரும் செய்திகளேப் படித்துக் கூறியும், வெளிநாடுகளிலும், இந்தியாவிலும் கண்ட கேட்ட பல செய்திகளே எடுத்துக் கூறியும் அறிவுரை தருவார். ஆஞல் அந்தச் சிறு வயதில் என்ஞல், "எது முட்டாள்தனமான தைரியம். எது புத்தி சாலித்தனமான தைரியம் என்று புரிந்து கொள்ள முடிய வில்லே. ஆஞல்—நான் வளர்ந்த பிறகும்கூட, அது "எது"

என்றும் என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லே. ஆனுல் காடுகளிலும், மலேகளிலும், பல ஊர்களிலும் தனிமையில் பிரயாணம் செய்யும் பொழுதுதான் நான் அதை அனுபவ வாயிலாகப் புரிந்துகொண்டேன். ஆனுல் அனுபவமில்லாத வர்கள், நான் பிரயாணத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருப்பதைக் கண்டு, "இப்படி பயந்த சுபாவமுள்ளவர் எப்படிக் காட்டிலும் மலேயிலும் பிரயாணம் செய்கிருர்" என்று பேசிக் கொண்டதைக் கேட்டிருக்கிறேன். சிலர் என்னிடமே கேட்டு விட்டார்கள். இவைகளுக்கெல்லாம் விளக்கமான பதில், பயணக் கலே என்றஇந்த நூலில் காணலாம்.

முட்டாள் தைரியமிருந்தால்; காட்டிலும் சரி, மலேயிலும் சரி ஏன் நகரங்களிலும் சரி அது நம்மை ஆபத்திலும், அலேச்சலிலும், மன வேதனேயிலும் கொண்டுபோய் விட்டு விடும். "வினேத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம் மற்றைய எல்லாம் பிற" என்பது வள்ளுவர் வாய்மொழி யாகும். "புலியடிக்கும் முன்னே பேடியைக் கிலியடிக்கும்" என்பர் தமிழர்.

"இன்றைய நாகரிக உலகத்தில் காடுகளிலும், கொடிய விலங்குகளுக்கிடையேயும் வாழும் இலட்சக்கணக்கான மக்கள் இந்தியாவில் உள்ளனர். மேலும் பல ஊர்களிலும், பல கிராமங்களிலும் வாழும் மக்களேப் பற்றிய பல வாழ்க்கை விஷயங்கள் மிகவும் சுவாரஸ்யமானவை" என்றும் நான் சிறுவனுக இருந்தபொழுது என் தாத்தாவும், என் தகப்பனுரும் கூறியிருக்கிருர்கள்.

என் தாத்தாவும், என் தகப்பனுரும் காடுகளில் நடக்கும் பல விஷயங்களேயும், அங்குத் தமக்கேற்பட்ட அனுபவங் களேயும் என்னிடம் எடுத்துக் கூறியதுண்டு. இவைகளே எல்லாம் கேட்ட நான், அன்றே நாம் ஏன் பல ஊர்களுக்குப் பயணம் செய்யக்கூடாது என்று எண்ணியதுண்டு.

நான் பதினேந்து வயதுப் பையனுக இருக்கும் பொழுதே, அச்சு வெல்லத்தை ஒரு பையில் வைத்துக்கொண்டு ஒரு

சிறிய காட்டைக் கடந்து ஒரு கூலிக்காரனுடன் நடந்து சென்றேன். இது நடந்தது 1927-ஆம் ஆண்டு. இந்த எண்ணம் வளர வளர என் பிரயாணமும் வளர்ந்தது. நான் முதன் முதலில் பஸ் போகாத குக் கிராமங்களுக்குத்தான் பிரயாணம் செய்தேன். பிரயாணம் செய்வது உல்லாசமாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டு தொடங்கினேன். ஆனால் நான் முதன் முதலில் என்னென்ன கஷ்டங்களை அனுபவித்தேன் என்பதை என்னால் வர்ணிக்க முடியாது. சில விஷயங்களை நான் எழுதவும் முடியாது: நான் மாணவனாக இருந்த பொழுது செய்த பிரயாணங்களையும் அப்போது அடைந்த அனுபவங்களையும் பற்றி அப்பொழுது பள்ளி ஆண்டுப் பத்திரிகையில் எழுதியிருக்கிறேன். அந்த அனுபவங்களை நான் எழுதிய பொழுது, என் பள்ளி ஆசிரியர்கள் என்னை மிகவும் பாராட்டி யிருக்கிறார்கள். என் ஆசிரியர்களின் ஆசியும் பாராட்டுதலும்தான் என்னை மேன் மேலும் பத்திரிகையில் எழுதத் தூண்டின. பத்திரிகையில் எழுத நல்ல முறையில் நான் பிரயாணம் செய்ய வேண்டும் அல்லவா?

பிரயாணம் செய்தால் பல ஊர்களைப் பற்றிய பல விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம். எல்லாத் துறையிலும் நான் சமர்த்தனாக இருக்கலாம் என்று எண்ணினேன். கிராமங்கள், நகரங்கள், காடுகள், மலைகள் முதலிய மாறுபட்ட இடங்களுக்குப் பிரயாணம் செய்ய வேண்டுமானால் அந்தந்த இடத்திற்கேற்ற பிரயாணக் குறிப்புக் களையும், சாமான்களையும், பணத்தையும் தனித்தனியாக எடுத்துக் கொள்ள வேண்டும். இந்த நூலிலிருக்கும் கட்டுரைகளும், விஷயங்களும் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் உட்கார்ந்து மற்ற நூல்களைப் பார்த்துக் "காப்பி" அடித்து எழுதியவைகள் அல்ல, ஒரே ஆண்டில் ஏற்பட்ட அனுபவமுமில்லை.

பல காடுகளிலும், பல மலைகளிலும், பல ஊர்களிலும் பலருடைய வீடுகளிலும், ஓய்வு கிடைக்கும் பொழுது எழுதிய குறிப்புகள், சுமார் முப்பத்தைந்தாண்டுகளில்

என் பிரயாணத்திலும், என் வாழ்க்கையிலும், என் அனுபவத்திலும் ஏற்பட்ட பல முக்கியமான விஷயங்களைத் தொகுத்து சுருக்கமாக எழுதியவைகள். சில ஊர்களில் சிலருடைய மரணச் செய்திகளைக் கேட்டபின், அவர்கள் எப்படி மரண மடைந்தார்கள் என்பதை நிர்ணயிக்க, அவர்களுடைய சமாதிகளுக்குச் சென்று அவ்ற்றின் மேல் எழுதியிருக்கும் விஷயங்களையும் அப்படியே புகைப்படங்கள் எடுப்பதுண்டு. பிரயாணம் செய்வது என்ன கஷ்டமா? ஜாலியாகப் பிரயாணம் செய்யலாமே என்றும், பிரயாணம் செய்யாமலே கதை கட்டி அளக்கலாம் என்று சிலர் கூறுகின்றனர். அனுபவ மில்லாதவர்கள் தான் அப்படிப் பொருமையால் கூறுவார்கள் என்று நினைத்துப் பொறுமையாக இருந்து விடுவேன்.

## பயண அனுபவங்கள்

---

உல்லாசப் பிரயாணம் செய்யத் தொடங்குவது சந்தோஷமாகத் தான் இருக்கும். பிரயாணம் போகிறவர்கள் தங்கள் கவலைகளை மறக்கத் தான் போகிறார்கள். ஆனால் அங்கே போன பிறகு தான், வேறு சில சாமான்களையும் கொண்டு வர மறந்து விட்டது நினைவுக்கு வருகிறது. முக்கியமான பொருளை விட்டு விட்டுப் பிரயாணம் போன பிறகு எவ்வளவு கஷ்டப்படுகிறோம். எவ்வளவு கஷ்டப் பட்டோம் என்பது எனக்குத் தான் தெரியும். பிரயாணம் செய்யச் செய்யத் தான் பிரயாணத்தில் என்ன என்ன அபாயங்கள் இருக்கின்றன என்பது நன்றாகத் தெரியும். பிரயாணம் செய்ய முக்கியமாக என்ன வேண்டும்? என்று யாரையாவது கேளுங்கள். அவர்கள் பிரயாணம் செய்ய

"பணம்" வேண்டும் என்று தான் சொல்லுவார்கள். ஆனால் பிரயாணத்தில் அனுபவமுள்ளவர்கள் "பணம்" என்று சொல்லமாட்டார்கள். பிரயாணம் செய்ய முதலில் நல்ல திட்டங்களைப் போட வேண்டும். நாம் பிரயாணம் செய்யுமிடம் கிராமமா? அல்லது நகரமா? அல்லது காடா? அல்லது மலைப்பிரதேசங்களா? அல்லது அன்னிய நாடுகளா? என்பதை முதலில் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு அந்த இடங்களுக்குப் போவதற்குத் திட்டங்களை நாம் பல நாட்கள் அல்லது மாதங்களுக்கு முன் கூட்டியே தீட்டிக் கொண்டு ஏற்பாடுகளும் செய்ய வேண்டும். நாம் போகும் ஊர்களைப் பற்றிச் சில தகவல்கள் வேண்டியதாக இருந்தால் அந்த ஊர்ப் பஞ்சாயத்து அங்கத்தினர்களுக்குப் (*Reply Postcard*) பதில் தபால் அட்டைகளின் மூலம் எழுத வேண்டும். அப்பொழுதுதான் நமக்குச் சுமார் இருபது நாட்களிலாவது பதில் கிடைக்கும். ஒரு வாரத்திற்கு முன் கடிதம் எழுதிக் கொள்ளலா மென்று இருந்தால் நமக்குப் பதில் வராது. மேலும் ஓர் ஊருக்கு பிராயாணம் போவதாக இருந்தால் இரண்டு பேராகவோ அல்லது தனியாகவோ சென்றால்த்தான் அந்தப் பிரயாணம் நல்ல முறையில் முடிவுறும். அப்படியில்லாமல் ஐந்து ஆறு பேர்பேசிக் கொண்டு பிரயாணம் செய்தால், அது எதற்கும் ஒத்து வராது. மேலும் பிரயாணத்தில் நாம் பார்க்க வேண்டியவைகளை நன்றாகப் பார்க்க முடியாது; போக வேண்டிய இடங்களுக்குச் சரியாகப் போக முடியாது. ஒருவருக்கு ஓர் ஊரில் சென்றால் சினிமா பார்க்கவேண்டு மென்று பிரியமிருக்கும். மற்றொருவருக்கு வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டுச் சீட்டு ஆடத்தோன்றும்; வேறொருவருக்கு வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டுத் தூங்கத் தோன்றும். ஆனால் நாம் ஒரு ஊருக்குச் சென்றது சீட்டு ஆடவோ, தூங்குவதற்கோ இல்லை. அந்த நண்பரைக் கூப்பிட்டால், "நான் வரவில்லை நீங்கள் போங்கள் நான் இங்கேயே இருக்கிறேன்" என்று கூறிவிடுவார். ஆனால் ஒரு காரியாலயத் திலிருந்து பலர் கூட்டமாகப் போகிறார்களே என்று

கேட்கலாம். அது காலையில் போய், மறுநாளோ மாலையோ திரும்பி வரும் விஷயம். இதில் ஒன்றையும் பார்க்கவோ புகைப்படங்கள் எடுக்கவோ முடியாது. பார்த்தவைகளை எழுத்துக் கூறவும் முடியாது. முதன் முதலில் நாம் வீட்டை விட்டுப் போவதற்கு முன், நாம் போகும் ஊர்களின் சீதோஷ்ண நிலையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனென்றால் நாம் போகும் ஊர்களில் மழைக்காலம் அல்லது குளிர் காலம் அதிகமான வெயில் காலமாக இருந்தால் காலமும் பணமும் வீணாகும். மேலும் அந்த ஊர்களில் காலராவோ, அல்லது விஷக் காய்ச்சலோ பரவி இருக்கும் காலமாகப் பார்த்துப் போகக் கூடாது. சரி அப்படி நாம் போன பிறகு ஏதாவது வியாதிகள் பரவினால், உடனே மற்றொரு ஊருக்குப் போவதற்கு வேண்டிய திட்டங்கள் கையில் இருக்க வேண்டும். எப்பொழுதும் நான் பிரயாணம் செய்தாலும் இரண்டு மூன்று ஊர்களுக்குப் போவதற்குத் திட்டங்களைத் தயார் செய்து கொண்டுதான் போவேன். சில சமயங்களில் இத்திட்டங்கள் போடுவதற்கு எனக்குச் சுமார் மூன்று மாதங்கள் வேண்டும். ஓர் இடத்திற்குப் பிரயாணம் போக முடிவு செய்தபின் அந்த இடத்தில் உள்ள சில முக்கியமானவர்களுக்குப் பதில் போஸ்ட்டு கார்டுகள் மூலம் அந்த இடத்தில் பஸ்வசதிகள், இரயில், சந்தை கூடும் நாள் முதலியவைகளைப் பற்றித் தெரிந்து கொள்வேன். தபால் மூலம் சேகரிக்கும் செய்திகள் எல்லாம் சரியாக இராது. எல்லாமே தவறாகவும் இரா. ஆகையால் கிடைக்கும் எல்லாச் செய்திகளையும் வைத்துக் கொண்டு, அந்த ஊரில் போய் நாம் எல்லாச் செய்திகளையும் துருவித்துருவிப் பார்த்து ஆராய்ச்சி செய்ய வேண்டும். கிராமங்களிலும், நகரங்களிலும், மலைப்பிராந்தியத்தில் வாழும் மக்களிலும் கூடச் சிலர் தாங்கள் போகும் ஊர்களையும் போகுமிடங்களையும் பற்றி இல்லத்தில் இல்லாளிடமோ அல்லது தங்கள் பெற்றோர்களிடமோ கூறி விட்டுப் போனால், அது தங்களிக்கு மதிப்புக் குறைவு என்று நினைக்கின்றனர். "அப்படிச் சொல்லி விட்டுப் போவது எனக்குப் பழக்க

யில்லை'' என்று சில நண்பர்கள் பெருமையாகச் சொல்லு கிறார்கள். ஆனால் அது எவ்வளவு பெரிய ஆபத்திலும், பரிதாபகரமான நிலையிலும் கொண்டு போய் விடுகின்றது, என்பது என் அனுபவத்தில் அறிந்து, கண்டதையும், கேட்டதையும் உங்களுக்கும் எடுத்துக் கூறுகிறேன்.

''கோவையிலிருந்து—சத்தியமங்கலம் போகும் வழியில் உள்ள ஓர் ஊரில் சில ஆண்டுகளுக்கு முன் ஒரு நண்பர் இல்லத்தில் தங்கியிருந்தேன். நான் தங்கியிருந்த இல்லத்தின் எதிர் வீட்டில் ராமுடு–லீலா என்ற தம்பதிகள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள், திருமணமாகிச் சுமார் பத்தாண்டு களாகியும் அவர்களுக்குக் குழந்தைகள் இல்லை. ராமுடு அடிக்கடி வெளி ஊர்களுக்குச் சென்று மாடுகள் பிடித்து வியாபாரம் செய்வதுண்டு. ஆனால் ராமுடு ஊருக்குப் போகும் பொழுது, ''நான் ஊருக்குப் போகிறேன்'' என்று சில சமயங்களில் சொல்லுவார். சில சமயங்களில், ''நான் வரப் பத்து இருபது நாளாகும்'' என்று சொல்லி விட்டுப் போவதும் பழக்கம்.

ராமுடு வாழ்ந்த காலத்தில் அவர் எங்கே, எந்த ஊருக்குப் போகிறார்? என்பதே அவர் மனைவிக்குத் தெரியாது. ஏதாவது தனக்கு வேண்டியதாக இருந்தால், கடையில் போய் வாங்கிக் கொள்ளும் பழக்கம் மனைவிக்கு உண்டு. பலமுறை நானே ராமுடுவிடம் கூறியிருக்கிறேன். ''நீங்கள் எந்த ஊருக்கு முதலில் போகிறீர்களோ அந்த ஊரின் விலாசத்தை வீட்டில் கொடுத்து விட வேண்டும். பிறகு போன இடத்திலிருதது ஒரு தபால் வீட்டுக்கு எழுத வேண்டும். மேலும், நாம் எந்த ஊரில் எந்த விலாசத்தில் இருக்கிறோம் என்பதையும் தெரியப் படுத்த வேண்டும். ஏனென்றால், ''இன்றைக்கோ நாளைக்கோ, இங்கேயோ எங்கேயோ நம்மைக் கொல்லும் சாவு'' என்று சாது சுந்தர் சிங் கூறுகிறார். என்று ராமுடுவிடம் அடிக்கடி சொல் வதுண்டு. ஆனால் அவர் தன்னுடைய பெருமையான முட்டாள் பழக்கத்தை விடுவதில்லை.

ஒரு சமயம் நான் சத்தியமங்கலத்தில் என் நண்பர் இல்லத்தில் இருக்கும் பொழுது ராமுடு வெளியூருக்குப் போய் இரண்டு நாட்கள் ஆயின. ராமுடுவின் மனைவி லீலாவதி மாரடைப்பால் மரணமடைந்து விட்டாள். எதிர் வீட்டில், பக்கத்திலுள்ளவர்கள் எல்லோரும் ராமுடுவின் நண்பர்களுக்கும், சில உறவினர்களுக்கும் சொன்னார்கள், "ராமுடு இங்கே இருக்கலாம்? அங்கே இருக்கலாம்? என்று தந்தி கொடுத்தார்கள்! அங்கே எல்லாம், "வரவில்லை" என்று பதில் தந்தி வந்து விட்டன. கடைசியில் மூன்றும் நாள் நண்பர்களும், உறவினர்களும் லீலாவுக்குச் செய்ய வேண்டிய கடைசிச் சடங்கைச் செய்து விட்டார்கள். பதினாறு நாட்கள் வீட்டைப் பூட்டக் கூடாது என்று சும்மா விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. லீலா மரண மடைந்த பதினான்காம் நாள் ராமுடு தன் மனைவிக்கு பூ, பழம், புடைவை, சில சாமான்கள் எல்லாம் வாங்கிக் கொண்டு சந்தோஷமான முகத்துடன் வண்டியில் வந்திறங்கினார். வீடு திறந்திருந்தது. ஆனால் லீலா இல்லாததைக் கண்டு, உடனே, "அவள் எங்கள் வீட்டில் இருக்கிறாளோ! வென்று கேட்க எங்களிடம் வந்தார். இவைகளை எல்லாம் எங்கள் வீட்டுப் பலகணியின் மூலம், நானும், என் நண்பரும் பார்த்துக் கொண்டேதான் இருந்தோம். அவர் எங்களை நாடி வருவதைக் கண்ட நான் என் நண்பரிடம், "அவருக்கு நான் பதில் கூறுகிறேன்." என்று கூறினேன்.

"வாங்கோ ராமுடு! எப்பொழுது வந்தீர்கள்" என்றேன். "பல ஊர்களைப் பார்த்துக் கொண்டு வீட்டுக்கு வந்தால் இவளைக் காணோம். ஒரு வேளை இங்கே இருக்கிறாளோ வென்று கருதி வந்தேன். வீட்டைத் திறந்து போட்டு விட்டு எங்கேயும் போகமாட்டாள்" என்று கூறுவதற்குள் நான் குறுக்கிட்டு, லீலாவுக்கு நல்ல காய்ச்சல். ஆகையால் நாங்கள் கொண்டு போய் ஆஸ்பத்திரியில் விட்டிருக்கிறோம். உங்களுக்குத் தெரியபடுத்தலாமென்றால், உங்கள் விலாசமோ, உங்களிடமிருந்து வந்த கடிதமோ ஒன்றுமே இல்லை." என்று கூறினேன்.

"அந்தப் பழக்கம் தான் நான் வைத்துக் கொள்வதில்லை." என்று கூறினர் அவர்.

உடனே நான், "மறுமணம் செய்த பின்னாவது இந்தப் பழக்கத்தை வைத்துக் கொள்ளுவீர்கள்! என்று நம்புகிறேன்." என்று கூறிய பொழுதே அவர் முகம் மாறியது. மறுபடியும் 'நான், "உங்கள் மனைவிக்கு மார்நோவு வந்தது. டாக்டரை அழைத்து வருவதற்குள் மரணமடைந்து விட்டார்கள். ஏதோ எங்களால் கூடுமான வரையில் பல இடங்களுக்குத் தந்தி அடித்தோம்."

"ஒரு பலனும் கிடைக்கவில்லை. ஏதோ நண்பர்களும், உங்கள் உறவினர்கள் சிலரும் சேர்ந்து அடக்கம் செய்துவிட்டார்கள். நீங்கள் வந்ததும் திடீரென்று இந்தப் பெரிய அதிர்ச்சியைச் சொல்லக் கூடாது என்று தான் நான் இப்படி நிதானமாகச் சொல்ல வேண்டுமென்று முடிவு செய்தேன்." என்று கூறி முடித்தேன். "இப்பொழுது தான் நீங்கள் அடிக்கடி போகும் இடத்தைச் சொல்ல வேண்டு"மென்று கூறுவது எனக்கு நன்ருக விளங்கியது. "அன்று எனக்கு அது விளங்கவில்லை," என்று கூறிக் கண்ணீர் விட்டார் ராமுடு.

இதைப் போல் பல விஷயங்களை நான் கேட்டும் பார்த்துமிருக்கிறேன். இன்னும் எவ்வளவோ ஆபத்துக்கள் இருக்கின்றன என்று கூறினேன்.

பிரயாணம் செய்வதற்கு முன் நாம் போகும் ஊரின் பெயரை வீட்டில் சொல்வது மட்டுமன்று; நம்முடைய வீட்டு விலாசத்தை நம்முடைய சட்டைப் பையிலும் நம்முடைய பொருள்களின் மேலும் கட்டி வைத்திருப்பது மிகவும் நன்மையைத் தரும் என்பது திண்ணம்.

அப்படிப் பிரயாணம் செய்வதற்கு முன் நான் எடுக்கும் சாமான்கள் என்னென்ன தெரியுமா? பூஜை செய்வதற்கு வேண்டியவைகள், புகைப்படப் பெட்டி, புகைப்படச் சுருள்கள், (*Films*) கேமரா ஸ்டாண்டு, சில மருந்துகள், சாதாரண மாத்திரைகள், டிஞ்சர் அயோடியன், செலவுக்கு

வேண்டிய இரட்டிப்பு அளவு பணம் விஷயங்கள் சேகரிக்க வேண்டிய நோட்டுப்புத்தகங்கள், இங்க் புட்டிகள், எழுது வதற்கு வேண்டிய பேனுக்கள், பென்சில் முதலியவைகள், சிவப்புப் பென்சில், ரப்பர், என்னுடைய பல மொழிகள் நோட்டுப் புத்தகம், இரண்டு ஜதைத் துணிகள், கொசுவலை காட்டு எறும்புகளுக்காகவும், நகர ஓட்டல்களில் மூட்டைப் பூச்சுகளுக்காகவும், "டி—டி—டீ பவுடர் காட்டில் அட்டை களுக்கு மூக்குப் பொடி டின், ஓமம், குடைகள் மழைக் கோட்டு, பைனுக்குலர், தர்மாஸ் பிளாஸ்க், தண்ணீர்ப்பை, எலுமிச்சம் பழம், தபால் ரிப்ளைக் கார்டுகள், பற்பொடி, ஊசி, நூல், ஜாம், பூட்ஸுகட்டும் கயிறு, பாலீசு, சவரப் பெட்டி, டார்ச்சு, பல்புகள், தீப்பெட்டிகள், மெழுகுவத்திகள் படுக்கை, டவல், தடி, அருகில் தங்கி இருக்கும் விலாசமும், நிரந்தரமான விலாசமும் எழுதப்பட்ட காகிதங்கள், இவைகளை வைத்துக் கொள்வேன். பூதக்கண்ணுடி, சாதா பைகள் இரண்டு, கண்ணுடி சீப்பு, கத்திகள், சைக்கிளைப் பூட்டும் செயின், மேஜை உப்பு, டைபின்கள், லைப்பாய் சோப்பு, தேங்காயெண்ணெய், ஊறுகாய்கள், இன்னும் சீதோஷ்ண நிலைக்கு வேண்டிய துணிமணிகள், இரயில்வே டிக்கட்டுகள், முதலிய சாமான்களின் பெயர்களை ஒரு காகி தத்தில் எழுதிப் பிரயாணம் செய்வதற்கு முன் தயார்— செய்த "லிஸ்டை"க் கையில் வைத்துக் கொண்டு, எல்லாச் சாமான்களையும் எடுத்துக் கொண்டோமா? வென்று பார்க்க வேண்டும். பிரயாணத்திற்கு வேண்டிய சாமான்களின் "லிஸ்டு" தயார் செய்யாவிட்டால், கட்டாயம் நாம்போகும் பொழுது முக்கியமான சாமான்களை வீட்டில் வைத்துவிடு வோம். இப்படி எவ்வளவோ படித்துப் பட்டம் வாங்கிய வர்கள், இரயிலில் உட்கார்ந்தபின் தங்களுடைய கைவிரலைக் கடித்துக் கொள்வதைக் கண்டிருக்கிறேன். சிலர் மெயி லுக்கு வாங்கிய டிக்கட்டை வீட்டில் வைத்துவிட்டு, வண்டி, போகும் பொழுது டிக்கட்டு இல்லாததைக் கண்டு மறு படியும் சாமான்களை எல்லாம் வண்டியிலிருந்து கீழே இறக்கி வைத்து விட்டு, பிறகு வீட்டுக்கு ஓடி டிக்கட்டை எடுத்து

வந்து, இரண்டு மணி நேரம் கழித்து பாசஞ்சர் வண்டியில்
பிரயாணம் செய்வதைக் கண்டிருக்கிறேன். அது மட்டுமா?
"பெண்கள் வருகிறார்கள், மெயில் வண்டியில் சந்திக்கவும்"
என்று தங்கள் உறவினர்களுக்குத் தந்தி அடித்திருப்பார்கள்.
அவர்கள் மெயில் வண்டிக்கு வந்து பார்த்து விட்டுப் போய்
விடுவார்கள். ஆகையால், மெயில் வண்டி தவறிய நபர், மறு
படியும், பாசஞ்சரில் வருகிறார்கள்" என்ற தந்தி அடிப்
பார்கள். மெயில் வண்டியைப் பார்த்துவிட்டு வீட்டுக்குப்
போன நண்பர் "சகோதரி வரவில்லை" என்று இங்கே தந்தி
அடிப்பார். இங்கே இருந்து மறுபடியும், "பாசஞ்சரில்
கூட வரவில்லையா?" என்று தந்தி ஓடும் மறுபடியும்
"சகோதரி பாசஞ்சரில் வந்து சேர்ந்தார்கள்!" என்று அங்கே
இருந்து இங்கே தந்தி ஓடிவரும். இவ்வளவுக்கும் காரணமாய்
நின்றது, "பிரயாண லிஸ்டு" தயார் செய்யாதது தான்.
இவைகள் எல்லாம் நடந்திருக்குமா? என்று வாசகர்கள்
கேட்க வேண்டாம். இங்கே எழுதும் சம்பவங்கள் எல்லாம்
நேரில் கண்டவைகள். நேரில் கேட்டவைகள்; சில சம்பவங்
களை நானே நேரில் கண்டு உதவி செய்ததையும் அப்படியப்
படியே எழுதுகிறேன். கடந்த முப்பத்தைந் தாண்டுகளாக
என் பிரயாணத்தில் ஏற்பட்ட பல கோடி விஷயங்களை
இங்கே எழுத முடியவில்லை: சில செய்திகள் எழுதவும்
இயலாது.

எனவே, திட்டப்படி "லிஸ்டு" தயாரித்து அதன்படி
சாமான்களை முதலில் எடுத்து ஒரு பக்கமாக வைத்துச்
கொள்ள வேண்டும். பிறகு எல்லாவற்றையும் கட்ட
வேண்டிய முறையில் ஒழுங்காகக் கட்டி நம்முடைய
சாமான்களை நாமே தூக்கும் அளவுக்குத் தயாராக இருப்பது
நல்லது, காந்தி அடிகள் தம் பிரயாண சாமான்களைத்
தாமே சுமந்து செல்லுவாராம்.

குறிப்பிட்ட நாளில் குறிப்புட்ட ஊரில் மாலை நேரத்தில்
போய்ச் சேரக் கூடாது. கூடுமான வரையில் நாம் செல்லும்
ஊருக்குப் பகல் ஒரு மணிக்கெல்லாம் போய்ச் சேர்ந்து விட

வேண்டும். அப்பொழுது தான் அலைந்து பார்த்து நண்பர்களுடைய வீட்டைச் சேர்வதற்கு நமக்குச் சிரமமில்லாமலிருக்கும்.

அப்படி நம்முடைய நண்பர்கள் இல்லாவிட்டால், மற்ற இடங்களில் யாருடைய இல்லத்திலாவது ஓர் இரவு தங்கிவிட்டு மறுநாள் நம்முடைய ஊருக்கே திரும்புவதற்கு மிகவும் வசதியாக இருக்கும். இரவு காலங்களில் அன்னிய ஊரில் முதன் முதலில் போய்ச் சேர்வது அவ்வளவு நன்மையைத் தராது. ஒட்டலிலோ, சத்திரத்திலோ தங்குவதை விடக் கூடுமான வரையில் முன் கூட்டியே ஏற்பாடுகள் செய்து கொண்டு நண்பர்களின் வீட்டிலோ, அல்லது குடிசையிலோ நல்ல குடும்பமாகப் பார்த்து தங்குவது நலம். அப்படி ஓர் ஊரில் தங்குவதாக இருந்தால் கூடுமான வரையில் இரண்டு மூன்று நண்பர்கள் வீட்டு விலாசத்தை வாங்கிக் கொள்வது நலம். அவர்கள் மூலமாகவே ஒரு நல்ல வழி காட்டியையும் நமக்கு ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

அங்ஙனம் மைசூருக்கு இரயிலில் சென்ற அனுபவம் இது. "கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை" சரித்திர சம்பந்தமான இடங்களைக் கண்ணாரக் காணவேண்டும் என்று உள்ளத்திலே ஓர் ஆசை எழும். பல தடவைகளில் இனி பிரயாணமே செய்யக் கூடாது என்று நினைத்ததும் உண்டு. ஒவ்வோர் ஆண்டும், இந்த எண்ணங்கள் ரயிலிலே பிரயாணம் செய்யும் பொழுது தோன்றும். ஆனால் பிரயாணம் செய்து விட்டுப் பல ஊர்களிலிருந்து செய்திகளைச் சேகரித்துக் கொண்டு வந்த பின் மறுபடியும் எப்பொழுது பிரயாணம் செய்யும் பாக்கியம் கிடைக்கும் என்று ஏங்குவேன். ஆனால் வண்டியில் உட்கார்ந்த பின், "ஏண்டா வந்தோம்!" என்றிருக்கும். ஆனால் மற்றவர் காணாதவைகளைக் காணவேண்டும். கேள்விப் படாதவைகளைக் கேட்க வேண்டும். ஏறாத இடங்களில் ஏற வேண்டும். மின்னலைப் பிடிக்க வேண்டும். சந்திர மண்டலத்தில் வாழ வேண்டும்" என்பது

மானிடனின் விருப்பம்—அல்லவா? எனக்கும் அந்த விருப்பம் சிறு வயது முதல் சிறிது சிறிதாக வளர ஆரம்பித்தது. நல்ல கரிய இருளில் வண்டி ஓடிக் கொண்டே இருந்தது. எப்பொழுதும் வண்டியில் முன்னிரவில் நான் தூங்கி விடுவதுண்டு. அதாவது இரவு ஒன்பது - பத்து மணிக்குத் தூங்கி விட்டு பிறகு இரவு இரண்டு மணி முதல் காலை ஐந்து மணி வரையில் வண்டியிலிருக்கும் எல்லோருடைய சாமான்களையும் பார்த்துக் கொள்ளுவேன். ஒவ்வொரு ஸ்டேஷனிலும் யாராவது இறங்க வேண்டியதாக இருந்தால், அவர்களை எழுப்புவதுண்டு. ஏனென்றால் இரயில் பிரயாணத்தில் சாதாரணமாய் இரவு ஒரு மணி வரையில் விழித்திருந்து, இரவு இரண்டு மணிக்கு மேல் எல்லோரும் தூங்கிவிடுவதை நான் இந்த முப்பத்தைந்தாண்டுகளாகப் பார்த்த அனுபவம். மேலும், "இரயில் திருடர்கள் ரயிலில் திருட வந்தால், இரவு இரண்டு மணி முதல் காலை நான்கு மணி வரையில் தான் திருடுவார்கள்" என்பது என் அனுபவத்தில் கண்ட உண்மை.

அன்று மைசூருக்குப் பிரயாணம் செய்த போது ஓர் அனுபவம் ஏற்பட்டது. சரியாக காலையில் குறித்த நேரத்தில் சென்னையிலிருந்து — பெங்களூர் போய்ச் சேர வேண்டிய வண்டி ஒரு மணி நேரம் கழித்து பெங்களூர் போய்ச் சேர்ந்தது. உடனே நான் கூலிக்காரனிடம் என் சாமான்களைத் துரிதமாய் எடுக்கச் சொன்னேன். "எல்லி ஒகுத்திரி" என்று அந்தக் கூலிக்காரன் கேட்டான். என்ன சொல்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கும் பொழுதே அவன், "கிதர் ஜாத் தே சாப்" (எங்கே போகிறீர்கள்) என்று கேட்டான். எனக்கும் கொஞ்சம் இந்துஸ்தானி தெரியும். அதை வைத்துக் கொண்டு, "மை மைசூருக்கு ஜாதா ஹூம்" (நான் மைசூருக்குப் போகிறேன்) என்று கூறினேன். அவன் உடனே "அரே! அல்லா—காடி நை. தஸ் கண்டே மே ஏக் காடி ஐ." (அட கடவுளே! வண்டி கிடையாது. பத்து மணிக்குத் தான் ஒரு வண்டி இருக்கிறது.) என்று கூறினான். தமிழ்ப் பேச்சே காதில

விழாத நிலையில் இருந்த எனக்கு ஒரு கூட்டத்தார் தமிழ் பேசுவதைக் காண மிகவும் ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவு மிருந்தது. எனக்கே தெரியாமல் என் உள்ளம் என்னை அவர்களிடம் இழுத்துச் சென்றது. "மன்னிக்க வேண்டும், நீங்கள் எங்கே போகிறீர்கள்" என்று அவரைக் கேட்டேன். "நாங்கள் மைசூருக்குப் போகிறோம்" என்று பதில் கூறினார்கள். சரி நல்ல துணை என்று நினைத்துக் கொண்டேன். அவர்களும் சென்னை வாசிகள் என்றும், ஏதோ வேலையின் நிமித்தம் முப்பது ஆண்டுகளாக மைசூரில் வாழ்கின்றனர் என்றும் கூறினார்கள். என் சாமான்களை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு ஸ்டேஷன் அதிகாரியைக் காணச் சென்றேன். "ஐயா! ஒழுங்காக நான் வந்த வண்டி வந்திருந்தால், நான் சரியாகப் பகல் பன்னிரண்டு மணிக்கு மைசூர் போயிருப்பேன். எனக்குக் கன்னடமும் தெரியாது. இந்த அரை நாள் நான் மைசூரில் பார்க்க வேண்டுமென்று போட்ட திட்டங்கள் எல்லாம் தவறி விட்டன. எல்லாம் சென்னையிலிருந்து வந்த வண்டியால் ஏற்பட்டது. நான் வந்த ரயில் வண்டி தாமதமாக வந்த காரணத்தால், பெங்களூரிலிருந்து மைசூருக்குப் போகும் வண்டி எப்பொழுதும் போலவே போய்விட்டது. இவ்விதம் வண்டிகள் காலம் கழித்து வருவதற்கு என்ன காரணம்? குற்றம் யாருடையது?" என்று மேலே மேலே கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனேன்.

"நாங்கள் என்ன செய்ய முடியும். அப்படியும் சுமார் பத்து நிமிஷங்கள் மைசூர் வண்டியை நிறுத்தினோம். ஆனால் உங்கள் வண்டி சுமார் அரை மணி நேரம் கழித்து வந்ததால், மைசூர் வண்டியைப் போக உத்தரவிட்டோம். வண்டிகள் தாமதமாகி வருவதற்குப் பொது மக்கள் தான் காரணம். இயந்திரங்கள் எல்லாம் பழையனவாய் இருப்பதாலும், ஒன்றுக்குப் பத்தாகக் கூட்டம் அதிகமாகப் பிரயாணம் செய்வதாலும், ஒருவருக்கு வேண்டிய சாமான்களை மாத்திரம் எடுத்துக் கொள்ளாமல் இருபது பேர்களுக்கு வேண்டும் அளவுக்குச் சாமான்களை, ஒருவரே கொண்டு

போவதாலும், அப்படி எடுத்துச் செல்லும் நபர், அவைகளை நிதானமாக எடுத்துக்கொண்டு ஏறுவதாலும், இறங்குவதாலும் ஒவ்வொரு ஸ்டேஷனில் ஒரு நிமிஷம் வண்டி தாமதமானால், அந்த வண்டி முப்பதாவது ஸ்டேஷனுக்கு வரும் பொழுது, முப்பது நிமிஷங்கள் தாமதமாகத் தானே வர நேரிடுகிறது. அப்படி ஏற்படும் கால தாமதத்தைச் சற்று வேகமாக ஓட்டிச் சரிப்படுத்தலாமென்றாலோ, தற்காலத்தில் இஞ்ஜின் டிரைவர்கள் கண்ணை மூடிக்கொண்டு அஜாக்கிரதையாகவும், வேகமாகவும்ஓட்ட முடியாது. ஏனென்றால் திடீரென்று தண்டவாளங்கள். வெள்ளத்தால் பறந்து போயிருக்கும். எனவே மிகவும் நிதானமாகவும், ஜாக்கிரதையாகவும் ஓட்ட வேண்டி இருக்கிறது." என்று மிகவும் தெளிவாக விளக்கினார். பிறகு என்ன செய்வதென்று தெரியாமல் அவருக்கு வணக்கம் செய்துவிட்டு, அன்று காலை சுமார் பத்துமணி வண்டியில் நானும், அந்த மைசூர்க் குடும்பத்தாரும் பிரயாணம் செய்தோம். வண்டி போக, ஆரம்பித்தது தான் தாமதம், எங்கிருந்தோ ஒரு பாட்டுக் குரல் கேட்டது. தமிழ்ப் பாட்டைக் கேட்டதும் நானும், இன்னும் பலரும் அப் பக்கத்தைப் பார்த்தோம். ஒரு பிச்சைக்காரக் குடும்பம் முதலில் தமிழ்ப் பாட்டைப் பாடியது. பிறகு ஒரு தெலுங்கு, ஒரு கன்னடம், ஒரு இந்துஸ்தானி பாட்டுகளைப் பாடியது. நான்கு மொழிக்காரர்களையும் வசீகரப்படுத்துவதற்கு இதுவும் ஒரு வியாபாரத் தந்திரம்" என்று என்னுடன் வந்தவரிடம் சொன்னேன். அவரும் ஆமாம் என்று சொல்லிச் சிரித்தார்.

வண்டியும் அடுத்த ஸ்டேஷனைப் போய் அடைந்தது. திடீரென்று ஒருவன், "கிருஷ்ணவேணி—கிருஷ்ணவேணி" என்று கூவிக்கொண்டே வந்தான். நானும், "பாவம்! யாரையோ தேடுகிறான்" என்று கூறினேன். அதற்கு என் நண்பர், "அவன் யாரையும் கூப்பிடவில்லை. அவன் சொல்வது கிருஷ்ணவேணி அன்று, "கிச்சிலி அண்ணு"என்று கூறுகிறான். அப்படி என்றால், "சாத்துக்குடி" என அர்த்தம்"

என்று கூறினர். இன்னும் சற்று நேரம் கழிந்தபின் யாரோ யாரையோ திட்டுவது போல், 'சீ பெண்ணு—சீ—பெண்ணு' என்று கூறும் குரல் காதில் விழுந்தது. அதைப் பற்றியும் அவர்களிடம் கேட்டேன்.

''சீசீ''என்று யாரையும் திட்டவில்லை. ''கொய்யாப்பழம்'' விற்பனை செய்கிறான்!'' என்று கூறினர் அவர். ''அட கடவுளே ஒரு மொழியில் சொல்லும் சொற்கள், மற்ற மொழியில் திட்டுவதைப் போலவும், பரிகாசம் செய்வதைப் போலவும் தோற்றமளிக்கின்றனவே என்று நினைத்தேன். ''கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு'' என்று கூறுகிறார் களே அது என் அனுபவத்தில் முற்றிலும் உண்மையாக ஆகி விட்டது, என நினைத்துக்கொண்டேன். பல மொழிகளைச் சிறிதளவேனும் கற்றிருந்தாலொழிய நாம் அனுபவசாலிகள் என்று சொல்லிக்கொள்வது இயலாது. மேலும் ''மொழி வித்தியாசத்தால்தான், இன வேற்றுமையும், மதவேற்றுமை யும், நாடுகளோடு நாடுகளிடையே பகையும் பலவித மாற்றங் களும் உண்டாகின்றன.'' என்று காந்தி கூறியது உண்மையே. அடுத்த ஸ்டேஷனில் ஒருவன் ''யானைமூக்கு—யானைமூக்கு'' என்று விற்றுக்கொண்டிருந்தான். ''இது என்ன? யானை மூக்கு—யானை மூக்கு'' என்று கூவுகிறானே என்று கேட்டேன். அது ''ஆணிமூர்'' என்று கூவுகிறான். ''ஆணிமூர்'' என்பது உங்களுக்கு மொழி தெரியாததாலும், கன்னடம் தமிழி லிருந்து பிறந்ததாலும், அவன் கூவும் சொற்களின் ''ஒலி'' உமக்கு, ''யானைமூக்கு'' என்று கேட்கிறது. அவன் கூறுவது, ''ஆணிமூர்—ஆணிமூர்'' என்கிறான். ''அவன் வைத்திருக்கும் பொருள்கள் எல்லாம் ''ஒரணாவுக்கு மூன்று'' வீதம் கிடைக்கும் என்கிறான்'', என்று விளக்கினர் அவர்.

''ஓ'' சென்னையிலே பழைய காலத்தில் யுத்தத்திற்கு முன்னால் எதை எடுத்தாலும் ''ஒன்றரையணா, இரண்டணா'' என்று விற்பனை செய்வார்களே அதைப் போல இதுவென்று நினைத்துக்கொண்டேன். அங்கேயே வண்டி சற்றுநேரம் நின்றது. அதற்குள் ஒரு கூடையோடு மற்றொருவன்

வேகமாக நடந்து கொண்டே, ''தல்—நோவ்—தல் நோவ்'' என்று கூறிக்கொண்டே போனான்.

''இது என்னப்பா! யாருக்குத் தலைவலி பாவம்! யாரிடமாவது தைலமிருந்தால் கொடுங்கள்'' என்று கூறினேன். ஏனென்றால், அந்த மொழி எனக்கு முற்றிலும் தெரியாதபடியால் எனக்கென்னவோ மிகவும் வேடிக்கையாக இருந்தது. ''தல் நோவ்'' அல்ல அது,''தாளவோ''வென்றால், ''தாழம்பூ'' என்று கூறுகிறான், என்றார் மைசூர்காரரர். பிறகு நான் அவனைக் கூப்பிட்டு ''என்னப்பா இப்படி ஏன் கன்னடத்தைக் கொலை செய்கிறாய். சென்னையில் தான் சிலர் தமிழைக் கொலை செய்கிறார்கள் என்றால், நீங்கள் கன்னடத்தைக் கொலை செய்கிறீர்கள். ஒவ்வோர் ஊரிலும் ஒரு சிலரால் அந்தந்தத் தாய்மொழிக் கொலைச் செய்யப்படுகிறதே'' என்று கூறி வருந்தினேன்.

''இந்து முஸ்லீம் ஏக்கே' என்ற முறையில் தென்னிந்தியாவை ஆண்டு பெருமை யடைந்தவன் திப்பு சுல்தான் அல்லவா? ஆகையால் அவருடைய நாடாக ஒரு காலத்தில் மைசூர் இருந்தபடியால் அங்கே இந்துக்கள் யார்? என்றும் கிருஸ்தவர்கள் யார்? என்றும் முகம்மதியர்கள் யார்? என்றும் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் எல்லோரும் இந்துஸ்தானிதான் பேசிக் கொள்கிறார்கள். முகம்மதியர்களும் கன்னடம் பேசிக் கொள்ளுகிறார்கள்.

மைசூரில் பார்க்க வேண்டியதைப் பார்த்தபின் ஆனைமலைக்குப் போக வேண்டுமென்று திரு. ஆர். ஆனந்தராஜ் அவர்கள் எனக்குக் கோவையிலிருந்து ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார். ஆகவே, நான் மைசூரிலிருந்து—உதகை—கோவை—பொள்ளாச்சி வழியாக ஆனைமலைக்குப் புறப்பட்டேன்.

பொள்ளாச்சியிலிருந்து, காட்டு வழியாக மலையைச் சுற்றிச் சுற்றிச் செல்லும் செங்குத்தான மலைப்பாதையில் பஸ் போனது வழியில் இரண்டு இடங்களில் பஸ்ஸை

நிறுத்தினார்கள். வழிப் பாதை எல்லாம் பிரயாணிகளின் வாந்தியே நிறைந்திருந்தது. பஸ் மேலே போகப் போக எனக்கு ஒருவித ஐயம் உண்டானது. காரணம், இடமோ புதிய இடம், நேரமோ மாலை நேரம் என் வாழ்க்கையிலும், என் பயணத்திலும் இதுதான் முதல் தடவையாக மாலை நேரத்தில் பிரயாணம் செய்வது. ஏனென்றால் எங்குச் சென்றாலும், காலையில் முதல் பஸ்ஸில் பிரயாணத்தைத் தொடங்கி விடுவேன். போகுமிடத்தையும் சுமார் பகல் ஒருமணிக்குள் அடைவதற்கு வேண்டிய ஏற்பாடுகளுடன் புறப்படுவேன். ஏனென்றால் மாலை நேரங்களில் அவ்வூர் களுக்குப் போய்ச் சேர்ந்து, இருளில் கஷ்டப்படமாட்டேன். ஆனால், எங்குச் சென்றாலும் எனக்குக் கடவுள் துணை உண்டு. ஆனைமலை—வால்பாறை போய்ச் சேர்ந்ததும் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி, நேராகத் தபால் நிலையத்திற்குச் சென்று, கடிதத்தின் விலாசத்தைக் காட்டி எங்கே, எப்படிச் செல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டு நடக்க ஆரம் பித்தேன். எங்குச் சென்றாலும் இப்படிச் செய்வதுண்டு. குறிப்பிட்ட இல்லமும் கிடைத்தது. உள்ளம் திகிலும் அடைந்தது. வீடு பூட்டப்பட்டிருந்தது. அக்கம் பக்கத்தில் இருப்பவர்களைக் கேட்டதற்கு, "அவர்கள் திருமணத்திற் காகத் திருநெல்வேலிக்கு இன்றுதான் சென்றார்கள். அவர்கள் அடுத்த வாரம் தான் வருவார்கள்" என்று அவர்கள் கூறிய பதிலை கேட்டதும், உள்ளம் உடைந்தேன். தேகமெல்லாம் வியர்த்தது. "இரவு தங்க இடம் கிடைத்தால் போதும்" என்று கூறுவதற்கு முன் எனக்குத் தகவல் கொடுத்தவர் உள்ளே போய்விட்டார். கால்கள் தடுமாறின. பஸ் நிலையத்தில், "பஸ் மறுநாள் காலையில் தான் போகும்" என்று கூறினார்கள். உடனே மற்றொரு நண்பரின் விலாசத்தை, மற்றொரு கடிதத்தில் எடுத்து வாசித்தேன்.

இரை தேடிய பறவைகள், தங்கள் கூடுகளில் உள்ள, குஞ்சுகளைத் தேடி வேகமாய் பறப்பதையும் அதே நேரத்தில் அவற்றைப் போலவே தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்து வீடு திரும்புவர்களின் நடைவேகத்தையும் கண்டேன்.

அவர்களில் ஒருவரை நாடி, மற்றொரு விலாசத்தைக் காட்டினேன்.

"அங்கே தான் நானும் போகிறேன். ஆனால் அவர்கள் வீடு சிறியது. அவர்கள் மிகவும் ஏழை. ஆனால் அன்புள்ள குடும்பம். என்னுடன் வாருங்கள் நானும் அவர் இல்லத்தைக் கடந்து தான் போக வேண்டும்! என்று அழைத்தார். தேயிலைத் தோட்டங்களைக் கடந்து சிறியதொரு குன்றையும் கடந்து மௌனமாகவே நடந்து சென்றேன். என்னை அழைத்துச் சென்றவர் அடிக்கடி என் முகத்தைக் கவனித்தார். அவர் எதை, இப்படிக் கவனிக்கிறார் என்று எனக்கே ஆச்சரியமாக இருந்தது. நான் போகவேண்டிய இல்லம் வந்ததும், என்னை வெளியில் நிறுத்திவிட்டு, அவர் முதலில் உள்ளே சென்று, சிறிது நேரம் கழித்து வீட்டுக்கு உரியவருடன் வெளியில் வந்தார். அவருக்கு, "வணக்கம்" என்றேன்.

"வாங்கோ! இது உங்களுடைய வீடன்றோ! ஏன் வெளியில் நிற்க வேண்டும்" என்று அவர் அழைத்தார். அந்த அழைப்பே எனக்குப் பலம் தந்ததைப் போல் இருந்தது. அவர் என் மூட்டைகளை எல்லாம் வாங்கி, வைத்துக் கொண்டார். எனக்காக ஒரு சிறிய மேஜையையும், சுத்தம் செய்து கொடுத்தார். என் இல்லத்தில் இருந்ததைப் போல் அவர் இல்லத்தில் இருந்தேன். எனக்கோ உடனே காப்பி கொடுக்கப்பட்டது. குளிக்க வெந்நீரும் கொடுத்தார். அன்றிரவு நன்றாகத் தூங்கினேன். அவர் வீடோ சிறியது. ஆனால் அவர் உள்ளமோ கடலைப் போன்றது. அங்கு ஒரு பக்கம் சமையல், மற்றொரு பக்கம் படுக்குமிடம். வேறொரு பக்கம் மாடும், கன்றும் கட்டப்பட்டு இருக்கின்றன. இவ்வளவு இட நெருக்கடியிருந்தாலும் எனக்குப் படுக்கக் கட்டிலைக் கொடுத்து விட்டு, அவர் மரப்பலகைகளைத் தரையில் விரித்து படுத்துக் கொண்டார். நான் படுத்திருக்கும் கட்டிலின் காலில்தான் கன்றைக் கட்டி வைத்திருந்தார். இரவில் பசுவும் கன்றும் மல ஜலம் கழிக்கும் ஓசையும் அசை போடும்

ஓசையும் நன்ருகக் கேட்கும். நான் படுக்கும்முன் நல்ல பசும்பால் கொடுத்தார். "வீடு சிறியது. பிரசவத்திற்காக என் மனைவியும் தாயகம் சென்றிருக்கிருள். குற்றம் குறைகள் இருந்தால் மன்னிக்கவும்." என்று கூறிய சொற்களில் அவருடைய அன்பான உள்ளம் விளக்கென ஒளி வீசியது. வெளித் தோற்றத்தில் அவர் ஏழையாக இருந்தாரே அன்றி, அன்பில் அவர் பெரிய பணக்காரர் என்றுதான் சொல்ல வேண்டும்!

மறுநாள் காலையில் சுமார் நான்கு மணிக்கெல்லாம் எழுந்து நானே தண்ணீர் எடுத்து குடம் குடமாக எல்லாப் பாத்திரங்களிலும் நிரப்பினேன். பால் பாத்திரங்கள், இன்னும் சில சிறிய பாத்திரங்கள் எல்லாவற்றையும் துலக்கினேன். தினமும் காலையில் திரு. *A.* அலேக்சியஸ் என்பவருடைய நண்பர் திரு. இராசகோபாலன் சுமார் அரை பர்லாங்கு தூரத்திலிருந்து எனக்கு இட்டலிகள் கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான், ஏழு மணிக்கு வேலைக்குப் போவார். அன்றிரவு நானும் திரு. இராசகோபாலனும் அந்த வீட்டாரும் அவருக்கு என்னை அறிமுகப்படுத்திய நண்பரும் எல்லோரும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது தான், என்னுடைய தோற்றத்தை வழி நண்பர் வழியில் திரும்பித் திரும்பிப் பார்த்ததன் காரணத்தைச் சொன்ஞர்.

"உங்களுடைய நடையும் முகமும், திகிலும் சோர்வு அடைந்து கவலையுற்றிருந்தன. அன்றிரவு எங்குத்தங்குவ தென்ற கவலையே உங்கள் உள்ளத்தில் இருந்தது. முகத்தில் பசி வாட்டமிருந்தது. எங்கள் வீடு உங்களுக்குப் பிடிக்குமா? என்று நாங்கள் முதலில் சந்தேகித்தோம். ஆஞல் நீங்கள் நன்ருகப் பழகிவிட்டீர்கள்!" என்று கூறிஞர்.

அன்றிரவு கூடிப் பேசும் பொழுது ஒரு பணக்கார நண்பர் தங்கள் வீட்டில் தங்க என்னைக் கூப்பிட்டார். ஆஞல் இந்த ஏழையின் இல்லத்தையும் அவருடைய அன்பையும் புறக்கணித்துக் கொண்டு, போக எனக்கு மனம்

வரவில்லை. பண்டைத் தமிழனின் பண்பாடு அவரிடம் இருப்பதைக் கண்டு களித்தேன்.

மறுநாள் நண்பர் என் துணைக்கு அனுப்பிய வழி காட்டியுடன் பல காடுகளுக்குப் பிரயாணம் செய்தேன். ஒவ்வோரிடத்திற்கும், ஒவ்வொரு செய்திக்கும், அந்தந்த ஊர்களில் தனித்தனியாக ஒவ்வொரு வழி காட்டியும் சமர்த்தனாக இல்லாவிட்டால், நாம் எடுத்துக் கொண்ட காரியம் முற்றிலும் தோல்வி அடையும் என்பதில் சந்தேகமே இல்லை. வழி காட்டி கெட்டிக்காரனாக இல்லாவிட்டால் பணமும், நேரமும் வீணாவது மட்டுமல்லாமல், காட்டில் நமக்கு ஆபத்தும் ஏற்படும். காடுகளில் எவ்விடங்களில் "உளை" பள்ளங்கள் இருக்கின்றன என்று தெரியாது. சில சமயங்களில் பாறைகளின் மேல் கால் வைத்தோ, அல்லது பாறையில் நான்கு ஐந்து பர்லாங்கு நடந்தோ செல்ல வேண்டிய நிலை ஏற்பாடும். அந்தச் சமயங்களில் நாம் சறுக்கி விழ நேரிடும். இவ்விதமான அனுபவக் குறைவால், அநேக இடங்களில் புளி மூட்டையைப் போல் விழுந்துமிருக்கிறேன். மேலும், மழைக் காலங்களில் வண்டுகளும், கரடிகளும், மற்ற பூச்சிகளும், அட்டைகளும் அதிகமாயிருக்கும். அந்த நிலைமையில் காட்டில் பிரயாணம் செய்வது ஆபத்தானது. வழிகாட்டி சரியானவனாக இல்லாவிட்டால், வழி தெரியாமல் பல மைல்கள் காட்டினுள் சென்று, சில சமயங்களில் இரவில் மரத்தின் மேல் தூங்கவேண்டியும் ஏற்படும். காடர்களின் மொழி தெரிந்தவனாகவும், ஆபத்துக் காலங்களில், கைவிடாதவனாகவும், புத்திசாலித் தைரியமும், ஊக்கமும் உள்ளவனாகவும் நிதானமும், புத்திக் கூர்மையும், காட்டு விஷயத்தில் அனுபவமுமுள்ளவனாகவும் பசி, தாகம், முதலியவைகளைத் தாங்கக் கூடியவனாகவும் இருக்கும்—வழி காட்டியைப்‘பார்த்துத் தேர்ந்தெடுத்தால் நாம் பிரயாணம் செய்வதில் பாதி வேலை முடிந்தது என்று நிச்சயம் செய்து கொள்ளலாம். வழி காட்டி இல்லாமலும் காடர்களின் உதவி இல்லாமலும், காட்டில் யாரும் ஓர் அடி கூட எடுத்து வைப்பது ம்கவும் அபாயம். வழி காட்டிக்கும் நமக்கும்

காடர்களின் மொழியைத் தெரிந்து கொள்ளவோ அல்லது அவர்களின் கருத்தைப் புரிந்து கொள்ளவோ போதுமான அறிவு இல்லாவிட்டால் ஆதிவாசிகளிடம் மட்டுமின்றிக் காட்டிலும் ஆபத்துகள் உண்டாகும். ஆதிவாசிகளின் மொழி தெரியாமலிருந்தால், ஊமையனைப் போல்தான் கஷ்டங்கள் அனுபவிக்க வேண்டும். சில சமயங்களில் சில காடுகளிலிருக்கும் மக்கள், இரவில் விளக்கு வைப்பதில்லை, விளக்கு ஏற்றுவது அவர்கள் குல தெய்வத்திற்குப் பிடிக்காதாம். அந்த நிலையில் மொழி தெரியாமல் காட்டிலிருக்கும் எனக்குத்தான் அந்தக்கஷ்டங்கள் தெரியும். ஓர் ஊமையன் இருக்கும் இருள் சூழ்ந்த அறையில், பக்கத்திலிருக்கும் தாய் தனக்கு வாய் இருந்தும் இருளில், "வீட்டுக்குள் திருடன் வந்திருக்கிறான்" என்பதை எங்ஙனம் விளக்க முடியும். பண்டை மனிதன் அன்று இருளில் கஷ்டப்பட்டதைப்போல், இன்று இருளில் காட்டில் தங்கும் பொழுதுதான் அந்த அனுபவக் கஷ்டங்கள் தெரிகின்றன. எனக்கு இன்று அவர்கள் மொழி தெரியாததால் சில இடங்களில் ஊமையனைப் போல் இருந்தேன். ஆனால் மொழி இன்மையால் அன்று எல்லோரும் ஊமையனைப் போல்தான் இருந்திருக்க வேண்டும்.

இன்று நான் தவறிச் சற்றுக் காட்டில் டார்ச்சை உபயோகப் படுத்தினால், உடனே வேண்டாம் என்று சொல்லுவார்கள். ஆனால் எனக்கு வேண்டியதை நான் இருளில் எப்படிச் சைகை காட்டித் தெரிவிப்பது? அந்த நிலையை நீங்களே கற்பனை செய்து பார்க்கவும். இதைப் போலவே பண்டை மனிதனும் அனுபவித்திருப்பான். அக்கால மனிதன் கொடிய காட்டுப் பிராணிகள் வருவதைக் கண்டு, இருளில் சைகை காட்ட இயலாதவனாய் அதைப் போலவே கூவித் தன் இன மக்களுக்குத் தெரியப்படுத்தியிருக்க வேண்டும். ஏனென்றால், இன்று காட்டில் வாழும் மக்கள், தாங்கள் காணும் மிருகங்களைப் போல் கூவவும், ஊளையிடவும், உறுமிச்சத்தம் செய்யவும் பழகியிருக்கின்றனர். இன்றும் குறவனும் குருவிக்காரனும் வலையைக் கட்டிவிட்டு, மறைந்து

நின்று பெண் நரியைப் போல், ''ஊளை'' இடுவர். அந்போது ஆண் நரிகள், ஏமாந்து அவனுடைய வலையில் சிக்கிக் கொள் வதைக் கண் கூடாகக் காண்கின்ரும்.

இன்று காட்டில் சில பொருள்களுக்கு விளக்கம் கேட்க வேண்டியிருந்தால் முதலில் சைகை காட்டுவேன். பிறகு வாயால் கத்துவேன். அப்படியும் அவர்களுக்கு விளங்கா விட்டால், மண்ணில் வரைந்து காட்டி அதன் வார்த்தை யைக் கேட்டு எழுதிக் கொள்ளுவேன், இவ்விதமாக அவர் மொழிகளைச் சேகரிக்கிறேன். ஆனல் பண்டைக் காலங் களில் சில பொருள்களுக்கு பெயர் தெரியாமல் ஒருவருக் கொருவர் வரைந்துதான் காட்டிக் கொண்டார்கள். அப் பழக்கத்தின் பேரில் ஊமைகள் சைகைகளையும், வரைவதை யும் வெகு சீக்கிரத்தில் இன்று விளங்கிக் கொள்ளுகின்றனர். இப்பண்டைக்காலப் பழக்கத்தால்தான் ஆதிவாசிகள் பண்டையில் சில கொடிய மிருகத்தின் உருவங்களை இப் பாறையில் செதுக்கி அவற்றின் அருகில் அம்பு வடிவத்தை வரைந்து வைத்தார்கள். ஏனென்றல், மற்றவர்கள் அந்த மிருகம் சாந்தமானது என்று நினைத்து அருகில் போகாமல் இருக்க வேண்டும், இதைக் கண்டதும் அம்பு எய்ய வேண்டு மென்று விளக்கத்தான்.

அங்ஙனம் பாறையில் வரையப் பெற்ற சித்திரங்கள் இன்றும் சாத்பூரா மலைச்சாரலில் இருக்கின்றன அங்குக் ''காங்காரு'' மிருகத்தின் சித்திரமும் ஒன்று இருப்பதால், இது இந்தியாவில் இருந்தது என்றும், எக்காரணத்தைக் கொண்டோ சிதறுண்டு ஆஸ்திரேலியா சென்றது என்றும் சரித்திரம் கூறுகின்றது. இப்பழக்கத்திலிருந்துதான் சித்திர மும் மொழியும் வளர்ந்தன. சாத்பூரா மலையில் வாழும் மக்களைக் காணச் சென்ற பொழுது ஒரு வழி காட்டி சமர்த்த ஞகக் கிடைத்தான். அவன் எனக்கு அவ்விடங்கள் எல்லாவற்றையும் காட்டவும், பத்துமைல் நடக்க வேண்டிய இடத்தை மூன்று மைல் குறுக்கு வழியில் நடக்கவும் ஒடும் லாரியையும், காரையும் மாட்டு வண்டியையும் நிறுத்தி

அவற்றில் வைத்திருக்கும் மூட்டைகளின்மேலும், வைக்கோல்களின் மேலும் படுத்தும் உட்கார்ந்தும் போக வேண்டிய இடங்களுக்குச் சீக்கிரமாகச் செல்லவும் உதவியாக இருந்தான். பயணத்தில் மட்டும், காலத்தையும், நேரத்தையும் வீணுக்காமல் போகுமிடங்களுக்குச் சீக்கிரமாகச் செல்வதற்கு முயல வேண்டும்.

காலை மூன்று மணிக்கு எழுந்து நடக்கவோ ஓடவோ நாம் பின் வாங்காமலிருக்க வேண்டும். அதற்குத் தகுந்த வனுகவே வழி காட்டியைத் தயார் செய்ய வேண்டும். அந்தந்த ஊருக்கு அருகில் பல்லாண்டுகளாக வாழும் ஒருவனையே வழி காட்டியாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். வழிகாட்டி இல்லாமல் வழியில் பார்ப்பவர்களை எல்லாம் கேட்டுக்கொண்டே போகலாம் என்பது அவ்வளவு சிறந்ததன்று. அதனுல் வீண் கால தாமதமாகும். ஆனுல் வழிகாட்டி சும்மா வருவானு?

காட்டில் வாழும் மக்களைக் காண நாம் வழிகாட்டியுடன் காட்டில் பிரயாணம் செய்ய வேண்டும். நல்லகாலமாக, நான் போய்ச் சேரும் கிராமத்தில் அன்று சந்தைக் கூடும் நாளாக இருப்பின் அந்தச் சந்தைக்குக் காட்டில் வாழும் ஆதிவாசிகளில் சில ஆண்கள் வருவார்கள். அவர்களுடன் சேர்ந்து கொண்டு போவேன். இல்லாவிட்டால் வழிகாட்டி தான் எனக்குக் குலதெய்வம். காட்டினுள் நுழைவதற்கு முன் கடவுளைப் பிரார்த்தனை செய்து கொள்ளுவேன். ஆனைமலைப் பிராந்தியத்தில் ஒரு சமயம் காட்டினுள் பிரயாணம் செய்யும் ஒற்றையடிப் பாதையில் இரண்டு பக்கங்களிலிருக்கும் புதர்களின் இலைகளை அரிவாளால் கொய்து பாதையில் போட்டுக் கொண்டே போவோம். நடக்கும்போது மேலும், கீழும் பக்கங்களிலும் கவனித்துக் கொண்டேதான் நடக்க வேண்டும். நம்முடைய கால் ஓசைகள் தவிர மற்ற ஓசைகள் ஏதாவது கேட்டதும் உடனே புதர்களின் கீழே உட்காருவோம். ஏனென்றுல், நாம் நின்று கொண்டிருந்தால், ஏதாவது மிருகம் வருவது செடிகளின் இலைப் புதர்கள் மறைப்பினுல் தெரியாது.

ஆகையால் உட்கார்ந்து கவனித்தால் செடிகளின் அடியில் புதர்களும் இலைகளும் இல்லாமல் செடியின் அடித் தண்டுகள் மட்டும் தெரிவதால் வசதியாக என்ன வருகிறது என்று நன்ருகப் பார்க்கலாம். மேலும், ஒற்றையடிப் பாதையில் தழைகளை வெட்டிப் போடுவதால் நமக்குப் பின்னுல் எந்த மிருகமும் நம்மைத் தொடர்ந்து வராது. காரணம் ஏதோ புதிய தழைகளாக இருக்கின்றனவென்றும், அத்தழைகளில் மனித வாடை அடிப்பதால், தங்களுக்கு ஏதோ ஆபத்து இருக்கின்றது—என்றும், தங்களுக்கு முன்னுல் ஏதோ ஒரு மிருகம் போயிருக்கிறது என்றும் நினைத்து அது நம்மைத் தொடர்ந்து அவ்வழியாக வராது.

இரண்டாவது, நாம் தேடிச் செல்லும் காடர்கள் சில சமயங்களில் ஏதாவது விசேஷத்திஞலோ, அக்காட்டில் வைசூரி போன்ற கொடிய வியாதிகள் பரவி இருப்பதாலோ அக்காட்டையே காலி செய்து அடுத்த காட்டுக்குச் சென் றிருப்பார்கள். அந்த நிலையில் நாம் வழி தவறி விடாமல் திரும்பி வருவதற்கும் அது நல்லதாகும். சில பாடிகளில் அவர்களது காட்டிலிருந்து வெளியில் பல இடங்களுக்குப் போகப் பல வழிகள் இருக்கும். எனவே அவர்கள் இல்லாத காலங்களில் அவர்களது பாடியிலிருந்து வெளிவர நம்முடைய தழையே அடையாள உதவியாக இருக்கும்.

# ஒற்றையடிப் பாதையில் மலைப்பாம்பு

ஆனைமலையில் நான் கவர்க்கல் காட்டில் யசோதரன் என்ற கெட்டிக்கார வழிகாட்டியுடன் போகும் பொழுது, காலையில் சுமார் பத்து மணி இருக்கும். சில இடங்களில் டார்ச்சு லைட் உபயோகப்படுத்த வேண்டிய அளவுக்குப் பெரிய காடாகவும் அடர்த்தியாகவும் இருந்தது. ஏதோ

அடி பாதாளத்தில் இறங்குவதைப் போல் ஓர் உணர்ச்சி தோன்றியது. அந்தக் காட்டில் நான், முன்னாலும் யசோதரன் பின்னாலும் ஒற்றையடிப் பாதையில் நடந்து கொண்டே இருந்தோம். காட்டின் இருளைக் கண்டதும் என் உள்ளத்திலும் ஒரு பயங்கர இருள் மூடிக் கொண்டது. நாங்கள் மௌனமாகவே நடந்து போனோம். நாங்கள் போகும் ஒற்றையடிப் பாதையில் குறுக்கே ஏதோ ஓர் அடி மரம் துண்டாக இருந்ததைக் கண்டேன். 'சரி' என்று அதைப் பிடித்துக் கொண்டு மறு பக்கத்தில் தாண்டலாம் என்று, என்னுடைய இடக்கையைத் தூக்கினேன். என் சைகையைக் கண்ட யசோதரன் திடீரென்று, "ஐயா மாரு! பாம்பு" என்று கத்தினான். அந்தக் குரலைக் கேட்டதும் கைகால்கள் எல்லாம் சிலையைப் போல் தூக்கியது. தூக்கியவாறே தரையில் பார்த்தேன். தரையில் பாம்பு இல்லை. "ஐயா மாரு! அதோ மரத்தில் பாருங்கள், தலையை கிளையில் வைத்துக் கொண்டு, வாலை அடியில் அடி மரம் போல் தொங்க விட்டிருக்கிறது. அதன் மேல் உங்கள் கைபட்டதும், உடனே அந்த மலைப்பாம்பு குறி தவறாமல் உங்கள் மேல் ஒரு பெரிய மலையைப் போல் விருந்திருக்கும். யானையின் கால்களைப் போல் இருக்கும் அந்த மலைப்பாம்பு உங்கள் மேல் விழும் வேகத்திலேயே உங்கள் உடலில் இருக்கும் எலும்புகள் உடைந்து விடும். அந்த மலைப் பாம்பின் மேல் மண்ணின் சேறு ஒட்டி இருப்பதால் அது நமக்கு அடிமரம் போல் தோற்ற மளிக்கிறது. ஒரு மிருகத்தை ஒரு மலைப்பாம்பு பிடித்ததும், உடனே அந்த மிருகத்தை நன்றாகத் தன்னுடைய உடலால் சுற்றும். அது சுற்றும் வேகத்தில் அந்த மிருகத்தின் உடம்பிலிருக்கும் எலும்புகள் எல்லாம் மளமள வென்று முறிந்து விடும். அந்த மிருகத்தின் எலும்புகள் உடைந்து அதற்கு உயிரும் போகும். பிறகு அந்த மிருகம் ஒரு புழுவைப் போல் ஆகும். அந்த நிலையில் அந்த மிருகத்தை விட்டு விட்டு மறுபடியும் தலைப் பகுதியிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகப் புழுவைப்போல் விழுங்கிக் கொண்டே வரும்.

ஒரு உடலை முழுவதும் ஒரு மலைப்பாம்பு விழுங்கிய பின், விழுங்கிய மலைப்பாம்பு சுமார் பத்துப் பதினைந்து நிமிஷங்கள் கழித்து, தன் வாலைச் சிறிது சிறிதாக அருகிலிருக்கும் ஒரு மரத்தின் மேல் செலுத்தும். பாம்பின் வால் ஒரு மரத்தின் கிளையைச் சுருட்டிப் பிடித்துக் கொள்ளும். அக் காட்சியைக் கண்டால், மலைப்பாம்பை யாரோ தலைகீழாகக் கட்டி வைத்தாற் போல் இருக்கும். சிறிது நேரம் கழித்து, மரத்தில் தொங்கும் அந்த மலைப்பாம்பு தன்னுடைய வாயைத் தரையில் பெரியதாகத் திறக்கும். அப்பொழுது அதன் உடலில் ஜீரணமாகாத விழுங்கப்பட்ட மிருகத்தின் எலும்புகள் எல்லாம் வெளியில் வந்து விழுந்து விடுமாம். எலும்புகளை வெளியில் கக்கிய மலைப்பாம்பு பிறகு தனக்குப் பிரியமானதொரு சேற்றுப் பாங்கான இடத்தில் படுத்துக் கொள்ளும். மலைப்பாம்புகள் சாதாரணமாய் ஆகார மில்லாமல் சுமார் இருபது இருபத்தைந்து மாதங்கள் (இரண்டு ஆண்டுகள்) ஜீவித்திருக்கும். மிருகத்தை விழுங்கிய அந்த மலைப்பாம்பு கக்கிய எலும்புகளைப் பார்த்தால் அவை எப்படி இருக்கும் தெரியுமா? சதையுடன் இருக்கும் ஒரு எலும்பை எடுத்து, கத்தியால் அந்த எலும்பின்மேல் ஒட்டி இருக்கும் சதையைச் சீவினுல் எப்படிச் சுத்தமாக இருக்குமோ அதைப் போல் இருக்கும்!'' என்று மிகவும் தெளிவாக எனக்கு விளக்கினுன் யசோதரன். தன்னந் தனிமையில் சற்றுத் தூரம் போய் நின்று கொண்டிருக்கும் ஒரு நபருக்கு நடுக்காட்டில் இவைகளைச் சொன்னுல் எப்படி இருக்கும். இவைகளை எல்லாம் சொல்லி விட்டு, ''ஐயா மாரு! மலைப்பாம்பு வாயைத் திறந்திருக்கிறது. போட்டோ எடுங்கோ!'' என்று கூறினுன்.

''சரி தான் போ!'' கை கால்கள் எல்லாம், ''டைப்'' அடிக்கின்றன. அது நம்மைப் போட்டோ எடுக்காமல் விட்டதே அதுவே போதும். எல்லாம் ஆண்டவன் செயல், வா! போகலாம்'' என்று அழைத்துக் கொண்டு நடந்தேன்.

தள்ளாடிக் கொண்டே நடந்தேன். மலைப் பாம்பைக் கண்ட பயம் இரண்டு இடங்களில் கால்கள் தடுமாறி விழுந்து விட்டேன்.

அவன் திரும்பிப் பார்த்து, "நான் இருக்கிறேன், எதற்கும் பயம் வேண்டாம். இருவருடைய குல தெய்வங்களும் நம்மைக் காக்கும். இங்குத் திருடர் பயமும் கிடையாது" என்று என்னை உற்சாகப் படுத்தினான். அவனுடைய வார்த்தையை நம்பி ஒற்றையடிப் பாதையில் சிந்தையுடனும் கூறிய காதுகளுடனும் கண்களுடனும் நடந்து செல்லும் பொழுது திடீரென காலடி ஓசை கேட்டது. உடனே கீழே உட்கார்ந்தோம்' புதர்களின் மறைவிலிருந்து என் வழி காட்டி "யார்?" என்று காட்டு மொழியில் கேட்டான். சிறிது நேரத்திற் கெல்லாம் புதரின் மறைவில் நின்று கொண்டிருக்கும் காடர் இனத்தைச் சேர்ந்த வாலிபன் ஒருவன் வெளியில் வந்தான். "ஐயா மாரு!" என்று கூறி எனக்கு வணக்கம் செய்தான். உடனே நான், "உங்களைக் காணத்தான் வருகிறேன். உங்களுடன் சாப்பிட வேண்டும் என்று எனக்கு ஆசை உண்டு. உங்கள் பாடியில் தங்கவும் உறங்கவும், உங்களிடம் பழகவும் தான் நான் வந்தேன். வா. என்று அழைத்தால், வருகிறேன். அடித்தால் போகிறேன்" என்று அந்தந் திகிலடைந்த உள்ளத்தோடு என்னையறியாமல் உருக்கமான வார்த்தைகளைக் கொட்டினேன். உடனே அவன் என் வழிகாட்டியைப் பார்த்து, "இந்த வழியாக ஏன் அழைத்து வந்தாய். யானைக் கூட்டங்கள் அதிகமாய் இருக்கின்றனவே! இது யானைகள் இன்பமாக இருக்கும் பௌர்ணமி நாளன்றோ. காட்டில் வாழும் எங்களுக்கே சற்றுச் சல சலப்புத் தட்டும் பொழுது இதைப் போலப் புதிய ஐயா மாரை, ஏன் அழைத்து வந்தாய். இந்த வழியில் தண்ணீரில் இறங்க வேண்டுமே, நீ இப்படி அழைத்து வரலாமா? நாங்கள் அந்த வழியில் பாலம் கட்டி இருக்கிறோம்." என்று கூறி வேறு வழியாக எங்களை அழைத்துச் சென்றான். காடர்கள் காட்டுச் செய்திகளைச் சொன்னால், உடனே அவற்றை நான் பொன் மொழிகளைப் போல்

எடுத்துக் கொள்ளுவேன். உடனே அவன் பின்னால் நடக்க ஆரம்பித்தோம். பாலம் என்று சொன்னதும் என் உள்ளத்தில் இஞ்ஜினீரியரைப் பற்றியும் கொல்லர்களைப் பற்றியும் பெருமையான எண்ணம் தோன்றியது. இவ்வளவு பெரிய காட்டில் கூடச் சிரமத்தைப் பாராமல் பாலம் கட்டியிருக்கிறார்களே என்று நினைத்தேன். இச் சிந்தனையுடன் போகும் பொழுது பாலத்தை அடைந்தோம். என் மனக் கோட்டையும் பெருமையும் பறந்தன இதுதான் பாலமா?'' என்று எனக்கே தெரியாதல் கூச்சலிட்டேன்.

''ஆமாம் ஐயா மாரு! இது நாங்கள் கட்டியது. தண்ணீர் அதிமாக வந்தால் காட்டு நார்களைக் கொண்டு, இரண்டு பக்கங்களிலும் மரத்தில் பாலத்தைக் கட்டி விடுவோம். வெள்ளம் அதிகமாக அதிகமாகப் பாலமும் உயரத்தில் மிதக்கும். அதன் மேல் தனித்தனியாக நடந்து செல்வோம் என்று கூறும்பொழுது அவர்கள் தாங்களே கட்டியவதைப் பற்றிக் கூறுவதில் எவ்வளவு பெருமைப் படுகிறார்கள் என்பதை, அவனுடைய மொழியின் உணர்ச்சியிலிருந்து தெரிந்து கொண்டேன். இப்பாலம் தண்ணீரில் மிதந்து உயர்கிறதாம்-என்பதைக் கேட்ட பொழுது பாம்பன் பாலம், மற்றும் நம்முடைய போர் வீரர்கள் கட்டும் பாலங்களை யெல்லாம் நினைத்துக் கொண்டேன். அந்தப் பாலத்தின் மேல் நடக்கும் பொழுது எனக்கு அச்சமாகத்தான் இருந்தது. பாலத்தின் பெயர், ''கொம்புப் பாலம்'' என்பது. காடர்களுக்குக் குலதெய்வத்தின் மீது மிகவும் நம்பிக்கை உண்டு.

காட்டைக் கடந்து செல்லும் பொழுது ஒரு சிறிது ஓசை கேட்டாலும் உடனே மரம் ஏறவும் ஓடவும் சிந்தனை செய்யக் கூடாது. ஒரு வினாடி நம்மை நாமே தைரியப் படுத்திக் கொண்டு, பதுங்கி மறைவதற்கே முயற்சி செய்ய வேண்டும். மறைவதற்கு மரம் இல்லா விட்டால் உடனே ஓடி வேறு எங்காவது மறைந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும். மேலும், ஒற்றையடிப் பாதையில் நடக்கும் பொழுது, கூடுமான வரையில் அப்பாதையை வெகுதூரம்

வரையில் பார்த்துக் கொண்டேதான் நடக்க வேண்டும். பைனுக்குலர் மூலம் அடிக்கடி பார்ப்பது நலம். ஒற்றையடிப் பாதையில் திடீரென்று பாறையை போல் வளர்ந்து இருப்பதோ, அடிமரம் வளர்ந்திருப்பதோ, அல்லது ஆல விழுது போல் விழுதுகள் வளர்ந்து தொங்குவதோ இருந்தால் சற்றுக் கவனித்து, நிதானித்துத்தான் நாம் அந்த வழியைக் கடந்து செல்ல வேண்டும். ஏனென்றால், ஒரு யானை தன்னுடைய தலையை மட்டும் அடிமரத்தில் மறைத்துக் கொண்டு, முதுகெல்லாம் ஒற்றையடிப் பாதையில் தெரியும்படி நின்று கொண்டிருக்கும். இந்த நிலையில் நாம் அருகில் வருவோம் என்று அது நினைத்துக் கொள்ளும். மேலும் அடிமரங்கள் என்று நினைத்து நாம் அருகில் சென்றால், அது மலைப் பாம்பாக இருக்கும்.

சில சமயங்களில் மலைப்பாம்பு ஒற்றையடிப் பாதையிலிருக்கும் மரத்தின் கிளையின் மேல் தன் தலையை வைத்துக் கொண்டு உடலை ஒற்றையடிப் பாதையில் எட்டைப் போல் வளைத்து மறுபடியும் வாலைத் தன் தலையின் அருகில் மரத்தில் வைத்துக் கொள்ளும். காட்டில் பிராணிகள் இரை தேடுவதற்காக இந்த ஒற்றையடிப் பாதையில் எட்டைப் போல் இருக்கும் மலைப்பாம்பின் உடலின் உள்ளே நுழைந்து தாண்டிப் போகும் பொழுது, உடனே மலைப்பாம்பு தன் தலையை ஒரு பக்கமாகவும், வாலை மற்றொரு பக்கமாகவும் இழுத்துச் சுருக்குப் போடுவதைப் போல் அந்த எட்டின் வளையத்தில் அகப்பட்ட பிராணியைச் சுருட்டிவிடும். இன்னும் சில இடங்களில் வெட்டப்பட்ட தென்னை, பனை மரங்களைப் போல் பெரிய காட்டுப் பாதையில் குறுக்கே படுத்திருக்கும். அந்தச் சமயத்தில் காட்டுப் பிராணிகளோ அல்லது காடர்களோ அதைத் தாண்டிப் போகும் பொழுது அது உடனே தன்னுடைய வாலால் அப்படியே சுருட்டி வளைத்து, மற்றொரு பள்ளத்தைப் பார்த்து இழுத்துச் செல்லும். மலைப்பாம்பு தன் உடலின் மேல் ஏதாவது ஒரு பொருள் பட்டதும் உடனே அதைச் சுருட்டிப் பிடித்துத் தன் வாயால் எவ்வளவு சீக்கிரம் கௌவிக் கொள்ள முடியுமோ

அவ்வளவு சீக்கிரம் கௌவப் பார்க்கும். அதைப் போல் காட்டு ரஸ்தாவில் மலைப்பாம்புகள் படுத்திருந்தால் காடர்கள் என்ன செய்வார்கள் தெரியுமா?

அதன் உடலில் படும்படி ஏதாவது பொருளைந் தூரத்திலிருந்து கொண்டே தூக்கிப் போடுவார்கள். அதன் உடம்பில் பட்டதும் அது சுருட்டிக் கொண்டு, பக்கத்திலிருக்கும் பள்ளத்தில் விழுந்துவிடும். பிறகு பாதையைக் காடர்கள் கடந்து போவார்கள். காட்டில் அடிக்கடி வழிகாட்டியைக் கவனித்துக் கொண்டேதான் நான் நடந்து செல்லுவேன். ஏனென்றால் சில வழிகாட்டிகளும், காடர்களும் காட்டில் திடீரென்று மோப்பம் பிடிப்பார்கள். அப்பொழுது உடனே ஏதாவது மிருகங்கள் வருகின்றன வென்று, நான் ஜாக்கிரதையுடன் இருப்பேன். நானும் மோப்பம் பிடித்துச் செல்லுவேன். காடர்கள் சுமார் இரண்டு மைல் தூரத்துக்கு முன்பே மோப்பம் பிடித்தால், நான் சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்திலிருக்கும் பிரயாணிகளையும் இரத்த வாடையையும் மோப்பம் பிடித்துச் சொல்லிவிடுவேன். இந்த மோப்பம் பிடிக்கும் பழக்கத்தால் நடந்த ஒரு சம்பவத்தைக் கூறுகிறேன்.

ஒரு சமயம் நான் குடும்பத்துடன் சென்னை—மயிலாப்பூர்—எண் 26, பெரிய பள்ளி வீதியில் படுத்திருந்தேன். நான் என்று பயணத்தை ஆரம்பித்து, மலைகளுக்கும் காடுகளுக்கும் சென்று சுற்ற ஆரம்பித்தேனோ அன்று முதல் படுக்கையில், "டார்ச்சு லைட் வைத்துக் கொள்வது வழக்கம். திருமணத்திற்குப் பின், என் இல்லாள் படுக்கையிலும் 'டார்ச்' ஒன்று வைப்பது வழக்கம்.

படுக்கையில் டார்ச்சு லைட்டை எப்பொழுதும் துணியால் மூடியே வைப்போம். நான் தூங்கும் பொழுது சிறிய ஓசை கேட்டதும் உடனே எழுந்து பார்ப்பதுண்டு. நல்ல தூக்கத்திலும் எனக்கு இந்தப் பழக்கம் உண்டாகி விட்டது. சென்னையில் ஒரு நாள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தேன். அரைத்தூக்கத்தில் என்னுடைய மூக்கு ஏதோ பசுமை

வாசனையை மோப்பம் பிடித்து விட்டது. பசுமை வாசனை நன்றாக வீசுகிறது. என்ன செய்வதென்றே தெரியவில்லை. இந்தப் பசுமை வாசனை காட்டில் வீசினால், தூரத்தில் யானைகளின் கூட்டம் வருகிறது என்று நாங்கள் நன்றாகத் தெரிந்து கொள்வோம். ஏனென்றால், யானைக் கூட்டங்கள் தழைகளைப் பிய்த்துக் கீழே போட்டுக் கொண்டும், மரத்தின் கிளைகளை உடைத்துக் கொண்டும் வருவது வழக்கம். இப்படிக் கிளைகளையும், பச்சைப் புதர்களையும் ஒடித்து அழித்து அட்டகாசம் செய்துக் கொண்டு வரும் பொழுது, பச்சை மரங்கள், செடிகளின் வாசனை, "யானை வரும் பின்னே; பச்சை வாசனை வரும் முன்னே" என்று காடர்கள் சொல்வதைப் போல் காற்றில் வந்துவிடும். அன்றிரவு இந்தப் பசுமை வாசனை வந்ததும் உடனே காட்டு யானைகள்தான் ஓடி வருகின்றனவென்று என் உள்ளம் சிந்தனை கொண்டது. எனக்குச் சிறிதுகூடச் சென்னையிலிருக்கிறோம் என்ற நினைவே இல்லை. காட்டில் இருக்கிறோம். என்ற நினைவு தான் இருந்தது. உடனே படுக்கையிலிருந்து மெதுவாக எழுந்தேன். எங்கள் அறை இருள் சூழ்ந்திருந்தது. "யானைவருவதால் காடர்கள் எல்லோரும் ஓசைப் படாமல் போய் விட்டார்கள் போலும்" என்று நினைத்துக் கொண்டேன். உடனே ஐந்து ஆறு வயதுடைய என் மகளைத் தூக்கித் தோளின் மேல் போட்டுக் கொண்டேன். பிறகு மெதுவாக என் மனைவியை, "எழுந்திரு, யானைக் கூட்டங்கள் ஓடி வருகின்றன. ஓசை படாமல் கிளம்பி விடுவோம்" என்று கூறினேன்.

அவளுக்கு நல்ல தூக்கம். மணியோ காலை மூன்று. எழுந்து படுக்கையின் சிறிது நேரம் உட்கார்ந்தாள். அக்காட்சியைக் கண்டதும், "என்ன முட்டாள் வேலை செய்தோம். குடும்பத்துடன் அல்லவா இங்கே வந்து சிக்கிக் கொண்டோம். என்ன முட்டாள் தனமான பயணத் திட்டங்களை நாம் போட்டோம்" என்று என் பயணத் திட்டங்களைப் பற்றி நான் யோசித்துக் கொண்டு இருளில் நின்று கொண்டிருக்கும் பொழுது என் மனைவி "டக்" கென்று எழுந்து, மின்சார விளக்கைப் போட்டாள். பிறகு,

"இது சென்னை: காடுமில்லை, மலையுமில்லை, யானையுமில்லை." பேசாமல் மூக்கைத் துணியால் கட்டிக் கொண்டு படுங்கள்" என்று கூறிவிட்டுப் படுத்துக் கொண்டாள். சரி! இது சென்னை தான்.

ஆனால், அந்தப் பசுமை வாசனைமட்டும் வீசிக்கொண்டே இருந்தது. என்னுடைய மூக்கையும் நன்றாகத் துடைத்துக் கொண்டேன். அப்பொழுது கூடப் பசுமை வாசனையை என் மூக்கு மோப்பம் பிடித்துக்கொண்டே இருந்தது "யானைக் கூட்டங்கள் இல்லை என்றால், வீட்டில் நாகப்பாம்பு ஏதாவது வந்தாலும்கூட இதைப்போல் பசுமை வாசனை அல்லது தாழம்பூ வாசனை வருவதுண்டு. அப்படி ஏதாவது, வீட்டினுள் பாம்பு வந்திருக்கிறதா? வென்று எல்லா இடங்களிலும், டார்ச்சு அடித்துப் பார்த்தேன். ஒன்றுமில்லை. ஆனால் பசுமை வாசனையை மட்டும் என் மூக்கு மோப்பம் பிடித்துக் கொண்டேதான் இருந்தது. சரி என்று விளக்கை அணைத்துவிட்டு, நாற்காலியில் உட்கார்ந்தேன். மணி சுமார் நான்கு இருக்கும். மெதுவாக எழுந்து தெருக்கதவைத் திறந்து பிறகு மூடிவிட்டு வெளியில் வந்தேன். பசுமை வாசனை வரும் திசையை நோக்கி, மோப்பம் பிடித்துக் கொண்டே நடந்தேன்.

நாங்கள் குடியிருக்கும் வீட்டின் எதிரில் ஒரு டீக்கடை இருக்கிறது. அக்கடையின் சமையல் அறைக்கு நேராக, நான் படுத்துறங்கும் அறையின் பலகணி உண்டு. நான் அன்று காலையில் மோப்பம் பிடித்துக்கொண்டே போனேன். டீக்கடையைத் தாண்டியதும், அந்தப் பசுமை வாசனை வரவில்லை. உடனே அந்த டீக்கடை முதலாளியிடம் போய், நான் உங்கள் சமையல் அறையைப் பார்க்க வேண்டும்." என்று கூறினேன்.

நான் ஏதாவது கூறினால் உடனே "அதில் என்னவோ ஓர் ஆராய்ச்சி புகுந்து கொண்டிருக்கும்" என்று நினைத்து அக்கடைக்காரர் உடனே அப்படியே செய்வார். ஆகையால் நானும், அந்த டீக்கடை முதலாளியும் சமையல் அறைக்குச்

சென்றோம். டீக்கடை சமையல் அறையில் பச்சை மிளகாய், கொத்தமல்லி, இஞ்சி, பூண்டு, கறிவேப்பிலை முதலியவை களை வடைக்காக அரைத்து வைத்திருந்தார் சமையல்காரர் ஐயா.

உடனே நான் அதனைக் காட்டி இதை எல்லாம் இன்று காலையில் எப்பொழுது அரைத்தாய்?'' என்று கேட்டேன்.

“நான் நேற்று இரவு சினிமாவுக்குப் போனேன். திரும்பி வர வண்டி கிடைக்காததால், சுமார் ஆறு மைல்கள் நடந்தே வந்தேன். இங்கு வரும்பொழுது காலை மூன்று மணி ஆய்விட்டது. பார்த்தேன். இப்பொழுது படுத்தால் காலையில் எழுந்து வேலை செய்ய முடியாது.'' என்று இந்த பச்சை மசாலைச் சாமான்களை எல்லாம் இன்று காலை சுமார் மூன்று மணிக்கே அரைக்க ஆரம்பித்தேன்.'' என்று கூறினான்.

இவைகளைக் கேட்டதும், “சரிதான் இவைகளை எல்லாம் காலை மூன்று மணிக்கு அரைக்கும் பொழுது இந்தப் பசுமை வாசனை காற்றில் என் ஜன்னல் மூலம் எனக்கு வந்ததும் போலும்'' என்று மனத்திருப்தியுடன் வீட்டுக்கு வந்தேன். வீட்டிலும் விஷயத்தை விளக்கினேன்.

தூக்கத்தில்கூட என் மூக்கு நன்றாக மோப்பம் பிடிக் கிறது என்று சொல்லிச் சொல்லி வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் சிரித்தார்கள். இதைப்போல் காட்டுப் பயணத் தில் மோப்பம் பிடிக்கும் பழக்கத்தால் அநேக ஆபத்துக்களைப் பற்றி, நான் காட்டில் வழிகாட்டியிடம் கூறியிருக்கிறேன். மேலும் காட்டில் பயணம் செய்யும் பொழுது, காட்டில் நமக்கு நண்பர்களாகவும், நம்மைவிட ஜாக்கிரதையுடைய வைகளாகவும், நமக்குத் தைரியம் கொடுப்பவைகளாகவும் நாம் சற்றும் கவலையில்லாமல் நடந்து செல்ல உதவுபவை களாகவும் சில பிராணிகள் உண்டு. அவைகள்தாம் “குரங்கு கள்.'' நாம் போகும் காட்டில் குரங்குகள் இருந்தால் எனக்குச் சற்றுத் தைரியமாக இருக்கும். ஏனென்றால் ஏதாவது கொடிய–பிராணிகள் வந்தால் உடனே எல்லாக் குரங்கு

களும் சேர்ந்து கூச்சலிட ஆரம்பிக்கும். அப்பொழுது நாம், ஜாக்கிரதையாக நடக்கலாம். ஆனால், குரங்குகளின் எதிரில் எதையும் எடுத்து வாயில் போடாமலும், சாப்பிடாமலும், நம்முடைய வாயால் ஆசை போடாமலும் இருக்க வேண்டும். அப்படி நாம் ஏதாவது சாப்பிட்டாலும் சரி, அவைகளுக்கு ஏதாவது தின்னக் கொடுத்தாலும் சரி, அப்பொழுது காட்டுப் பயணம் முடியும் வரையில் நாம் அவைகளுக்குக் கொடுக்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும். ஆனால், பல சந்தர்ப்பங்களில் குரங்குகள் மக்களைக் காப்பாற்றியிருக்கின்றனவென்று, நாம் கேட்டிருக்கிறோம். கம்பரும் காவியமாகச் செய்திருக்கிறார். குற்றாலக் குறவஞ்சியிலும், "மந்திசிந்து கனிகளுக்கு வான் கவிகள் கெஞ்சும்" என்றும் கூறப்படுகிறது ஆனால் அவைகளுக்குக் கோபம் வரும்படி நாம் ஒன்றும் செய்யக் கூடாது.

காட்டில் பயணம் செய்வதற்குக் காக்கி அல்லது பச்சை வர்ணச் சட்டையே ஏற்றது. எக்காரணத்தை முன்னிட்டும் வெள்ளைச் சட்டையை அணியக் கூடாது. ஏனென்றால் பச்சைச் செடிகளிடையே நாம் மறைந்தாலும் வெள்ளைச் சட்டை பளிச்சென்று எடுத்துக் காட்டி விடும். அப்பொழுது பிராணிகள், "ஏதோ வெள்ளையாகப் போகிறது" என்று நம்மை நாடி வரும். வெள்ளைப் பொருள்களோ வெள்ளைத் துணியால் கட்டப்பட்ட மூட்டையோ அல்லது பையோ காட்டுப் பாதையில் நம்மிடம் இருப்பது அவ்வளவு உகந்தது அன்று. வழிகாட்டியுடன் காட்டில் பல அபாயங்களையும் கடந்து, தாகத்தையும், பசியையும் பொருட்படுத்தாமல் "கருமமே கண்ணாயினர்." என்பதைப் போல் கால் கடுக்க நடந்து சென்றபின், சற்றுத் தூரத்தில், "ஆதிவாசிகளின் குடிசைகள் இருக்கின்றன—' வென்பதை அறிய அவர்களுடைய குடிசைகளின் கொல்லைப் பக்கங்களில் வாழைத் தோட்டங்களிருப்பதைக் காணலாம்.

ஆதிவாசிகளின் பாடியை அணுகுவதற்கு முன் சற்றுத் தூரத்திலிருந்தபடியே அவர்களுக்கு நான் வந்திருக்கிறேன் என்பதைத் தெரியப்படுத்தாமல் அவர்கள் வாழும் பாடியை

நாடிச் செல்லக் கூடாது. ஏனென்ருல், அவர்களிடம் காட்டெருமைகளும் வேட்டை நாய்களும் இருக்கின்றன. அவைகளை அவர்கள் நல்ல முறையில் வளர்த்திருக்கிருர்கள். அவைகள் அன்னிய மனிதர்களின் வாடையையோ காட்டு மிருகங்களின் வாடையையோ மோப்பம் பிடித்தால், உடனே சுமார் முப்பது, நாற்பது, ஐம்பது நாய்கள் மொத்தமாக ஓடி வந்து நம்மைச் சுற்றிலும் நின்றுவிடும். அதற்கு மேல் நம்மால் ஓர் அடிகூட நடக்க முடியாது. காடர்கள் வந்து, தங்கள் மொழியில் குரல் கொடுக்கும் வரையில் நாய்கள் நம்மைக் கடிக்கா. ஆகையால் நான் ஏதாவது ஓர் உயரமான பாறையின் மேல் நின்று கொண்டு அவர்களை முதலில் கூப்பிடுவேன். கூப்பிட்டதும் உடனே அவர்களும் பதில் குரல் கொடுப்பார்கள். ஒவ்வொரு காட்டிலும் ஆதிவாசிகளை ஒவ்வொரு விதமாக, எப்படிக் கூப்பிடுவதென்று நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். அது பயணம் செய்யும் நபருடைய சாமர்த்தியத்தைப் பொறுத்திருக்கிறது. எல்லாக் காட்டிலும் வாழும் ஆதிவாசிகளைக் கூப்பிடுவதற்கு அவர்களின் மொழியைத் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. சில இடங்களில் சில இனமக்களைத் தேடிக் கொண்டு போகும் பொழுதுதான், அவர்களைக் கூப்பிடும் முறையைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவர்களின் பாடியில் தங்கி இரண்டு மூன்று நாட்களுக்குள் அவர்களுடன் பழகிவிட்டால் அவர்களுக்குள் ஒருவரை ஒருவர் மரியாதையாக அழைத்துக் கொள்ளும் சில பொதுவான வார்த்தைகளையும் தெரிந்து கொண்டு நானும் அவ்வாறே அழைப்பேன். இங்ஙனம் அவர்கள் அழைக்கும் சில வார்த்தைகளைக் குறிப்பிடுகிறேன். ஆனைமலையிலும், வய நாட்டுப் பகுதிகளிலும் காடர்களின் பாடிக்குச் செல்வதற்கு முன் ஒரு மரத்தடியில் நின்று, ''டியோ—டியோ—டூபா'' வென்றும், மற்ருேர் இடத்தில் அதே காடர்களைக், ''கா—டா'' என்றும் அழைப்பேன். அதிக மாதங்கள் என்னுடன் பழகியவர்கள்—நீலகிரியில் வாழும் ஆதிக் குடிகளாகிய கோத்தர்கள்தான். அவர்களுடைய இல்லங்களில்

குடும்பத்துடன் வாழ்ந்த நாட்களே, "எங்கள் வாழ் நாளில் இன்ப நாட்கள்" என்று நான் கூறுவேன். அவர்கள் தங்கள் தெய்வமாகிய கம்மட்டீஸ்வரனை வழிபடுவதால் வயதில் பெரியவர்களை, "கம் மட்டனே ஒவ்" என்று அழைக்கின்றனர். ஆனால் நான் அவர்கள் இல்லத்தில் வாழ்ந்த நாட்களில் வயதில் சிறியவர்களையும், பெரியவர்களையும் "கம்மட்டனே ஒவ்" என்றே அழைத்தேன்.

நான் அழைப்பதைக் கண்டு, கோத்தத் தாய்மார்களும் சிறு பெண்களும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். வாசகர்கள் சிலர் தாங்களும் அப்படி அழைக்க விரும்பலாம். ஆனால் காடுகளுக்குப் போக வேண்டுமே என்று சிந்திக்கலாம். ஆனால் நம்மோடு அன்றாடம் பழகும் ஒருவகை ஆதிவாசிகள் நம்மெல்லோர் எதிரிலும் அவ்வாறே அழைக்கின்றனர். அதைக் கூறினால் நமக்கே ஆச்சரியமாக இருக்கும். "ஓ ஆயா!" என்று டின் அடித்துக் கொண்டு பிச்சைவாங்கும் குருவிக்காரக் கூட்டத்தினர் தமக்குள், ஒரு வார்த்தையை உபயோகப்படுத்தி அழைக்கின்றனர். அதைப் பலர் சில சமயங்களில் கவனித்தும் இருக்கலாம்.

புதியதாக ஓர் ஊரிலிருந்து வந்த குருவிக்காரனை மற்றொரு குருவிக்காரன் பயணத்தில் சந்தித்தால் அவனுக்கு, அவனுடைய பெயர் தெரியாது அல்லவா? ஆகையால் மற்றொரு குருவிக்காரன், இவனைப்பார்த்து "லோய்—லோய்—லோய்—ஆவ்லே" என்று அழைப்பான். இந்தச் சொல்லை எனக்கு ஒரு குருவிக்காரன் கூறினான். அது உண்மைதானா என்று பல முறை, பல இடங்களில் பலரிடம் இப்படியே கூப்பிட்டுச் சோதித்து விட்டேன். அப்படிக் கூப்பிட்டால் குருவிக்காரர்களுக்கு ஒரு பெரிய ஆனந்தம். ஆகையால் நீங்களும் ஒரு குருவிக்காரனையோ, குருவிக்காரியையோ அழைக்க வேண்டியதாக இருந்தால் அப்படியே அழைக்கலாம்.

பிரயாணம் செய்வதும், மற்ற மக்களிடம் பழகுவதும், "நம் வீட்டுக் கத்திரிக்காய் அன்று" பயணத்தில் அளவு

கடந்த பொறுமையும், நிதானமும் முன் யோசனையும் வேண்டும். (ஆனால் தற்காலத்தில் சில வாலிபர்களுக்கு முட்டாள் தைரியம் தான் உண்டு.)

இங்ஙனம் அழைப்பது தமிழ் நாட்டில்தான் அன்று. தெலுங்கு நாட்டில் வாழும் ஆதிவாசிகளிடத்திலும், இத்தகைய பழக்கமிருக்கின்றது. விசாகப்பட்டினத்தில் வாழும் ஓர் இன ஆதிவாசிகளைக் "கொண்ட தொரலூ" என்று அழைக்கின்றனர். ஆனால் அவர்களை அழைப்பதாக இருந்தால், "தொரலூ" என்றே அழைக்கின்றனர். நாமும் அப்படித்தான் அழைக்கவேண்டும். இந்த ஆதிவாசிகளிடம் தான் இந்த விசித்திரமான பழக்க வழக்கங்கள் இருக்கின்றனவா?" என்று ஆராய்ச்சி செய்யும் பொழுது கிராம வாசிகளும் பட்டணவாசிகளும் இதைப் போல் ஒரு வரையொருவர் அழைத்துக் கொள்வதை இன்றும் கண்கூடாகக் காண்கிறோம். சாதாரணமாகத் தூரத்தில் போகும் சிலரை நாம் முழுப் பெயரால் அழைப்பதில்லை. அவர்களின் இனப் பழக்கத்திலேயே தான் அழைக்கிறோம். "இன்னுங்கோ முதலியாரே, நாயக்கரே, நாயுடுகாரு, ராவுஜிசார், ஐயர்வாள், என்றெல்லாம் நாம் தூரத்தில் இருப்பவரையோ, அருகில் இருப்பவர்களையோ அழைக்கின்றோம்.

இங்ஙனம் காட்டில் காடர்களையும், ஆதிவாசிகளையும் அழைத்த பின், அவர்கள் உடனே "ஆவ்—ஆவ்—ஆவ் ஆவ்" என்று கூக் குரல் கொடுத்துக் கொண்டு, தடிகளை உயரத்தில் தூக்கிக் கொண்டும், கும்பலாக ஓடி வருவார்கள். வந்தவர்கள், காட்டுப் பூ மாலையையோ தங்களிடமிருக்கும் ஏதாவது, ஒரு துணி மாலையையோ நமக்குச் சூட்டி அழைத்துச் செல்லுவார்கள். அதைப்போலவே அன்று அவர்களுடைய பாடியை அடைந்ததும் அன்னியருக் கென்று இருக்கும் திண்ணையில் நம்மை உட்காரவைப்பார்கள். பிறகு சுமார் ஒரு மணி நேரம் வரையில் நம்மையாரும் என்ன வேண்டும்? ஏன் வந்தீர்கள்? தண்ணீர் வேண்டுமா? என்று ஒன்றும் கேட்கவே மாட்டார்கள். நானும் ஓர் ஊமையனைப் போல் திண்ணை

யில் உட்கார்ந்திருப்பேன். நடந்து வந்தகளைப்புத் தீரும் வரையில் சற்று இளைப்பாறுவேன். சிறிது நேரம் கழித்து, நானே யாரிடமாவது, "சிறிது தண்ணீர் கொடுங்கள்" என்று கேட்டு வாங்குவேன். தண்ணீரைக் குடித்துக் கொண்டே, உங்கள் பாடியில் தண்ணீர் நன்றாக இருக்கிறது. காதும் அடைக்கிறது. ஏதாவது கஞ்சி இருந்தால் கொடுங்கள் சாப்பிடுகிறேன்." என்று பேச்சை ஆரம்பிப்பேன்.

என்ன விஷயம்? எங்கே வந்தீர்கள்? என்ன வேண்டும்? இங்கே நாங்கள் இருக்கிறோம்! என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? என்று அடுக்கடுக்காய்ப் பல கேள்விகளை நம்மைச் சுற்றிலும் நின்று கொண்டு கேட்டார்கள். அதற்கு நான் நிதானமாக புன் சிரிப்புடன், "உங்களைக் காணவும். உங்களுக்கு என்ன உதவிகள் வேண்டும், என்று கேட்கவும் நீங்கள் இவ்வளவு தைரியமாகக் காட்டில் வாழ்கிறீர்களே அது எப்படி என்று அறிந்து கொள்ளவும், உங்களுடன் பழகவும் உங்களிடம் சாப்பிடவும்தான் வந்தேன். நீங்கள் தங்க உத்தரவு கொடுத்தால் தங்குகிறேன். வேண்டாம் என்று கூறினால் நான் போகிறேன். எனக்கு உங்களிடமிருந்து வேறொன்றும் வேண்டாம்." என்று கூறுவேன். இரண்டு நாட்களுக்குப்பின் அவர்களிடம் பழகி, குறிப்புகள் எழுதத் தொடங்குவேன். அவர்களுடன், பேசும் பொழுதும், எழுதும் பொழுதும் அவர்களிடம் கதை கேட்கும் பொழுதும், நானும் அவர்களுடன் சரி நிகர் சமமாகத் தரையில் உட்கார்ந்து பேசுவேன். ஆனால் எனக்கென்று தனி மணையோ அல்லது கோணிப் பையோ போடுவார்கள். அதில் நான் உட்காரமாட்டேன். அவர்களிடம் வெகு நேரம் பேசிய பின், பத்துப்பன்னிரண்டு மணிக்கு இரவில் படுக்கைக்குச் செல்லும் முன் அன்று சேகரித்தக் குறிப்புகளை எழுதி விட்டு, படுக்கையைச் சுற்றிலும் டார்ச்சின் உதவியால் ஒரு தடவை பார்த்துவிட்டு ஆண்டவனை வணங்கியபின் படுத்துக் கொள்ளுவேன். இரவில் பல சிந்தனைகள் வரும் அந்த நிலை

யில் காட்டில் வண்டுகளின் ரீங்காரமும், தவளைகள் கத்தலும் நரியின் ஊளையும் தவிர மற்றது ஒன்றும் கேட்காது.

அந்த நிலையில் தூக்கம் வராவிட்டால், மெழுகு வத்தியை என் பையிலிருந்து எடுத்து, ஏற்றி வைத்துக் கொண்டு, அன்று சேகரித்த விஷயங்களுக்குச் சங்ககால நூல்களும், பிற நூல்களும் ஆதாரம் காட்டுகின்றனவா? என்று யோசிப்பேன்.

அவற்றையும் எழுதிக் கொள்வேன். மேலும் மறுநாள் காலையில் எங்கெங்குப் போகவேண்டும் என்னென்ன விஷயங் களைப் பற்றிச் சேகரிக்கவேண்டும், என்றும் தனித்தனிக் குறிப்புகள் எழுதி அதைத் தனியிடத்தில் வைத்துக்கொள்ளு வேன். அன்று காட்டில் பார்த்த பொருள்களின் படங்களை வரைந்து கொண்டு, அந்தப்பொருள்களையே பெறமுடியுமா? அல்லது அவைகளைப் புகைப்படங்களாவது எடுக்க முடியுமா? என்பதையுப் பற்றிச் சிந்தித்தவாறே படுத்துத் தூங்குவேன். அப்படியும் சில இரவில் தூக்கமே வராமல் கஷ்டப்படுவதும் உண்டு. காரணம் ஆகாரம் சரியானதாக இல்லாததால் வயிறு இப்படியும் அப்படியும் புரட்டிக் கொண்டே இருக்கும். ஆனால் எந்த நேரத்தில் காடர்கள் எதைக் கொடுத்தாலும் சரி, வேண்டாம் என்று சொல்ல மாட்டேன்; உடனே வாங் கிச் சாப்பிடுவேன். எனக்கு வேண்டிய குறிப்புகளும் பொருள்களும், நான் புகைப் படங்கள் பிடிக்க வசதியும் காட்டில் கிடைத்தபின் அவர்களிடமிருந்து, விடை பெற்றுக் கொண்டு புறப்படுவேன். அவர்கள் என்னைக் காட்டு எல்லை யைக் கடந்து 'ரோடு வரையில் கொண்டு வந்து விடுவார்கள்.

இப்படி மற்றொரு சமயம் நானும் பணிக்கர் கணித்தனும் மைசூர் குண்டல் பேட்டை வழியாக சென்று கூடலூரில் சில நாட்கள் தங்கிச் சுல்தான்பத்திரி, புதர்க்காடு முதலிய இடங்களில் உள்ள, ஆப்பிரிக்கரைப்போல் கறுத்த மேனியை உடைய பல ஆதிவாசிகளைக் காணச் சென்றோம்.

இவர்கள் ஆப்பிரிக்காவிலும், மற்ற மேலை நாடுகளிலும் அடிமைகளைச் செய்த கொடுமைகளுக்குப் பயந்து, வியா

பாரக் கப்பல்கள் இந்தியாவுக்கு வந்த காலத்தில், அக்கப்பலி லிருந்து தப்பி ஓடி வந்து மலைக்காடுகளில் மறைந்து கொண் டவர்கள். மிகப் பழங்காலத்திலிருந்தே பயந்து வந்து தன் னிடம் அடைக்கலம் புகுந்த மக்களை நம் பாரததேசம் ஆதரிக்கும் தன்மையுடையது. எனவே சேர நாட்டு மலை களில் அடைக்கலம் புகுந்த அவர்களை பாரதம் இங்கேயே தங்க வைத்துக் கொண்டது. இது முதலாம் நூற்றுண்டு முதல், ஐந்தாம் நூற்றுண்டு வரையில் நடந்த சம்பவம். (கி.பி. 52)

கூடலூருலிருந்து புதர்க் காட்டிலுள்ள ஓர் வயநாடன் செட்டியார் வீட்டுக்குச் சென்றும். தேவர் சோலையி லிருந்து புதர் காட்டுக்கு ஐந்து மைல்கள் நடந்துதான் செல்ல வேண்டும். பயணத்திற்கு வசதியான காடுதான். அந்த வயநாடன் செட்டியார் வீடு "ப" வடிவில் பர்மா, மலேயா முதலிய இடங்களில் கட்டிலிருப்பதுபோல் எல்லாம் மரத்தலேயே கட்டப்பட்டிருக்கிறது.

அன்னியர் வந்தால் உபசரிக்க ஓர் தனி கட்டிடமே இருக்கிறது. பிரயாணத்தில் பல கோடி அனுபவங்களை நாம் அடையக்கூடும்." என்று இரவு சாப்பாடு முடிந்ததும் செட்டியார் கூறினர்.

"மதராசு" எப்படி இருக்கிறது? அங்கே இருப்பவர்கள் எல்லோரும், அதிகம் படித்தவர்களாமே! மிகவும் தயாள குணம் உடையவர்களாமே! எல்லோரும் காரில் போவார் களாமே! ஆகாய விமானம் ரோட்டிலேயே போகுமாமே" என்று கேட்டார். இவைகளைக் கேட்டதும்,

"இன்னும் பல மக்கள் குழந்தை உள்ளத்துடனேதான் இருக்கிறுர்கள். இந்த உள்ளம் படைத்தவர்கள் சென்னைக்கு வராமலே இருந்தால் நலம். ஏதோ, "நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழி ஓடிப், புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்" என்பதைப் போல், அவர்களுக்காகப் பெய்யும் மழை, நமக்கும் கொஞ்சம் கிடைக்கலாம் அல்லவா?" என்று

எண்ணினேன். பிறகு செட்டியார் அவர்களுக்குச் சென்னை யைப்பற்றி நல்ல முறையில் விளக்கிக் கூற வேண்டியதைக் கூறி, மறைக்க வேண்டியதை மறைத்துப் பேசிக் கொண் டிருந்தோம்.

"நகர வாசிகளைவிட கிராமத்து வாசிகள் நல்லவர்கள். கிராமத்து வாசிகளை விடக் காட்டு வாசிகள் நல்லவர்கள்" என்று நான் அடிக்கடி நகரங்களில் இருக்கும் பல பத்திரிகை ஆசிரியர்களிடம் கூறுவதுண்டு.

அன்றிரவு எங்களுக்குப் படுக்கைகள் வெளியில் போடப்பட்டன, அந்த மலைப் பிராந்தியத்தில் கரடி, புலி முதலிய பிராணிகள் இல்லாவிட்டாலும் மணிக்குச் சுமார் என்பது மைல் போகக் கூடிய சிறுத்தை முதலியவைகள் பக்கத்திலிருக்கும் அறுபது, எண்பது மைல் தூரத்திலிருந்து வரக் கூடும் அல்லவா?" என்று நினைத்த பொழுது வெளியில் படுத்தால் எப்படித் தூக்கம் வரும். ஆனால் என்ன செய்ய முடியும்? வந்தது வந்து விட்டோம். இவர்கள் குடும்ப சம் பிரதாயப்படி அன்னியருக்குப் படுக்கை வெளியில்தான் போடுவார்களாம். மழை, பனி, காற்று எந்த சீதோஷ்ண நிலையாக இருந்தாலும் சரி, வந்த அன்னியர்கள் வெளியில் தான் படுக்க வேண்டும். "பயணத்தில் பல கஷ்டங் களும் இருக்கும்; சுகங்களும் இருக்கும். "எதையும் தாங்கும் இதயம் மனிதனுக்கு வேண்டும்" ஆனால் பயணத்தில் மட்டும் முட்டாள் தைரியம் இருக்கவே கூடாது. செட்டி யாருடைய தம்பி தங்கைகள் வந்தாலும் சரி வெளியில்தான் படுக்க வேண்டுமாம். செட்டியார் படுப்பதற்கு முன், தன் துப்பாக்கியை, "ரெடி" செய்து தாம் படுக்கும் அறையில் வைத்துக் கொண்டார். பிறகு அந்த அறையின் பெரிய கோட்டைக் கதவுகளைப் போலிருக்கும் கதவுகளை இருவராகச் சேர்ந்து தள்ளி மூடிக்கொண்டார்கள். வெளியில் என்ன நடந்தாலும், என்ன கூக்குரல் கொடுத்தாலும் இரவு தூக்க நேரத்தில் கொஞ்சம்கூட

உள்ளே கேட்காது என்பது திண்ணம். அதையே நாங்கள் வெளியில் பேசிக் கொண்டோம்.

"மருண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்பார்கள். வெளியில் லேசான சத்தம் கேட்டாலும் சரி, "திடுக்கிட்டு" விழித்துக் கொள்ளுவேன். இரவு சுமார் ஒரு மணியிருக்கும், "கிளிக்" என்று ஓசை கேட்டது. "என்ன ஓசை?" என்று மெதுவாக எழுந்து டார்ச்சை உபயோகப் படுத்தாமல் கையில் வைத்துக் கொண்டு வீட்டைச் சுற்றி வந்தோம். அந்த இருளில் புதிய இடத்தில் இப்படிச் சுற்றி வரும்பொழுது என் குடல் எப்படியிருந்திருக்கு மென்று நான் கூறுமல் நீங்களே கற்பனை செய்து கொள்வது நலம்.

நானும் நண்பர் பணிக்க கணித்தனும் அடிமேல் அடி வைத்து நடந்தோம். காட்டுவண்டுகளின் ஓசையும் நரி களின் ஊளையையும், நாய்களின் குரைப்பையும் தவிர வேறென்றும் எங்கள் செவியில் கேட்கவில்லை! வீட்டைச் சுற்றி வரும்பொழுது, அந்த செட்டியார் படுக்கும் அறைச் சுவரில் இரண்டு துவாரங்கள் இருந்ததைக் கண்டேன். ஒன்றில் வட்டமான கண்ணடி புதைக்கப்பட்டிருந்தது. மற் றென்று துப்பாக்கி முனையின் அளவுக்குச் சரியாக இருந்தது. இவைகள் ஒன்றின் கீழ் ஒன்றுக இருந்தன. மேல் துவாரத் திலிருந்து பார்த்தால் வெளியில் என்ன நடக்கிறது என்பது நன்றுகத் தெரியும். கொடிய பிராணிகள் வந்தால் உடனே வெளியில் வராமல் உள்ளிருந்தவாறே இரண்டாம் துவா ரத்தின் மூலம் துப்பாக்கியால் சுடலாம் அல்லவா?

நாங்கள் அந்த வீட்டைச் சுற்றி வருவதற்கு முன், இந்த இரகசியத் துவாரங்களை நான் கவனித்திருந்தால், அந்த இருளில் நாங்கள் அப்படி முட்டாள் புத்தியை வைத்துக் கொண்டு, அந்த வீட்டைச் சுற்றி வந்திருக்க மாட்டோம். ஏனென்றுல் இருளில் எங்களையும் ஏதோ மிருகம் என்று நினைத்திருந்தால், ஏதாவது ஆபத்து நடந்திருக்குமல்லவா?

ஏனென்றுல், காட்டில் இரண்டு சிக்காரிகள் ஒருவருக் கொருவர் தெரியாமல் சுட்டுக் கொள்வதை நான் அடிக்கடி

பல பத்திரிகையில் வாசித்திருக்கிறேன். 'அதைப்போல்—? அதைப்போல்—? என்று நினைக்கும்பொழுது என் கண்கள் கலங்கின. ஆனால், "ஆண்டவன் கருணை" ஒன்றும் நேர வில்லை. எல்லாம் அவன் செயல் என்று நினைத்துத் தைரிய மாகப் படுத்துக் கொண்டோம். ஆனால் ஒரு பக்கத்தில் யானை களைப் பற்றிய பயம் மற்றொரு பக்கத்தில் கண் எரிச்சல், எங்களுக்கு இரண்டு பக்கங்களிலும், பக்கத்திற்கு இரண்டு கண்களாக நான்கு கண்கள் இருளில் "பளிச்—பளிச்" சென்று தெரிந்தன. உடனே கடியாரத்தைப் பார்த் தேன். "இரவு இரண்டரை மணி" என்று நண்ப ரிடம் கூறினேன். உடனே பக்கத்திற்கு ஒருவராக டார்ச்சை அடித்தோம். ஒரு பக்கத்தில் காட்டுப் பன் றியும், மற்றொரு பக்கத்தில் பெரிய நரி ஒன்றும் தம் தலையைத் தூக்கப் பார்த்து விட்டு ஓட ஆரம்பித்தன. இனி மேல் என்ன நடந்தாலும் எழுந்து பார்ப்பதில்லை என்ற தீர் மானத்திற்கு காலை மூன்று மணிக்குப் படுத்துக் கொண் டோம்.

அந்த வயநாடன் செட்டியார் இல்லத்தில் நாங்கள் அடைந்த அனுபவத்தையும், அவர்கள் எங்கள்பால் காட்டிய கருணையையும் அன்றிரவு நாங்கள் விழித்திருந்து பார்த்தபல அனுபவங்களையும் என்னால் மறக்கவே முடியாது. எங்கள் பஸ் நிலம் பூரை விட்டதும் ஓங்கி வளர்ந்த மலைப் பிராந்தி யத்தில் வளைந்து வளைந்து போன காட்சியைக் கண்டபோது அது ஒரு பெரிய மலைப் பாம்பு நகர்வதைப் போல் இருந்தது.

பாதையில் பள்ளமான பகுதி பல உண்டு. பாதை "என்" (*N*) வடிவில் ஓடுகிறது. "எஸ்" (*S*) வடிவில் பஸ் திரும்ப வேண்டும். இதைப் போல் பலகுறிகளை மேற்குத் தொடரிலும், கிழக்குத் தொடரிலும் நீலகிரி மலைப்பகுதியில் காணலாம்.

எங்கள் பஸ் நிலம்பூரை விட்டதும், அடர்ந்த காட்டு வழியில் ஓடிக்கொண்டிருந்தது. மலையின் இயற்கைக் காட்சி களையும் ஓங்கி வளர்ந்த காட்டு மரங்களுக்கு நடுவில் போகும்

பாதையையும் உயர்ந்து ஓங்கிய மரங்களின் எழில் மிக்கக் காட்சிகளையும் ஆனந்தமாக ரசித்துக் கொண்டிருந்தோம். அதே நேரத்தில் பாதையின் இருபக்கங்களிலும் காட்டு யானைகளின் மலங்களையும், அட்டூழியங்களையும் பார்த்துக் கொண்டே சென்றோம். சில இடங்களில் சில நேரங்களில் காட்டினுள், "படார்—படார்" என்று யானைகள் மூங்கில்களை முறிக்கும் பயங்கர ஓசையையும் கேட்டோம். இவ்வித ஓசையைக் கேட்டவர்களில் யானைகளைப் பற்றி அனுபவமுள்ளவர்களின் முகங்கள் மாறின. அனுபவமில்லாதவர்களின் முகங்களோ யானையைக் காணத் துடித்தன!

பஸ் டிரைவர் மலைப்பாம்பு போல் வளைந்து வளைந்து போகும் பாதையில், தன்னுடைய உடலை வளைத்தும், நெளித்தும் பஸ்ஸை ஓட்டிச் சென்றார். வழியில் கடைகளோ ஆள் நடமாட்டமோ, மற்ற வண்டிகளின் ஓட்டமோ இல்லை. அங்காங்கே மலைகள் சரிந்துவிழுந்த காட்சியையும், மான்கள் ஓட்டத்தையும் காணலாம். நரிகள் பாதை வரம்புகளில் மேல் நின்று, பஸ் வருவதைக் கண்டு, தலையைத் தூக்கிப் பார்ப்பதைக் கண்டால், ஓணான் தலையைத் தூக்கிப் பார்ப்பதைப் போல் தோன்றும். இவ்விதமான அழகிய காட்சிகளை ஒரு பக்கமும், காட்டு யானைகளின் பயங்கரக் காட்சியை மற்றொரு பக்கமும் மாறி மாறிப் பார்த்தன கண்கள். எங்கள் பஸ் நிலம்பூரிலிருந்து சுமார் பதினாறுவது மைலில், "முக்கூடு" என்ற ஒரு மலையின் வளைவான பாதையில் செல்லத் தொடங்கியது. "படார்" என்ற ஓசை எங்கள்பஸ்ஸில் கேட்டது.

எல்லோரும் பயந்து போய்விட்டோம். சிலர் எட்டிப் பார்த்தார்கள். சிலர் பஸ்ஸிலிருந்து குதிக்கப் போனார்கள். "பஸ் என் கண்டிரோலில் இல்லை. பிரேக் ஜாயிண்டு உடைந்துவிட்டது." என்று டிரைவர் கூறினார்.

பஸ்ஸிலிருந்து எட்டிப் பார்த்தால், பக்கத்தில் பெரிய பள்ளத்தாக்கு இவைகளைப் பார்த்து விட்டு என்ன செய்ய வேண்டும் என்று பயணிகள் யோசித்திருக்கும்போது,

பஸ் தன் இஷ்டம் போல் பின்னுலேயே ஓடிச் சென்றது. ஏனென்ருல் அந்தப் பாதை ஒரு மலைச்சரிவு.

அதற்குள் சில பயணிகள், "ஆ!" என்று சந்தோஷத்துடன் கூவினார்கள்! "படார்" என்று ஓசை கேட்டதும் பஸ்ஸைப் பள்ளத்தின் பக்கம் ஓடவிடாமல் மலைச் சுவரின் சரிவுப் பக்கமாக இடித்தாவது நிறுத்தலாம் என்று டிரைவர் வளைக்க ஆரம்பித்தார். அதற்குள் கண்டக்டர் வெளியில் குதித்து மிகவும் சாமர்த்தியமாகப் பக்கத்திலிருந்த பெரிய கல்லைச் சக்கரத்தினடியில் வைத்து விட்டார். உடனே பஸ் நின்று விட்டது. "எல்லாம் ஆண்டவன் செயல்" என்று கூறினார் டிரைவர்.

பிரயாணிகள் எல்லோரும் பஸ்ஸை விட்டு இறங்கினார்கள். பஸ் நின்ற இடம், "முக்கூடு" எங்களைச் சுற்றிலும் பெரிய மலைக்காடுகளின் பெரிய "கால் பந்து" அளவு யானைகளின் லத்திகளும் தான் நிறைந்து இருந்தன. ஏதோ சிறிது தூரத்தில் ஓர் ஆபீசர் காரில் குடும்பத்துடன் வருவது தெரிந்தது. உடனே டிரைவர் அக்காரை நிறுத்தினார். "*M. D. N.* 3811" இராஜலக்ஷ்மி மோட்டார் சர்வீஸ், கூடலூர் பிரேக் ஜாயிண்டு உடைந்து விட்டது. இடம் முக்கூடு. கேரளா—நிலம்பூரிலிருந்து 16-வது மைல் பஸ் தேவை" என்று தந்தி அடிப்பதுபோல் ஒரு கடிதம் எழுதி அந்தக் காரில் கொடுத்து விட்டார் கண்டக்டர், சுமார் ஒரு மணி நேரம் கழித்து மற்றொரு கார் வந்தது. அதில் இடமிருந்தது. உடனே அதை நிறுத்திக் கண்டக்டர் மட்டும் அதில் ஏறிக்கொண்டு தகவல் கொடுக்கச் சென்றார்.

உடைந்த உள்ளத்துடனும், பசியின் கொடுமையுடனும் எல்லோரும் பஸ்ஸைச் சுற்றிலும் உட்கார்ந்து கொண்டு தவமிருந்தோம்.

பஸ் நின்ற இடம் சில நாட்களுக்கு முன் தான் மலையிலிருந்து பாறை சரிந்து விழுந்து அதனால் பாதையில் பெரிய பள்ளம் உண்டாகி, அப்பாறையைக் கொண்டே

மூடிய இடமாம். இந்த முக்கூட்டுக்குச் சிறிது தூரத்தில் தான் யானையால் ஒரு பஸ் ஆபத்திற்குள்ளானதாம். இடப் பக்கத்தில் ஒரு பெரிய பள்ளத்தாக்கு இருக்கிறது. குழந்தை கரையின் மேல் உட்கார்ந்திருந்தது. திடீரென்று மூங்கிற் காடுகளுக்குள், "படார் — படார்" என்ற ஓசை கேட்டதும், மங்கை துணிதுவைப்பதை நிறுத்திவிட்டு, யானைகள் வருகின்றன" என்று ஓட ஆரம்பித்தாள். யானைகள் காட்டினுள் வருவதற்கு முன் அவைகள் வருகின்றனவென்று நன்ருகத் தெரிந்துக் கொள்ளலாம். அதற்குள் யானை அவளைப் பார்த்து விட்டது. தன்னை நாடி யானை ஓடி வருவதைக் கண்ட அந்த மங்கை" குழந்தைகளை யானைகள் ஒன்றும் செய்யா" என்று தெரிந்து தன் குழந்தையை விட்டு விட்டு முன்னுல் ஓட ஆரம்பித்தாள்.

அவளுக்குப் பின்னுல் குழந்தையும், குழந்தைக்குப் பின்னுல் ஒற்றையடிப் பாதையில் யானையும் ஓடிச் சென்றன. யானை அக் குழந்தையைக் கண்டு சற்று ஓரமாக ஒதுங்கி, முன்னுல் ஓடிச் சென்று அந்த மங்கையைப் பிடித்துத் தரையில் வைத்துக்கொண்டு தன் காலால் அவள் தலையை மிதித்து நசுக்கியது. அவளுடைய தலை தரையில் ஒரு காகிதத் தாள்போல் படர்ந்து விட்டது. இந்தக் காரியத்தைச் செய்த யானை, என்ன செய்தது தெரியுமா? சாதாரணமாக யானைகள் எதையாவது கொலை செய்தால், உடனே நீர் ஓடைக்குச் சென்று குளித்த பின்தான், ஆகாரம் உண்ணும். ஆகையால், உடனே அந்த மங்கை துணிதுவைத்துக் கொண்டிருந்த ஓடைக்கு வந்து, அள்ளி அள்ளிக் குளித்து விட்டுப் போகும்பொழுது, சிறிது நேரம் எதையோ நினைத்துச் சிந்தனை செய்தது. அது உற்றுப் பார்த்த காட்சி என்ன தெரியுமா?

மங்கையின் குழந்தை தன் தாயின் மேல் படுத்துக் கொண்டு "அம்மா! அம்மா!" என்று கதறிய காட்சிதான்.

சம்பவத்தைக் கேட்டதும் எல்லோரும் பஸ்ஸைச் சுற்றிலும், உடைந்த உள்ளத்துடன் உட்கார்ந்து

விட்டார்கள். "யானையைக் காண வேண்டும்" என்று கூறியவரும், அப்படியே அசந்து போய் எங்களுடன் உட்கார்ந்து விட்டார். எல்லோரும் பஸ்ஸைச் சுற்றிலும் உட்கார்ந்திருக்கும் காட்சியையும், அவர்களுடைய முகம் பசியால் வாடி இருப்பதையும், எந்த நேரத்தில் எப்பக்கத்தில் எந்த யானை வருமோ வென்று அப்படியும் இப்படியும் அவர்களின் கண்கள் ஓடுவதையும் கண்ட நான் இதுதான் சமயமென்று என் காமராவை எடுத்துக் "கிளிக்" என்று படம் பிடித்தேன். மாலை 2–25க்கு மற்றொரு பஸ் வந்தது. அதில் எல்லோரும் ஏறிக்கொண்டு, மாலை நான்கு மணிக்குக் கூடலூர் போய்ச் சேர்ந்தோம். பஸ்ஸைவிட்டு இறங்கியதும், எல்லோரும் ஓட்டலுக்கு ஓடினோம்.

நானும் என் நண்பர் கிட்டியும் ஓட்டலில் ஒரு தனி இடத்தில் நின்று ஆண்டவனை நினைத்து, "ஓர் ஆபத்துமில்லாமல், எங்களைச் சுகமாக இங்கு சேர்த்ததற்காக, உமக்கு எங்கள் நன்றி" என்று உள்ளத்தில் நினைத்த பிறகு காப்பி சாப்பிட்டோம். பிறகு அன்று மாலை கடைசிப் பஸ்ஸைப் பிடித்துக் கொண்டு, மைசூர் போய்ச் சேர்ந்தோம்.

மற்றொரு சமயத்தில் வடஆற்காட்டுப் பகுதியில் திருப்பத்தூரிலிருந்து பஸ்ஸில் சென்று ஏழாவது மைலில் உள்ள தண்ணீர்ப் பந்தலில் இறங்கினேன். அங்கிருந்து கால் நடையாக சுமார் இரண்டு மைல் நடந்து மட்றப் பள்ளிக்குச் சென்றேன். அங்கிருந்து ஜவ்வாதுமலை புதூருக்குச் சுமார் பத்து மைல்கள் ஒற்றையடிப் பாதையின் வழியாக நடக்க ஆரம்பித்தேன். எனக்கு வழிகாட்ட ஒருவர் கிடைத்தார்.

ஒற்றையடிப் பாதையில் கூழாங்கற்களின் மேல், கால் வைத்துத்தான் நடக்க வேண்டும். அங்ஙனம் நடக்கும் பொழுது மழைக்காலங்களில் எப்படி நடந்து செல்வது என்ற சந்தேகம் உண்டானது. ஏனென்றால் நாங்கள் நடக்கும் ஒற்றையடிப் பாதை என்பது என்ன தெரியுமா?

மழைக்காலங்களில், ஜவ்வாதுமலைப் பிராந்தியத்தின் மேலிருக்கும், மழைத்தண்ணீர் கீழே ஓடிவரும்,கால்வாயைத் தான் ஒற்றையடிப் பாதை என்று கூறினேன். அதன் வழியே நடந்து போகும்பொழுது, என்னப்பா! திடீரென்று மழை பெய்தால், இந்தப் பள்ளத்தில்தான், மழை நீர் ஓடி வரும் அல்லவா? அப்பொழுது சிறுபாறைகளையும், இந்தப் பள்ளத்தில் உருட்டிக் கொண்டு வரும் அல்லவா?'' என்று கொஞ்சம் பயந்த சுபாவத்தில் கேட்டேன். அதற்கு வழி காட்டி என்ன சொன்னான் தெரியுமா? அதற்கு என்ன செய்ய முடியும். அப்படி மழை வந்து. பாறைகள் உருண்டு வந்தால், சமயம் பார்த்து, தலையை இப்படியும் இழுத்துக் கொண்டால் போதும், ''என்று சர்வசாதாரணமாய்க் கூறினான். அவள் கூறும் பொழுதே, நான் வாயு பகவானை நினைத்து கொண்டே அந்த ஒற்றையடிப் பாதையில், இருக்கும் கூழாங் கற்களின் மேல்தான் கால் வைத்து நடந்து சென்றேன். அப்படி நடக்கும் பொழுது, பக்கத்திலிருக்கும் பள்ளத்தில், உருண்டு விடாமலிருக்க நான் பட்ட பாட்டை நினைத்தால், நடனம் கற்றுக்கொண்டு விடலாம் போல் எனக்குத் தோன்றியது.

இரண்டு பக்கங்களிலும், அடர்ந்த காடுகள் இருள் சூழ்ந்து விடுவதற்குள் போய்ச்சேர வேண்டும் என்று மூச்சைப் பிடித்துக் கொண்டு நடந்தேன். ஓரிடத்தில் மலையின் உச்சியில் நின்று நான்கு பக்களிலும் பார்த்தேன். அப்படி நான்கு திசைகளிலும் பார்ப்பதற்கு எனக்குப் பயமாக இருந்தது. இந்த மலையின் அடிவாரத்திலிருந்த போது, அவ்வளவு உயரத்திற்குப் போகவேண்டுமே என்றும். உச்சிக்கு வந்த பின் இவ்வளவு உயரத்திலா வந்துள்ளோம், என்றும் எண்ணிய போது பயம் என் உள்ளத்தில் குடிகொண்டது. சிறிது சிறிதாக இருள் எங்களைச் சூழ ஆரம்பித்தது. மேகங்களின் கருநிறம் மிகுந்து கொண்டே வந்தது. இடியும் இடித்தது. ''இடி'' என்றால் நகரங்களிலும், கிராமங்களிலும் இடிப்பது போல் இல்லை. மலைப் பிராந்தியத்தில் இடிக்கும் இடி வேகமாகவும் பலமுள்ள தாகவும், அந்த மலைப் பகுதியே ஆட்டம் கொடுப்பதாகவும்

இருக்கும். நடுக் காட்டில் தங்குவதற்கு ஒரு ஜாண்கூட இடவசதி கிடையாது. அந்த நிலையை இப்பொழுது நினைத்தாலும் உடல் நடுக்கம் கொள்ளுகிறது.

"சற்று வேகமாக நடக்கவேண்டும். இல்லாவிட்டால் மழை வந்துவிட்டால், நாம் நடக்கவே முடியாது. சிரமத்தைப் பார்க்காதீர்கள்." என்று கூறினன். வழிகாட்டி.

புதர்களிலும் பாறைகளின் மேலும், முன்னல் போகும் உருவத்தைப் பின் தொடர்ந்து ஓடினேன், நான். ஏனென்றல் வழிகாட்டியின் முகம் இருளில் தெரியவில்லை. ஆனல் ஓர் உருவம் நடப்பதுமட்டும் தெரிந்தது. அந்த நிலையில் நான் வழி காட்டியின் பின்னல் ஓடினேன். பயணத்திற்கு வேண்டிய பொருள்களும், பைகளும், மூட்டைகளும் அத்தனையும் என் கையிலும், தோளிலும், இருந்தன. ஏதாவது வழியில் விழுந்தாலும் அதைத் திருப்பிப் பார்த்து எடுப்பதற்குள் வழிகாட்டி மறைந்துவிடுவானே என்ற பயம் என் உள்ளத்தை வாட்டியது. ஆகையால் சில பைகளின் கயிறுகளை வாயால் கடித்துக்கொண்டு ஓடினேன். கடைசியில் ஜவ்வாது மலையின் உச்சியில் இருக்கும் ஒருவருடைய குடிசையின் திண்ணையில் 'அப்பாடா' என்று உட்கார்ந்தோம். மறுநாள் காலையில் ஜவ்வாது மலைப் பிராந்தியத்தைச் சுற்றிப் பார்த்துச் செய்திகளைச் சேகரிக்க ஆரம்பித்தேன்.

ஒரு மலையிலும், ஒரு காட்டிலும் சுற்றி அடைந்த அனுபவங்களை வைத்துக்கொண்டு, மற்றெரு மலையிலும், காடுகளிலும் பிரயாணம் செய்ய முடியாது.

மலைக்காட்டில் பிரயாணம் செய்து ஒரே லாரியை "ரிப்பேர்" செய்வது போன்று. எப்படி ஒரு பள்ளி வகுப்பில் உள்ள எல்லா மாணவர்களுக்கும் ஒரேவிதமான மூளை இல்லாமல், மாணவனுக்கு மாணவன் வேறுபடுகிறதோ— போதிக்கும் தன்மைகள் மாறுபடுகிறதோ அப்படியே,

மலைக்கு மலை, காட்டுக்குக் காடு பிரயாண அனுபவங்கள் வித்தியாசப்படுகின்றன. அவைகள் மட்டுமா? ஒவ்வொரு

காட்டிலும், மலையிலும் வாழும் மக்களிடம் பழகும் தன்மையும், பேசும் முறையும் கூட மாறுபடுகின்றன. ஜவ்வாது மலையில் வேலை முடிந்ததும், சற்று ஓய்வு பெறலாமென்று வீடு வந்து சேர்ந்தேன். ஆனால், மைசூரில் உள்ள சிறு மாணவர்களின் அழைப்புக்கு இசைந்து சில ஆண்டுகளுக்கு முன் மறுபடியும் அங்கே சென்றிருந்தேன். அப்பொழுது மைசூரிலிருந்து உதகைக்கு நூறு மைல் என்றும் பஸ்ஸிலேயே போகலாமென்றும், அதில் சுமார் எழுபது மைல் "பண்டிபூர்" காட்டின் வழியாகப் பஸ் ஓடுகிறது என்றும் கேள்விப்பட்டேன். அதைக் கேட்டதும் "எழுபது மைல் காட்டின் காட்சிகளையாவது கண்குளிரக் காணலாமே" என்ற எண்ணம் உண்டாயிற்று. பிறகு வழிகாட்டியுடன் பயணம் தொடங்கினேன். ஆனால் அந்தக் காட்டுப் பிரதேசத்தில் கால்நடையாகச் சென்று, சில விஷயங்களைக் காணவேண்டும் என்ற அவா ஏற்பட்டது. மைசூரில் எனக்கு நல்ல வழிகாட்டி கிடைத்தான். இருவரும் பஸ்ஸில் பயணமானோம். பஸ் மைசூரை விட்டதும், ஆனந்தமாகத்தான் பறந்து சென்றது. நேரம் போவதே தெரியாமலிருந்தது. பஸ் ஓடிக்கொண்டே இருந்தது. "காட்ரோடு" என்ற பலகையைக் கண்டதும் என் உள்ளத்தில் ஒருவிதமான சோர்வு ஏற்பட்டது. நாம் குறித்த இடத்திற்குப் போவதற்குள் இருட்டிவிடும் போலிருக்கிறதே என்று என் உள்ளத்தில் திகில் ஏற்பட்டது. மைசூரைவிட்டுப் பஸ்ஸும் சுமார் 40 மைல்களுக்குமேல் ஓடிக்கொண்டிருந்தது. இரு பக்கங்களிலும் அடர்த்தியான காடுகள் வளர்ந்திருந்தன. அந்தக் காட்டில் யானைக் கூட்டங்களும், புலி, கரடி, மான், குரங்கு முதலியவைகளும் அதிகமாக இருந்தன. குரங்குகளைக் கண்டதும், பஸ் ஓட்டி சற்று நிதானமாக ஓட்ட ஆரம்பித்தான். வாய் கறுத்த பெரிய குரங்குகளின் கூட்டம் ஒன்று வந்து பஸ்ஸை சூழ்ந்து கொண்டது. அவரவர்கள் தம் கைகளில் கிடைத்ததைக் குரங்குகளுக்கு எறிந்தார்கள். சிறியோர் முதல் பெரியோர் வரையில் மிகவும் குதூகலத்துடன் அந்தக் காட்சியைக் கண்டார்கள். திடீரென்று

"என்னுடைய பூட்ஸைக் காணோமே' என்று ஒருவர் கூறினர். தேடினோம். காணோம். சிறிது நேரத்திற்கெல்லாம் அது மரத்திலிருந்ததைக் கண்டோம். பஸ்ஸும் புறப்பட்டது. அதுவும் பண்டிப்பூர் காட்டின் எல்லையை வந்து அடைந்தது. நானும் வழிகாட்டியும் இறங்கினோம்.

அன்றிரவு பண்டிப்பூர் காட்டில் நண்பருடைய இல்லத்தில் தங்கினோம். மறுநாள் காலையில் நானும் நண்பரும் வண்டிப் பாட்டையில் சிறிது தூரம் மாட்டு வண்டியில் சென்றோம். மாட்டு வண்டியில் சென்ற பயணம் எனக்குப் போதும், போதுமென்று ஆகிவிட்டது. ஆகையால் வண்டியிலிருந்து இறங்கி ஒற்றையடிப் பாதையின் மூலம் நடந்தோம். நானும் நண்பரும் பேசிக்கொண்டே ஆனந்தமாகச் சென்றோம். இங்ஙனம் பேச்சில் ஈடுபட்டிருந்தோமே ஒழியே நாங்கள் எவ்வளவு தூரம் காட்டுக்குள் போகிறோம் என்பதை முற்றிலும் மறந்தோம். எங்களுடன் குறும்பர் இருவர் அன்று வந்தார்கள். அவர்களில் ஒருவன் திடீரென்று மூச்சை இழுத்துப் பிடித்தான். உடனே அதைக் கவனித்த நான் "என்னப்பா மோபம் பிடிக்கிறாய்?" என்று கேட்டேன். இங்ஙனம் காட்டில் காடர்களுடன் பிரயாணம் செய்யும் பொழுது, திடீரென்று மோப்பம் பிடித்தால் நான் மிகவும் ஜாக்கிரதையாக இருப்பது வழக்கம். நான் குறும்பனைக் கேட்டதும், "ஒன்றுமில்லை. என்னமோ இரத்த வாடை வீசுகிறது. அதற்காகத்தான் மோப்பம் பிடித்தேன்." என்றான் அவன்: அப்பொழுதுதான் என் நண்பரும், "காட்டில் வெகுதூரம் வந்துவிட்டோம்." என்று கூறினர். "சரி! நாங்கள் இங்கேயே இருக்கிறோம். நீ அந்த மரத்தின் மேல் ஏறி நான்கு பக்கங்களிலும் பார். ஏதாவது உன் கண்களில் பட்டால் உடனே சைகை காட்டினால் போதும். நாங்களும் மரத்தில் பாய்கிறோம்" என்றேன் நான். மரத்தில் ஏறிய குறும்பன் நான்கு பக்கங்களிலும் பார்த்தான். நாங்கள் நிற்குமிடத்திலிருந்து சற்று தூரத்தில் எதையோ கண்டவன் போல், ஓசை செய்யாமல் மரத்திலிருந்து இறங்கினான். காதோடு காதாய் என் நண்பரிடம் எதையோ

கூறினன். அவ்வளவுதான். நண்பர் முதலிலும், அவருக்குப் பின்னல் நானும், எனக்குப் பின்னல் இரு குறும்பர்களும் தொடர ஓட ஆரம்பித்தோம். புதர்களில் உள்ள முள் எங்கள் மேல் உராய்ந்து கிழிக்காதபடி எங்கள் கையிலிருந்த தடியைப் புதர்களுக்குக் குறுக்காகப் பிடித்துக் கொண்டோம். கண்ணை மூடிக்கொண்டு, வந்த வழியே புதர்களிலும், செடிகளிலும் புகுந்து புகுந்து ஓடினர் நண்பர். அவருக்குப் பின்னல் நாங்களும் தொடர்ந்து ஓடினேம். புதர்களின் இடையே ஓடியதால் சட்டையின் இரண்டு கைப் பக்கங்களும் கிழிந்து விட்டன. வெகுதூரம் ஓடிவந்து விட்டோம். பிறகு சாலை தெரிந்ததும், சற்று நடக்க ஆரம் பித்தோம்.

"நாமிருந்த இடத்திலிருந்து சற்றுதூரத்தில் ஒரு புலி மாட்டை அடித்துக் குருதியைக் குடித்துக் கொண்டிருந்த தாம். அந்தக் குருதியின் வாடையால் தான் நாம் வருவதை யும், மனித வாடையையும் புலி மோப்போம் பிடிக்காமல் இருந்தது போலும்" என்று கூறினர் நண்பர். "நீங்கள் இந்தச் செய்தியை அங்கேயே சொல்லியிருந்தால், எனக்கு ஓடக் கூடக் காலே வந்திருக்காது" என்றேன். நான் 'அதற்காகத் தான் நான் அங்கே சொல்ல மறுத்துவிட்டேன். ஓடிவருவதே நலம்" என்று அவர் கூறினர். வேட்டைக்கென்று காட்டுக்குச் சென்றிருந்தால், அதற்கு வேண்டிய முன் எச்சரிக்கை களுடன் சென்றிருப்போம். ஆனல் நாங்கள் அன்று இயற்கையின் எழில்மிக்கக் காட்சிகளைக் கண்டு களிக்கவே. ஆனல் வெகுதூரம் காட்டினுள் அன்று பேச்சுவாக்கில்நடந்து சென்றுவிட்டோம். நண்பரும், நானும் அன்று பண்டிப்பூர் காட்டில் அவர் இல்லத்தில் நல்ல விருந்து உண்டபின் நன்ருக ஓய்வு எடுத்துக்கொண்டோம்.

# பயணத்தில் சிந்தனை

மறு நாள் காலையில் மைசூரிலிருந்து—உதகைக்குப் போகும் பஸ்ஸில் "தோல் கேட்—மசினி குடி வழி" என்று கேட்டால் போது மென்று நண்பர் கூறினர். நண்பரின் பேச்சைக் கேட்டு நானும் என் நண்பரும் மைசூர் பஸ்ஸில் ஏறிப் பகல் சுமார் ஒரு மணிக்கு மசினி குடிதோல் கேட்டை வந்து சேர்ந்தோம். எங்களைத் தோல் கேட் — மசினிகுடி வழியில் இறக்கி விட்ட மைசூர் பஸ் உடனே புறப்பட்டு விட்டது. பஸ்ஸை விட்டு இறங்கியதும், பக்கத்திலிருக்கும் கடையில், "மசினிகுடி போகவேண்டும் எத்தனை மணிக்குப் பஸ் வரும்" என்று கேட்டேன். அவர் உடனே "ஐயையோ!" என்று ஆரம்பிக்கும் பொழுதே எங்கள் இருவருக்கும் இடி விழுந்தது போல் தோன்றியது. "நீங்கள் இங்கே ஏன் இறங்கினீர்கள்! மசினி குடிக்குக் கூடலூரி லிருந்து தான் பஸ் வர வேண்டும். இந்த வழியாக அந்தப் பாலத்தின் பக்கமாகத்தான் போகும். ஆனல் சில நேரங் களில், "இடமில்லை" என்று கூறு விடுவார்கள். ஆகையால் நீங்கள் மைசூர் பஸ்ஸிலேயே கூடலூர் போயிருந்தால், அங்கு உணவு விடுதியில் தங்கியிருக்கலாம். உங்களுக்கு இப்பொழுது பஸ் கிடையாது. மாலை ஆறரை மணிக்குத் தான் பஸ் கிடைக்கும். அதில் இடம் கிடைக்க வேண்டுமே! அது மசினி குடிக்கு மாலை சுமார் ஏழு மணியளவில் போய்ச் சேரும், என்று அவர் கூறினர். அவரிடம் நாங்கள் பேசும் பொழுது பகல் ஒரு மணி இன்னும் ஆறு மணி நேரம் நாம் இந்தக் காட்டில் உட்கார்ந்திருக்க வேண்டுமே, என்ன செய்வது என்று நினைத்துக் கொண்டு அந்தக் காட்டையாவது சுற்றிப் பார்க்கலாமென்று கருதிச் சுற்றிப் பார்த்தோம். எங்குப் பார்த்தாலும் முந்திரி மரங்களைக் காட்டு இலாக்கா

வினர் பயிர் செய்திருக்கிறார்கள். யானைக்காடு இந்தக்காட்டில் காடோமுந்திரிப்பழங்கள் உண்டானால் எவ்வளவு பழங்கள் யானைகளின் அட்டூழியத்திற்குப் பலியாகுமோ தெரிய வில்லையே!

அக்காட்டைச் சுற்றிக் கொண்டு வரும் பொழுது, ஓர் இடத்தில் சில குடிசைகள் இருந்ததைக் கண்டோம். திடீரென்று எங்களைக் கண்டதும், சுமார் நான்கு அடி உயரத்தில் ஓர் உருவம் "டக்"கென்று தோன்றி மறைந்து உருண்டது. அது மனித உருவமா? அல்லது மிருகமா? என்பதே தெரியவில்லை. அதைப் பார்ப்பதற்காகக் காலை வீசி வைத்து ஓடினோம். பிறகு என்னுடன் வந்த வழி காட்டி அவ்வுருவத்தைப் பார்த்துக் காட்டு மொழியில், "ஓடாதே" என்று கூறினான். அவ்வுருவம் ஒரு மனிதன்தான். அவன் நின்றதும், நாங்கள் அவன் அருகில் சென்றுப் பார்த்தோம். அவன் முகத்தில் முன் பக்கத்தில் மயிர் நரைத்துக் கொத் தாகத் தொங்குகிறது. தலையில் இருக்கும் மயிர் நான்கு பக்கங்களிலும் பரவிப் பரட்டையாக இருந்தது. இரவில் அவனைப் பார்த்தால் கட்டாயம் அவனை ஒரு மிருகம் என்று தான் கருத நேரிடும். அவனைக் கண்டதும் உடனே அவனைப் புகைப்படம் பிடிப்பதற்காக என் காமிராவைத் தயார் செய் தேன். அதைக் கண்ட அவன், "என்னைப் படம் பிடிக்க வேண்டாம்," என்று ஒரே ஓட்டமாக ஓட ஆரம்பித்தான். "நீ ஓடினாலும் நான் படம் பிடித்து விடுவேன்" என்று கூறினேன்.

"என்னைப் படம் பிடித்தால் உனக்குக் கால் நடக்க வராது. தரையில் அப்படியே ஒட்டிக் கொள்ளும்படி செய்து விடுவேன்" என்று கூறி நின்றான்.

அதைக் கேட்டதும் எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அவன் என்னுடைய கால்களைத் தரையில் ஒட்டிக் கொள்ளும்படி செய்வானாம்.

"சரி" படம் பிடிக்கவில்லை. ஆனால் என் கால்களைத் தரையில் ஒட்டும்படி செய் பார்க்கலாம்." என்று கூறினேன்.

பயணம் செய்யும் பொழுது பல பக்திமான்களையும், பல சந்நியாசிகளையும் நான் பார்த்திருக்கிறேன். சிலர் தாங்கள் ஓட்டி வரும் லாரியிலும் என்னை ஏற்றிக் கொண்டு வருவதுண்டு. சில லாரி டிரைவர்கள் எவ்வளவோ சக்தி வாய்ந்த பக்தர்களாகவும் இருக்கிறார்கள். ஆகையால் என் பயணத்தில் யாராவது ஏதாவது கூறினால், அதை நான் உடனே மறுப்பதில்லை.

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன், "அமெரிக்கா சந்திர மண்டலத்துக்குப் போக முடியும்" என்று-கூறி இருந்தால் நாம் என்ன நினைத்திருப்போம். "சரியான பைத்தியம்" என்றே பல அமெரிக்கர்களும் கூறியிருப்பார்கள் அல்லவா? ஆனால் இன்று சந்திர மண்டலத்துக்கு மக்கள் போய் வந்துவிட்டார்கள்.

அந்தக் காட்டில் அன்று அவன் கூறியபொழுது என் கால்களைத் தரையில் ஒட்டச் செய்வானோ என்றதோர் அச்சம் எனக்கு இருந்தது. ஆகையால் நான் அவனைக் கோபித்துக் கொள்ளவில்லை. நான் கூறியதைக் கேட்டதும், உடனே அந்தக் காடன் சில பச்சிலைகளை எடுத்துக் கசக்கி என்னவோ, "மொண-மொண" வென்று சொன்னான். எனக்குக் கால்களில், "விறு-விறு" என்று ஓர் உணர்ச்சி தோன்றியது. பிறகு என்னால் என் கால்களை அசைக்க முடியவில்லை. உடனே, "வேண்டாம்" என்று கூறினேன். "ஏன் என் மேல் உமக்கு நம்பிக்கை இல்லையா? உங்கள் ஊரில் தேள் கொட்டினால் சாவியாலோ அல்லது கத்தியாலோ விஷம் இறக்குவதைக் கூட நீங்கள் பார்த்ததில்லையா?" என்று என்னை கேட்டான். இதைக் கேட்டதும் என் சிந்தனைகள் சிதறின. "பார்த்திருக்கிறேன்" நீ இப்பொழுது செய்யும் சக்தியில் நம்பிக்கையும் இருக்கிறது. என் கால்களில் சக்தி இல்லாமல் செய்து விட்டாயே அது, எப்படி? நீ கையில் எடுத்த அந்தப் பச்சிலைகளுக்கும், நீ எதையோ ஓதினாயே அதற்கும் என்ன தொடர்பிருக்கிறது? அவைகளை எனக்குக் காட்டவும், சொல்லவும் முடியுமா?" என்று கேட்டேன்.

"அவைகளை எல்லாம் காட்டக் கூடாதுங்கோ. சொல்லவும் கூடாதுங்கோ. மீறிச் செய்தால் எங்கள் குல தெய்வத்திற்குக் கோபம் வரும். அப்படிக் கோபம் வந்தால், எங்கள் பாடியில் ஒருவரும் உயிரோடு வாழ முடியாதுங்கோ" என்று கூறி மறுத்து விட்டான். நாங்கள், சிறிது நேரம் மௌனத்துடன் இருந்தோம். அவன் எங்களிடம் சொல்லா மலே நடந்தான். பிறகு உட்கார்ந்து உருண்டோடுவதைப் போல் ஓடி மறைந்து விட்டான். அவனை மறுத்துப் பேச எங்களுக்குத் துணிவு ஏது? அவன் உருண்டோடியதைக் கண்டதும், பண்டைக் கால மனிதனின் தோற்றம் என் நினைவுக்கு வந்தது.

பண்டை நாளில் ,மக்கள் நிற்கவும் நடக்கவும் அறியா மலிருந்தார்கள். மிருகங்களிடமிருந்து, பறவைகளிடமிருந்தும் நடக்கவும், பறக்கவும், நீந்தவும் கற்றுக் கொண்டான் மனிதன் என்பது ஆராச்சியாளர்களின் கருத்து.

அவன் உருண்டு சென்ற தோற்றம் ஒரு பெரிய பாறை மலையிலிருந்து உருண்டால், காண்போருக்கு எப்படித் தோன்றுமோ, அப்படியே எங்களுக்குத் தோன்றியது.

"அவனை ஏன் புகைப்படம் பிடிக்க வேண்டுமென்று கேட்டீர்கள்" என்று கேட்டான் வழிகாட்டி "ஓ! அதுவா? நெஞ்சையள்ளும் தஞ்சையில் சர்போஜி மன்னன் ஆயிரக் கணக்கான நூல்களைத் தம்முடைய நூல் நிலையத்தில் சேர்த்து வைத்தார்.

சில நூல்களையும், ஓலைச்சுவடிகளையும், பட்டுத்துணியில் மூட்டையைப் போல் சுற்றியும் வைத்திருந்தார். நான் சில ஆண்டுகளுக்கு முன் அவைகளைக் காண வேண்டுமென்று சுமார் ஒரு வாரம் தஞ்சையில் தங்கியிருந்து அவற்றைக் கண்டபோது அவர் சேகரித்த பல நூல்களில், "மனிதனும் மிருகமும்" (1937) என்ற நூல் ஒன்றில் மனித முகத்தையும் மிருக முகத்தையும் அழகாகச் சித்திரத்தின் மூலம் ஒப்பிட்டுக் காட்டியிருப்பதைக் கண்டேன். அதே போல்

இக்காலத்தில் யாராவது கிடைத்தால் உடனே புகைப்படம் எடுக்க வேண்டுமென்று நீண்ட நாட்களாக எண்ணிக் கொண்டிருந்தேன். அப்படி யாரையாவது காட்டிலோ நாட்டிலோ கண்டால் உடனே என் சிந்தனை தஞ்சையில் அன்று கண்ட நூலின் மேல் தான் ஓடுகிறது. இவனுடைய முகமும் குரங்கின் வட்டமான முகமும் ஒத்திருக்கின்றன. உதட்டுப் பாகமும் தாடையும் முன்னால், நீண்டிருப்பதைக் கண்டேன்.

ஆகையால் புகைப்படம் எடுக்கலாமென்று நினைத்தேன். ஆனால் மிஞ்சிப் புகைப்படம் எடுத்தால், நமக்கு என்ன ஆபத்து உண்டாகுமோ என்று தான் பேசாமலிருந்து விட்டேன். மேலும் இதைப் போன்ற அப்பாவிகளுக்கு விரோதமாக நம்முடைய அதிகாரத்தைக் காட்டி எதை யாவது செய்ய நான் விரும்புவதில்லை. மேலும், அவனே அதை விரும்பினால் இன்னும் ஏதாவது சில இரகசியங்களையும் நான் தெரிந்து கொண்டு, அதைப் பத்திரிகையின் மூலம் தமிழ் நாட்டுக்குத் தெரியப்படுத்தலாம் அல்லவா? அதை யெல்லாம் நினைத்துத் தான் நான் பேசாமலிருந்தேன். எப்படியும் ஒரு நாளைக்கு அவனைப் புகைப்படம் பிடிக்காம லிருக்க மாட்டேன்'' என்று கூறினேன். இவ்வாறு பேசிக் கொண்டே மைசூர் உதகை பஸ் போகும் சாலையை அடைந்தோம். சிறிது நேரத்திற்கெல்லாம் ஆண்டவன் அருளால் ஒரு பஸ் மசினி குடிக்குத் திரும்பியது; அதில் இடமில்லை. ஆனால் அதை நிறுத்தினால் எங்கள் விருப்பத்தைக் கூறினோம். அவர்களின் உதவியால் நாங்கள் அன்று மாலை சுமார் ஏழு மணிக்கெல்லாம் மசினிகுடி போய்ச் சேர்ந்தோம். 'மசினிகுடி' என்பது மிகப் பழைய ஊர். இன்று அது காடாக இருக்கிறது. மைசூர் பகுதியில் வாழும் படகரும், சுக்காலியரும், கோடங்கியரும் இந்த மசினிகுடியின் வழியாகத்தான் முற்காலத்தில் உதகைக்குப் போனதாகக் கூறுகின்றனர். 'மசினி' என்பது, அவர்களின் தெய்வம். அதைக் கொண்டுவந்து மரத்தடியில் வைத்துவிட்டு, அதற்கு ஒரு கோவிலைக்கட்டினார்கள். பண்டைக்காலத்தில் பெரிய

காடாக இருந்தது. வியாபாரிகள் சந்தைக்கு வரும் பொழுது இந்தத் தெய்வத்தின் அருகில் தான் தங்கினார்களாம். நாளடைவில் இந்த இடத்தில் வியாபாரிகளுக்காகக் கடைகளும், பயணம் செய்பவர்களுக்காக வீடுகளும் கட்டப் பட்டதாலும் 'மசினி'க்கும் ஒரு 'குடி "கட்டப் பட்டதாலும் 'மசினி+குடி' என்று பெயர் உண்டாயிற்று.

தென்னிந்தியாவில் உள்ள பூர்வீகக் குடிமக்களில் "கசவா" என்ற ஒரு ஜாதியினர் இருக்கின்றனர். இவர்களைப் பற்றி யாருக்கும் தெரியாது. இந்தியாவிலேயே மிகவும் குறைந்த ஜனத் தொகையுடைய இன மக்கள் இவர்கள். கசவர்களின் எண்ணிக்கை 423 தான்.

இவர்கள் மலையடி வாரத்தில் சதுப்பு நிலங்களில் வாழ்கிறார்கள்; மலேரியா என்ற கொடிய நோயின் உற்பத்தி ஸ்தானமான சதுப்பு நிலங்களை அடுத்து வாழும் கசவர்களின் காரியம் என்ன வென்பதை அறிந்தால் இன்னும் வியப்பாக இருக்கும். யானைகளின் கழிவுப் பொருளைச் சேகரிப்பது தான் இவர்களின் வேலை. இந்தக் கழிவுப் பொருள்களுக்கு நல்லகிராக்கி. ஆகவே அடிக்கடி இதை ஏற்றிச் செல்ல லாரிகள் இந்தப் பிராந்தியத்துக்கு முக்கியமாக இந்தக் கசவர்களைத் தேடிச் செல்லும். இந்தக் கசவர்களைச் சந்திக்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு ஏற்பட்டது. மலைப்பாம்பு களும் யானைகளும் வாழும் பயங்கரமான காட்டுப் பிரசேதத் திற்குப் பயணமாக வேண்டும். ஏதோ ஒரு அசட்டு தைரியத்தில் கிளம்பிவிட்டேன்.

மசினி குடியிலிருந்து பத்து மைல்கள் நடந்து மலையடி வாரத்திற்குச் சென்றால் தான் கசவரைப் பார்க்க முடியும். அந்த மலையடிவாரத்தைப் பற்றிப் பலர் பலவிதமாக பயங்கரமான செய்திகளைக் கூறினார்கள். ஆனால் மசினி குடியில் ஒருவர் மட்டும் "அதோ தெரிகிறதே அது காட்டு இலக்கா வீடு; அவர் நல்லவர், உதவி செய்வார்" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார். நேரமோ மாலை சுமார் ஏழுமணி. இருள் சூழ்ந்து இருந்தது.

அவர் எந்தத் திசையில் கையைக் காட்டினர். எதைக் குறித்து 'அதோ' என்று சொன்னர், என்பதொன்றுமே எனக்குக் புரியவில்லை. என்னைச் சுற்றிலும் இருள். எதையுமே என்னல் காணமுடியவில்லை. கால்கள் அடிபெயர மறுத்தன. கொஞ்ச தூரம் தட்டுத் தடுமாறிக் கொண்டு சென்றதும் ஒரு போர்டு தெரிந்தது, தீப் பெட்டியின் உதவியால் போர்டை வாசித்தேன். ஆனந்த மடைந்தேன். அது தான் காட்டிலாகா அதிகாரியின் இல்லம்.

"சார்—சார்" என்று குரல் கொடுத்தேன். ஒரு சோலையின் நடுவே அவர் வீடு இருந்ததால் சற்று உரக்க, அதுவும் பல முறை கூப்பிடவேண்டி இருந்தது. கடைசியில் "யாரது—?" என்ற குரல் கேட்டது. பிறகு லாந்தருடன் என் அருகில் அவர் வந்தார்.

"இன்றிரவைக் கழிக்க எனக்கு வசதி செய்து கொடுக்கவும். நாளைக்கு நான் யானைக் காட்டில் இருக்கும் கசவரைக் காணச் சென்று விடுவேன்" என்றேன். அவரும் என்னைத் அழைத்துக் கொண்டு போய்த் தமது காரியாலத்தில் வேலை செய்வோருக்காகக் கட்டியிருக்கும் விடுதி ஒன்றில் என்னை இருக்கும்படி கூறினர்.

அன்றிரவு நானும் என்னுடன் வந்த நண்பரும், காட்டிலாக்காவில் வேலை செய்யும் நண்பர்களும் சேர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். பிறகு எட்டு மணிக்குப் பக்கத்திலிருக்கும் ஓட்டலுக்குச் சென்ருேம். ஓட்டல் என்ருல் பெரிய மேஜை நாற்காலி எல்லாமிருக்குமென்று நினைக்க வேண்டாம். தூரத்திலிருந்து பார்த்ததும், 'இதுவா ஓட்டல்' என்று கேட்டேன். 'ஆமாம்' என்ருர் புதிய நண்பர். ஓர் ஓட்டைக் குடிசைதான் ஓட்டல். உள்ளே போனதும், "வாங்கோ'—வாங்கோ" என்று மரியாதையாக அழைத்தார். ஒரு மலையாளி. "டேய்! கல்லெடுத்துப் போடு" என்ருர். கல்லெடுத்துப் போடு என்று சொன்னதும் முதலில் பயந்து போனேன். ஏனென்ருல் கல்லை எடுத்து அடிப்பானே என்ற பயம் தோன்றியது.

அந்த ஓட்டல் பையன் எங்கள் இருவருக்கும் இரண்டு தல் கொண்டுவந்து போட்டான். அவற்றின் மீது உட்கார்ந்தோம். பிறகு எங்கள் எதிரில் ஒரு பீங்கான் தட்டில் சாதம் போட்டு, அதிலேயே குழம்பை ஊற்றி, அதிலேயே பொரியலையும் வைத்துக் கொண்டுவந்து வைத்தான். ஏதோ சிறு பிள்ளைகளுக்குக் குழம்பை ஊற்றி கொண்டுவந்து கொடுப்பதைப் போலிருந்தது அந்தக் காட்சி. அந்தக் காட்டில் இதாவது கிடைத்ததே என்று அள்ளி அள்ளி வாயில் போட்டுக் கொண்டோம். பிறகு நானும் நண்பர்கள் மூவரும் எங்களுக்குக் கொடுக்கப்பட்ட அறைக்கு வந்தோம். அந்த அறையில் காட்டுக் கொம்புகளால் செய்யப்பட்ட கட்டிலும், தேங்காய் நாரால் செய்யப்பட்ட ஒரு படுக்கையுமிருந்தன. அதன் மேல் என் போர்வையை விரித்து நானும் என் நண்பரும் ஒரு கட்டிலிலும், மற்றவர்கள் இருவரும் ஒரு கட்டிலிலுமாகப் படுத்துக் கொண்டோம்.

நானும் என் நண்பரும் படுத்து சுமார் பத்து நிமிஷங்கள்தான் தூங்கினேம். பிறகு எழுந்துப் பார்த்தால், நானும் என் நண்பரும் ஆயிரக்கணக்கான மூட்டைப் பூச்சிகளின் மேல் படுத்திருப்பது தெரிந்தது: என்ன செய்ய முடியும்? பகலெல்லாம் அலைந்து, இரவில் இளைப்பாரலாம் என்று ஆசையாக வந்த இடத்தில் எங்கள் கதி இப்படி என்ருல் எங்களுக்கு எப்படி இருக்கும். அந்தக் கட்டிலில் படுக்கவே முடியாது என்ற தீர்மானத்தில் எழுந்து தரையிலாவது படுத்துக் கொள்ளலாம் என்று நினைத்து எங்கள் போர்வையைத் தரையில் விரித்தோம். உடனே அடுத்த கட்டிலில் படுத்திருக்கும் எங்கள் புதிய நண்பர்கள் தரையில் படுக்க வேண்டாம். இங்கே பாம்புகள் அதிகம். ஆகையால் கட்டிலில் படுத்தால் கொஞ்ச நேரம் மூட்டை கடிக்கும். அவைகளுக்கு வயிறு நிறைந்தால் மறுபடியும் மூட்டைகள் கடிக்கா. பிறகு தூங்கி விடலாம். ஆனுல் கீழே படுத்தாலோ ஒரே தூக்கமாகத் தூங்க வேண்டியதுதான். அவ்வளவு கொடிய விஷப் பாம்புகள் இருக்கின்றன.'' என்று கூறினுர்.

என்ன செய்வது என்றே தெரியவில்லை. நானும் என் நண்பரும் பேசாமல் எழுந்து வெளித் திண்ணையில் வந்து உட்கார்ந்தோம்.

இரவு முழுவதும் கையிலிருக்கும் பல கட்டு பீடிகளை ஊதித் தள்ளினோம்.

## நடுக் காட்டில் நான் பட்ட பாடு

மசிணி குடியில் தங்கி இருந்த சமயம் காலை ஆறு மணிக்கெல்லாம் மசிணி குடி யானைக் காட்டுக்குப் போக தயாராக, லாரிக்கு நின்றோம். மிகக் குளிர்ந்த தண்ணீரில் குளித்தாலும், இரவு தூக்கமில்லாததாலும் எங்களுடைய கண் எரிச்சல் நீங்கவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் லாரி ஒன்று வந்தது. அதில் நானும் நண்பரும் ஏறிக் கொண்டோம். லாரி ஓட்டினர் எங்களுக்கு நண்பராகி விட்டார். ஆனால் அது யானைகளின் கழிவுப் பொருள்களைச் சுமந்து வரும் லாரி அல்லவா? ஆகையால் ஒரே நாற்றம் வயிற்றைக் குமட்டியது. அடிக்கடி எங்கள் கைக் குட்டையிலிருக்கும் நீலகிரி தைலத்தை மூக்கில் தடவிக் கொண்டோம். வழி நெடுக யானைகளின் அட்டூழியங்களைக் கண்டு உடல் நடுங்கினோம். கடைசியாகக் கசவர்களின் குடிசையருகே லாரி நின்றது.

இரண்டாவது முறையாக சென்ற நான் இப்பொழுது கசவர்களுடன் ஏழு நாட்கள் தங்க வேண்டுமென்று கருதினேன். அந்த ஏழு நாட்களில் சரியான உணவும் குடி தண்ணீரும் கிடைக்கவில்லை. அவர்களைப் பற்றிய குறிப்புகளை ஒரு வகையாக எடுத்து முடித்து விட்டேன். மறுபடியும் லாரி வர

வேண்டுமே என்று காத்திருக்கும்பொழுது, கசவர்களில் ஒரு வனுக்குத் திடீரென்று தொத்து நோய் உண்டானது. அப் பொழுது என்னுடன் வந்த நண்பர் மிகவும் பயந்து விட்டார். "லாரியைப் பார்த்துக் கொண்டிருந்தால் நாம் எமலோகத்தைத் தான் பார்க்க வேண்டும். எனக்குக் குறுக்கு வழி தெரியும். அந்த வழியில் யானைகள் கிடையா. நடந்தே போகலாமென்று பிடிவாதம் செய்தார். அவருடைய பயந்த சுபாவத்திற்கும், முட்டாள் தைரியத்திற்கும் நான் கட்டுப்பட்டேன். ஏனென்றால் வரும் பொழுது இருவர் வந்தோம். போகும் பொழுது அவரை மட்டும் அனுப்புவது சரியன்று. ஆகையால் நாங்கள் லாரிக்காகக் காத்திருக் காமல் உடனே காட்டு வழியாக நடக்க ஆரம்பித்தோம்.

ஆதிவாசிகள் வாழுமிடத்திலிருந்து பதினைந்து மைல்கள் நடந்தால்தான் நாங்கள் மைசூர்— உதகை போகும் மற்றொரு பக்கத்திலிருக்கும் பஸ் சாலையை வந்து அடைய முடியும். ஆகையால் அந்த ஆதிவாசிகள் எங்களுக்கு வழிப் பிரயாணத்திற்குக் கொஞ்சம் கட்டி வெல்லமும், ராகிக்களியும் கட்டிக் கொடுத்தார்கள்.

அவற்றைப் பெற்றுக்கொண்டு ஏழாம் நாள் காலை ஐந்து மணிக்கெல்லாம் நடக்க ஆரம்பித்தோம். மாரிக்காலத்தில் இவ்விதமான பயணத்தை மேற்கொண்டது, மிகவும் தவறு என்று பலர் கூறினார்கள். தொத்து வியாதிக்குப் பயந்தல்ல, வா நடக்கலாமென்று முடிவு கட்டினோம். இரண்டு மூன்று மைல்கள் நடந்து வந்ததும், வழி காட்டி குறுக்கு வழியில் போகலாமென்று கூற, நானும் தலையை ஆட்டிக் கொண்டு அவ்வழியாக நடக்க ஆரம்பித்தேன். சிறிது தூரம் காட்டு வழியாகச் சென்றதும், அங்கு இரண்டு வழிகள் பிரிந்தன. அங்ஙனம் இரு பாதைகள் பிரியும் இடங்களில் என் பாடு கொஞ்சம் திண்டாட்டம்தான். அவன் வழி தெரிந்தவன் போல், ஒரு வழியில் நடக்க ஆரம்பித்தான். நானும் அவன் பின்னே நடந்து சென்றேன். காட்டுப் பாதையில் மேடும், பள்ளமும்; நீரோடைகளும் இருந்தன. கரடிகளைப் போல்

காட்சி தரும் உயரமான மரங்களும் இடி விழுந்து கருகிய மரங்களும் இருக்கக் கண்டோம். ஆங்காங்கே இருந்த தேன் கூடுகள், பெரிய அறைகளைப் போல் காட்சி கொடுத்தன. வெகு தூரம் சென்றபின் ஓர் ஓடையை அடைந்தோம். அங்குச் சென்றதும் சுற்று முற்றும் பார்த்தான் வழி காட்டி.

''நல்ல காலம், நாம் சரியான வழியில் தான் வந்திருக்கின்றோம். சரி இங்கேயே சாப்பிடுவோம்'' என்று அந்த ஓடையின் அருகில் உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு, ஓடையின் தண்ணீரைக் குடித்தோம். சிறிது நேரம் இளைப்பாறியபின், மறுபடியும் நடக்க ஆரம்பித்தோம். நெடிய மலைத் தொடர், கடுமையான ஏற்றம், வயிற்றிலும் கனம் இறங்கி இருக்கிறது என்ன செய்ய முடியும்? நடந்து தானே தீரவேண்டும் மேல் மூச்சும், கீழ் மூச்சும் வாங்க நடக்க ஆரம்பித்தோம் எங்கள் கையில் இருப்பது அச்சு வெல்லம் ஒன்று தான். சிறிது தூரம் சென்றதும்; அங்கும் இரண்டு ஒற்றையடிப் பாதைகள் பிரிந்தன. வழி காட்டி சிறிது நேரம் அவ்வழியில் நின்று யோசித்துக் கொண்டிருந்தான். ''என்ன யோசனை?'' என்று கேட்டேன்.

''ஒன்றுமில்லை'' யாராவது வந்தால் சரியான வழி எது என்று கேட்டுத் தெரிந்து கொண்டு மேலே நடக்கலாம். அவற்றுள் ஒன்று காட்டுக்குச் செல்லும் வழி. வேட்டையாடும் சிக்காரிகள் வேட்டைக்குச் செல்லும் போது நானும் அவர்களுடன் வந்திருக்கிறேன்.'' என்று கூறினான்.

இந்த வழி எங்கே முடிகிறதோ தெரியவில்லை. நடுக் காட்டில் சிந்தனை செய்து என்ன பயன்? யாரிடம் சீற்றம் கொள்ளமுடியும்? கடைசியில் ஏதோ ஒரு வழியில் நடக்கலாமென்று நடந்தோம். நடக்க, நடக்க வழி வளர்ந்தது. வழியில் மிருகங்களின் எலும்புக் கூடுகளும், துர்நாற்றமும் தான் அதிகமாக இருந்தன. சில இடங்களில் ஆடு மாடுகளின் உடல்களைக் கண்டு கலங்கினோம். இவைகளைக் கண்ட பின் தான், ''நல்ல வழியை விட்டு, காட்டுப் பாதையைத் தேர்ந்தெடுத்து விட்டோம்.'' என்று வழிகாட்டி உணர்ந்தான்.

சிறிது தூரம் சென்றதும், "உங்களுக்கு வேகமாக மரம் ஏறத் தெரியுமா?" என்று வழிகாட்டி திடீரென்று கேட்டான். "எனக்குச் சாதாரணமாகத் தட்டுத் தடுமாறித் தான் மரம் ஏறத் தெரியும், மேலும், என் புளி மூட்டை உடலை வைத்துக் கொண்டு, நான் எப்படி வேகமாக மரம் ஏற முடியும்?" என்று கூறினேன்.

"ஏதாவது ஆபத்து ஏற்பட்டால் நான் உடனே எந்த விதமான மரமாக இருந்தாலும் சரி, ஏறி விடுவேன். நீங்களும் உடனே மரம் ஏறி விடுங்கள்" என்று சர்வசாதாரணமாய்க் கூறினான். இதைக் கேட்டதும் என் உடல் நடுங்கியது. தாகம் நாக்கை வறட்டியது. ஒரு புறம் பசிக்கவும் ஆரம்பித்தது. வழியில் அச்சு வெல்லமும் ஒரு வழியாகத் தீர்ந்து விட்டது. என்ன செய்வதென்று தோன்றாமல் திகிலடைந்த உள்ளத்துடன், வழிகாட்டி காட்டிய வழியிலேயே பின்னால் ஓட்டமும் நடையுமாகத் தொடர்ந்தேன். கால் வலி தாங்க முடியவில்லை. நாங்கள் எதிர் பார்த்ததற்கு மேல் சுமார் பத்து மைல்கள் அதிகமாக நடந்து விட்டோம். எந்த ஓசையைக் கேட்டாலும், உடனே வழிகாட்டி நின்று பதுங்கினான். அவன் பதுங்கும் பொழுதெல்லாம் நானும் பதுங்கினாலும் எனக்குப் பேதி ஆவதைப் போன்ற உணர்ச்சி உண்டானது. நானும் அவன் என்னென்ன செய்தானோ, அவைகளை எல்லாம் உடனே செய்ய ஆரம்பித்தேன். ஆனால் என் உள்ளம் மட்டும் ஆண்டவனையே நினைத்துக் கொண்டிருந்தது. நடந்து சென்ற களைப்பிலும், இருள் சூழ்வதற்குள் காட்டைக் கடந்து சென்றால் போதுமென்ற எண்ணத்திலும் பசி, தாகமெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் மறைந்து விட்டன.

சில இடங்களில் வழி காட்டி மரத்தின் மேல் ஏறி, நான்கு திசைகளிலும் பார்த்து, மிருக வாடை அடிக்கிறதா? வென்று மோப்பம் பிடிப்பான். பிறகு மேலே நடக்க ஆரம்பிப்போம். சில இடங்களில் வழிகாட்டு ஓடினான், சில இடங்களில் வேகமாக நடக்க ஆரம்பித்தான். நானும்

அவன பின்னுல் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டே நடப்பதைக் கவனித்த வழி காட்டி, "ஏன் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடக்கிறீர்கள்? முன்னுல் கற்களும், மரத்தின் வேர்களும் பாதையின் குறுக்கே இருப்பதால் கால் இடறி விழாமல் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினுன். அதுவும் முக்கியமானதுதான் ஏனென்ருல் கால் இடறி விழுந்து காலோ, கையோ சுளுக்குப் பிடித்துக் கொண்டால் அல்லது —

அதற்கு மேல்? நினைக்கவே என் மனம் இடம் கொடுக்க வில்லை. அதற்குள் கண்களில் கண்ணீரும் வந்துவிட்டது. "என் பின்னுல் ஏதாவது வந்தால், என்ன செய்வது என்ற பயமே பெரிதாக இருக்கிறது!'' என்று கூறுவதற்குள் திரும்பிப் பார்த்ததால் காலிடறி விழுந்தேன். இங்ஙனம் திகில் அடைந்து நடக்கும் பொழுது, காட்டில் புலி, கரடி, முள்ளம் பன்றி, காட்டுப் பன்றி, நரி, ஓநாய் முதலியவைகளால் மனிதர்களுக்கு ஏற்பட்ட பல ஆபத்துக்களை வழிகாட்டி சொல்லிக் கொண்டே நடந்தான். என் உள்ளத்தில் பலவித பயம் குடிக் கொண்டது.

'இருட்டி விட்டால் என்ன செய்வது' என்று வழிகாட்டியைக் கேட்டேன்.

ஏதாவது ஓர் மரத்தடியில் காட்டு விறகுகளைப்போட்டுத் தீ மூட்டினுல் போதும். எந்தக் கொடிய மிருகமும் நம்முடைய மரத்தடியில் வராது'' என்று மிகவும் சாதாரணமாய்க் கூறிக்கொண்டே நடந்தான்.

இவ்விதமாகப் பயந்தவாறே அவனுக்கு முன்னுல் மூச்சைப் பிடித்துக் கொண்டு, வேகமாக நடக்க ஆரம்பித்தேன். எப்படியோ ஒரு வகையாக மைசூர்—உதகை பஸ் போகும் சாலையை வந்து அடைந்த பொழுது நன்ருக இருள் சூழ்ந்து கொண்டது. மைசூருக்கும் குண்டல் பேட்டைக்கும் இடையில் சாதாரணமாய் யானைகளின் நடமாட்டம் இருக்கும். ஆனுல் அன்று முழுமதி நாள் அன்று. ஆகையால் கொஞ்ச தைரியம் இருந்தது.

அந்த நடுவழியில் எந்தப் பக்கம் போனல் சீக்கிரமாக ஏதாவது ஓர் ஊரைப் போய்ச் சேர முடியும் என்று சிந்தித்த வாறே பயணம் செய்தோம். கொஞ்சம் முட்டாள் தனமான பயணத்தைக் கைக் கொண்டோம். பயணத் திட்டங்களைச் சரியாகத் தயார் செய்து கொள்ளவில்லை. ஏனென்ருல், திடீ ரென்று கசவர்களின் காட்டை விட்டுப் புறப்பட்டு விட் டோம் அல்லவா? குண்டல் பேட்டைக்குப் போவதா! கூட லூருக்குப் போவதா? இந்த இரண்டு ஊர்களும்; மைசூருக் கும் உதகைக்கும் நடுவே இருக்கும் கிராமங்கள் ஆனல் அன்று இருள் எங்களைச் சூழ்ந்து கொண்டதால், எந்தக் கிராமம் அருகில், எந்தப் பக்கத்திலே இருக்கிறது? என்ற சிந்தனையில் ஏதோ ஒரு பக்கம்; அந்தப் பெரிய ரோட்டில் நடந்து கொண்டிருந்தோம். பசி ஒரு பக்கம் காதை அடைக் கிறது. ஏதோ கொஞ்சம் செம்மண் நிலத்திலிருக்கும் தண் ணீரை எங்கள் தண்ணீர்ப் பையில் நிரப்பி வைத்திருந்தோம். கொஞ்சம் தூரம் சென்றதும் சில மைல்களுக்கப்பால் ஏதோ கார் வரும் ஓசை கேட்டது. ஆனல் எந்தப் பக்கத்திலிருந்து வருகிறது என்று தெரியவில்லை. உடனே மனத்தில் ஆண்ட வனை நினைத்துக் கொண்டே ரோட்டில் என் காதுகளைத் தரையில் வைத்துக் கேட்டேன். ஆம்! ஏதோ ஒரு லாரி வரு கிறது. அதனுடன் எந்த மிருகமும் பயந்து கொண்டு முன் னலோ பின்னலோ ஓடிவரவில்லை. லாரியின் சக்கரம் உரு ளும் ஓசை தவிர மற்ற ஓசைகள் எதுவும் தரையில் என் காதுகளுக்குக் கேட்கவில்லை. அந்த நிலையில் எங்களுக்கே தெரியாமல் கண்கள் கலங்கின. ஆனல் தைரியத்தையும் ஆண்டவன் மேல் நம்பிக்கையையும் கைவிட வில்லை. ஆண்ட வன் கருணையால் உதகையிலிருந்து ஒரு லாரி வந்தது. இருளில் தள்ளாடிக் கொண்டு நிற்கும் எங்கள் காட்சியைக் கண்ட அவர்கள், லாரியை எங்கள் அருகில் நிற்க வைப்பதற் குப் பதிலாக "நாங்கள் கொள்ளைக் கூட்டத்தினரோ வென்று நினைத்து எங்களை நன்ருகக் கவனித்துக் கொண்டே கொஞ்ச தூரம் சென்ருர்கள். அந்த லாரியின் பின்னல் நடந்து போகவே முடியாத நிலையைக் கண்டு, 'இவர்கள் உண்மை

யில் வழிபோக்கர்கள் தான்'' என்ற முடிவுக்கு வந்த பின் பிறகு லாரியை நிறுத்தினுர்கள். உடனே லாரிக்கு ஒரு பெரிய வணக்கம் செய்தேன். அதில் ஏறிக்கொண்டு இரவு சுமார் பத்து மணிக்கு குண்டல் பேட்டையில் ஒரு நண்பர் வீட்டைப் போய்ச் சேர்ந்தோம். அவர்நல்லசிக்காரி.மறுநாள் காலையில் தூக்க முடியாத அளவுக்கு கால்களில் வீக்கம் கண்டது; ஒருவாரம் வரையில் கால்களுக்கு வைத்தியம் செய்தோம். பிறகு அகமடைந்தோம். ஆனுல் இந்தப் பயண நிகழ்ச்சியை நான் எளிதில் மறக்க முடியுமா? என் கால்கள் வீக்கத்தைப் போக்கியவர் .திரு. நஞ்சன் என்பவர்; அவர் வீட்டில்தான் நானும் நண்பரும் சுமார் பத்து நாட்கள் இருந்தோம். வெளியூரிலிருந்து யார் வந்தாலும் அவர்களுடன் சிக்காரியாகத் திரு: நஞ்சன்தான் போவதுண்டு. அவர் வீட்டில் தங்கிய சமயம் கூறியது இது. ஒருநாள் நானும் நண்பரும் வேட்டைக்குச் சென்ருேம். பரண் கட்டிமரத்தின் மேல் உட்கார்ந்திருந்தோம். சிறிது நேரத்திற்கெல்லாம் எதிர்ப்புதரிலிருந்து 'சல சல'வென்று ஓசை கேட்டது. அப்படி ஓசைக் கேட்டதும் உடனே சுடக்கூடாது. ஏனென்ருல் சாதாரணமாய் நம்மைப் போலவே மற்றவர்கள் வேட்டைக்கு வந்தாலும் வரலாம்: அல்லது அரசாங்கச் சட்டப்படி இன்ன விலங்குகளை இந்த அளவுக்கு இந்த இந்த இடத்தில்தான் வேட்டையாடிச் சுடவேண்டும் என்ற கட்டுப்பாடு இருக்கின்றது.

இன்னும் சில விலங்குகளைச் சட்டப்படி வேட்டையாடக் கூடாது. இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுதுதான் புதரில் 'சல—சல' வென்று ஓசை கேட்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் அது நகர்ந்து எதையோ எட்டிப் பார்த்தது. உடனே அது எதைப் பார்க்கிறது என்று நாங்களும் 'பரண்' மேலிருந்தவாறே அத்திசையைப் பார்த்தோம். ஒரு பக்கத்தில் புலி. ஆனுல் மற்ருெரு பக்கத்தில் இருப்பது என்ன? என்ற சிந்தனையில் ஆழ்ந்தோம். நண்பர் வைத்திருந்து ஒரே ஒரு தோட்டாதான். ஆனுல் நாங்கள் சிக்கிக் கொண்டிருப்பது இரண்டு மிருகங்களிடம். ஏனென்ருல், அப்பொழுது மிரு

கத்தின் இறைச்சியைத் தின்ன மற்றெரு மிருகம் வந்திருக்கிறதே அது மனிதனேயும் அடித்துப்போடும் அல்லவா? ஒரே குழப்பம், என்ன செய்வதென்றே தெரியாமல் சிந்தனேயில் இருந்தோம். சந்திரன் கொஞ்சம் மேகத்திலிருந்து விலகி, எங்களுக்கு உதவி செய்தான். அந்த ஒளியில் நாங்கள் பார்த்தோம். நான் உடனே பயந்து போய் விட்டேன். ஒன்று புலி மற்றென்று பயங்கரமான காட்டுப் பன்றி. அது தன்னுடைய கழுத்து மயிர்களே எல்லாம் சிலிப்பிக் கொண்டும், தன்னுடைய பயங்கரமான கோரைப் பற்களே வெளியில் நீட்டிக் கொண்டும், கோபா வேசத்தோடு நின்று கொண்டிருந்தது.

இந்தப் பயங்கர ரூபத்தைக் கண்டால் தான், புலியே சற்று நிதானிக்கிறது போலும் என்று நாங்கள் நினேத்துக் கொண்டோம். இப்பொழுது எதை அடிப்பது, நம்மிடம் இருப்பது ஒரே தோட்டாதான். ஒன்று இறந்து விட்டால்; மற்றென்று மரத்தடியில் வந்து, நின்று விடும். பல தோட்டா இருந்தால் கவலே இல்லே. நம்மிடம் மருந்து இல்லே என்று அவைகள் தெரிந்து கொண்டால் பேசாமல் மரத்தடியில் வந்து படுத்துவிடும். பிறகு நாங்கள் பசியால் சாக வேண்டியதுதான். இதைப் போல் சங்கடப்பட்டுக் கொண்டிருந்த எவ்வளவோ பேரை என்னுடைய தகப்பஞரும் பாட்டஞரும் தற்செயலாகக் காப்பாற்றியிருக்கிருர்கள். பெரிய குழப்பத்தில் மாட்டிக் கொண்டோம்: என் நண்பர் மிகவும் யோசனே உள்ளவர். புலி இந்தக் காட்டுப் பன்றிக்குப் பயப்படுகிறது என்று நன்ருகத் தெரிந்து கொண்டார். ஆகையால் உடனே துப்பாக்கியைத் தூக்கி அந்தக் காட்டுப் பன்றியைச் சுட்டார். முதலிலேயே புலியிடம் கோபமாக அதையே பார்த்துக் கொண்டிருந்த இந்தக் காட்டுப் பன்றி திடீரென்று துப்பாக்கி வெடி கேட்டதஞலும், அடிப்பட்டதஞலும், தான் கோபமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும் புலியின் மேல் அதிகக் கோபா வேசத்துடன் பாய்ந்து தன்னுடைய பயங்கரமான கோரைப் பற்களால் அதனேக் குத்திக் கிழித்துச் சின்ன பின்ன

மாக்கி விட்டது. ஆனல் காட்டுப் பன்றியும் சிறிது தூரம் சென்று தானும் கீழே விழுந்து இறந்துவிட்டது. பிறகு என் நண்பரை மரத்தின் மேல் இருக்கும்படி செய்து, நான் மட்டும் ஊருக்குள் வந்து, விஷயத்தை விளக்கி, சில ஆட்களை அழைத்துச் சென்றேன். புலியையும் பன்றியையும் கிராம மக்கள் கண்டு சந்தோஷமடைந்தார்கள். அந்தப் புலியின் தோல் தான் இது,'' என்று நண்பர் விஷயத்தைக் கூறிச் சுவரில் மாட்டி வைத்திருக்கும் புலியின் தோலைக் காட்டினர்.

அது வரையில் பசி எடுப்பது கூடத் தெரியாமல் அவர் கூறும் சுவாரசியமான செய்தியில் ஈடுபட்டிருந்த எனக்கு அவர் முடித்ததும் பசிக்கிறது. சாப்பிடலாமா வென்று அழைத்தேன். அவர் உடனே, ''அன்று அடித்த பன்றியின் இறைச்சி அன்றே முடிந்துவிட்டது'' என்று கூறிச் சிரித்தார்.

மறுநாள் காலையில் சத்தியமங்கலம் வழியாகவும், பவானி வழியாகவும் ''பி...கிரி'' யின் இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே மேட்டுப்பாளையம் வழியாக உதகைக்குச் செல்ல வேண்டும் என்று பயணமானேம். இந்தியாவில் புண்ணிய தீர்த்தங்களும், முத்தி அளிக்கும் க்ஷேத்திரங்களும், இன்பக் கோடை இடங்களும் பல இருக்கின்றன. இவ்வகை இடங்களுக்கு யாத்திரைச் செய்வதால் தூய்மை எய்துவதோடு தேச சரித்திரத்தையும், பழம் பெருமைகளையும், விலை மதிக்கப் படாத சிற்பம், சித்திரம் முதலிய பல்வேறு கலைகளையும் சிறப்புகளையும் ஒருவன் அறியக் கூடும். ஆகையால் இத்தகைய பயணங்களை நாம் அடிக்கடி மேற்கொள்ள வேண்டும். வழியில் பல காட்சிகளைப் பார்த்துக் கொண்டே மேட்டுப் பாளையம் போய்ச் சேர்ந்தேன். மேட்டுப் பாளையம் இரயில்வே ஸ்டேஷனில் உதகைக்குப் போகும் வண்டி நின்று கொண்டிருந்தது. இரயிலில் பயணம் செய்யலாமென்று, பஸ் பயணத்தை விட்டு விட்டு, இரயில் பயணத்தைத் தொடங்கினேன். இது சமுத்திர மட்டத்திற்கு மேல் 1069 அடி உயரத்தில் இருக்

கிறது. இங்கிருந்து வண்டி மேட்டில் போக ஆரம்பித்தது. மேட்டுப் பாளையம் முதல் உதகைக்குப் போகும் இரயில் வண்டிகள் எல்லாம், லாரியின் பின் பாகத்தின் மேல் பகுதியில் மூடியிருப்பது போல் இருக்கின்றன. இதற்குத் தனி ஜன்னல்கள் கிடையா. இரண்டு பக்கங்களும் திறந்திருக்கின்றன. மழைக்கு உபயோகிக்கத்தான் துணி மறைப்புகள் இருக்கின்றன, சாமான்கள் வைப்பதற்குப் பெரிய இடங்கள் இல்லை. எவ்வளவு மெதுவாக வண்டியை ஓட்டமுடியுமோ அவ்வளவு மெதுவாக ஓட்டுகின்றனர். இரயிலுக்குப் பின்னால்தான் இஞ்ஜின் பூட்டி இருக்கிறது. ஆனால் உதகையிலிருந்து மேட்டுப்பாளையம் வரும்பொழுது, இஞ்சின் முன்னால்தான் இருக்கிறது. கல்லார் ஸ்டேஷனுக்கு அருகில் எங்குப் பார்த்தாலும், பாக்குத் தோப்புகளைக் காணலாம். 'கல்லார் சமுத்திர மட்டத்திற்கு 1250 அடி உயரத்திலிருக்கிறது. இந்த இரயில் நிலையத்தில்தான் இரயில்வண்டியின் தண்டாவாளத்திலிருக்கும் பல் சக்கரத்தை வண்டியுடன் இணைக்கின்றனர். வண்டிகள் சரிந்து கீழே விழாத வண்ணம் இங்ஙனம் இணைக்கப்படுகின்றது. இந்த பல் சக்கரத்திற்கு "ராக்வீல்" என்று பெயர். இந்த வண்டியில் ஒவ்வொரு பெட்டியிலும் ஒவ்வொரு 'பிரேக்ஸ்மேன்' இருக்கிறார். அவர்கள் பிரேக் போட்டாலும் சரி, இஞ்ஜின் டிரைவர் பிரேக் போட்டாலும் சரி உடனே வண்டி நின்றுவிடும்.

இரயில் வண்டி ஓடும்போதே வண்டித்தொடர் எப்படிக் குகைக்குள் போகிறது என்று பார்க்கலாம். குகைக்குள் போவதற்கு முன் இஞ்சின் கூவும். உடனே எல்லா வண்டியிலிருக்கும் பிரேக்ஸ் மேனும் "ரைட்" என்று கொடியைக் காட்டுவார்கள். இதைப்போல் பதினாறு குகைகளிலும் காட்டப்படுகின்றன. இங்குப் பல இடங்களில் பல நீரோடைகள் ஓடிவரும் காட்சியைக் காணலாம்.

பண்டைக்காலத்தில் பலபுலவர்கள் மலையின் வளத்தைப் பற்றியும், இயற்கையின் எழில் மிக்க காட்சிகளையும் பல வகையில் வர்ணித்து இருப்பதை நான் கவிதையாகப் படித்

திருக்கிறேன். ஆனால், அக்காட்சிகளை நான் நேரில் கண்டு களிக்கும் பாக்கியம் அன்று நீலகிரிப் பயணத்தில் தான் கிட்டியது: புலதர்கள் வர்ணிப்பதைக் காட்டிலும் பலமடங்கு அக் காட்சியைக் கண்டு களித்தேன்.

தூரத்துப் பார்வைக்கு இம்மலை நீலநிறமாகக் காணப் படுவதால் இதற்கு நீலகிரி என்ற பெயர் ஏற்பட்டது என்பர் நீலகிரி கிழக்குத் தொடர்ச்சி மலையும் மேற்குத் தொடர்ச்சி மலையும் சேருமிடத்திலிருக்கிறது. இந்த ஜில்லாவில் கோடைக்காலம், காற்றுக்காலம், மழைக்காலம், பனிக் காலம் என்ற நான்கு பருவங்கள் உண்டு. ஓர் ஆண்டில், மார்ச்சு, ஏப்ரலில், மே மாதங்களே வெயில்காலம், அது மக்களுக்கு ஆரோக்கியமான காலம். பல நாடுகளிலிருந்து வந்த மக்கள் அந்த மாதங்களில் இங்குத் தங்கித் தங்களுடைய உடலை ஆரோக்கியமாகக் காப்பாற்றி "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பதைக் கடைப்பிடிக்கின்றனர். ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் ஈண்டு பெருங் காற்று அடிக்கிறது. மரங்களும் வீட்டுக் கூரைகளும், சேதமடையும், அப்பொழுது கோடைமழை பெய்வதுண்டு. செப்டம்பர், அக்டோபர், நவம்பர் மாதங்களில் கனத்த மழை பெய்யும். இக்காலங்களிலும் சேதமடைவதுண்டு. டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி மாதங்கள் கடும் பனிக் காலம். இந்த மலை ரோடுகளில் பஸ்ஸை மிகவும் ஜாக்கிரதையாகவும்; கவனமாகவும் ஓட்டுகிறார்கள். இங்கு வந்து மோட்டார் ஓட்ட வேண்டுமென்றால் பழகும் வரையில் மிகவும் கஷ்டம் தான் என்று கூறுகின்றனர். இந்தக் குறுகிய சாலையில் பஸ்ஸோ அல்லது காரோ போகும்பொழுது மற்றொரு வண்டி எதிரில் வந்தால், இருவரும் வண்டியை நிறுத்தி; முதலில் மேட்டிலிருந்து கீழே வரும் வண்டிக்கு இடம் கொடுத்த பிறகு தான், கீழ் இருந்து மேலே செல்லும் வண்டி போகிறது. இந்த டிரைவர்கள் அடிக்கடி வண்டியின் பிரேக் சரியாக இருக்கிறதா? வென்று பார்த்துக் கொள்ளுகிறார்கள். முன்பெல்லாம் இங்குச் சாதாரணமாய் இராக் காலத்தில் வண்டிகளை ஓட்டுவதே கிடையாதாம்.

ஆனால் இரவு பகலாக எந்த நேரத்திலும் லாரிகள் ஓடிக் கொண்டே இருக்கின்றன. ஆனால் சாதாரணமாய் மலைப் பிராந்தியத்தில் லாரிகள் மோதுவது மிகவும் குறைவு தான். சில இடங்களில் பஸ் சுமார் எட்டு அல்லது பத்து மைல்கள் ஓடியிருக்கும். ஆனால் மலையின் உச்சி மாத்திரம் முன் பார்த்ததைப் போலவே தோன்றும். வழியில் பஸ்ஸுக்கு அடிக்கடி தண்ணீர் பிடித்து ஊற்றுகிறார்கள். இப்படியே தான் மேட்டுப் பாளையம் தாண்டியதும் அடிக்கடி இரயில் இஞ்ஜினுக்கும் தண்ணீர் பிடித்துக் கொள்ளுகிறார்கள்.

சாலையில் ஆடுமாடுகள் பஸ்ஸைக் கண்டதும், மிரண்டு ஓடாமல், சாலையின் ஓரமாகவும் வரிசையாகவும் நின்று விடுகின்றன. ஏனென்றால் ஒரு பக்கம் மலை மற்றொருபக்கம் பிரம்மாண்டமான பள்ளத்தாக்கு, வேறு வழி கிடையாது. ஆகையால் ரோட்டில் போய்க் கொண்டிருக்கும் கால் நடைகள் கார் வருகிறது என்றால் ஓரமாக நிற்கும்படி கோனார்கள் பழக்கி இருக்கின்றனர்.

இந்த ஒழுங்கு முறையை நான் சுமார் பல்லாண்டுகளுக்கு முன் முதலில் கண்டதும், மிகவும் ஆச்சரியப்பட்டேன். ஏனென்றால் நகரங்களில் வீதியின் ஓரமாக நடந்து கொண்டிருக்கும் எருமைகளும், மாடுகளும், காரின் ஹார்ன் ஒலியைக் கேட்டதும் பயந்து நடு ரோட்டில் நடப்பதைக் கண்டிருக்கும் எனக்கு இந்த உயர்ந்த பண்பைக் கண்டதும் வியப்படையாமல் இருக்கமுடியவில்லை.

மேலும் இந்த வழியில் சில சமயங்களில் காட்டுத் தீ பிடித்துக் கொள்வதும் உண்டு. பண்டைக்கால மக்கள் இப் பகுதியில் மலைக்கு மலை நடந்தே சென்றார்களாம். பிறகு தான் 'டோலியில்' தூக்கிச் செல்வதும், மாட்டுவண்டி பயணமும் உண்டாயின. அங்ஙனம் பயணம் செய்யும் காலத்தில் கொடிய விலங்குகளால் பல ஆபத்துக்களும் ஏற்பட்டன. சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு தான் முதன் முதலில் பம்பாயில் ரயில் வண்டிப் பயணம் உண்டானது. நீலகிரியில் சிலர் 1924-ஆம் ஆண்டு முதற் கொண்டே

பஸ், வண்டி போக்குவரத்து உண்டானது என்று கூறுகின்றனர்.

இங்குக்காக்கைகள் இல்லை என்று கூறுவதற்கில்லை, ஆனால் இங்கு அதிகாலையில் முதலில் மலைப் பறவைகள்தான் கூவுகின்றன. சுமார் ஏழு அல்லது எட்டு மணிக்குத்தான் காக்கைகள் எங்கிருந்தோ பறந்து வருகின்றன. அப்பொழுது அவைகள் வரும் திசையைக் கண்டால் மலைகளை விட்டுச் சற்றுத் தாழ்ந்த பீடபூமிகளுக்குக் குளிருக்குப் பயந்து போய் விடுகின்றனவோ என்று தோன்றும்.

நல்ல குளிர்காலங்களில் காக்கைகள் இப்பொழுது காணப்படுவதைவிட இன்னும் குறைவாகவே காணப்படும். என்று கூறுகிறார்கள். காலையில் வந்த திசையின் பக்கமாகவே, மாலை நான்கு அல்லது ஐந்து மணிக்கெல்லாம் காக்கைகள் கூட்டங் கூட்டமாகப் பறந்து போவதைக் காணலாம். சாதாரணமாகக் காக்கைக் கூடுகள் எங்கேயாவது ஒன்று அல்லது இரண்டுதான் இருக்கின்றன. நீலகிரியைச் சேர்ந்த கோத்தகிரியில் ரயில்வே ஸ்டேஷன் கிடையாது. இரயில்வேஸ்டேஷனுக்கு ஊட்டி அல்லது குன்னூர் அல்லது மேட்டுப்பாளையம்தான் போகவேண்டும். ஆனால் கோத்தகிரியில் ஓர் இரயில்வே ஸ்டேஷனைப் போலவே டிக்கட்டு கொடுக்கின்றனர். அதை வாங்கிக் கொண்டு இரயில்வே பஸ்ஸில் போகலாம், மறுபடியும் ரயில் டிக்கட்டோ, பஸ் டிக்கட்டோ வாங்க வேண்டியதில்லை.

ஊட்டிக்கு 'ஒத்தக்கல் மந்து' என்று முதலில் பெயர். ஏனென்றால் நீலகிரியில் வாழும் தோதுவர்களும்; கோத்தர்களும், குறும்பர்களும் சுமார் ஐந்து அடி உயரமான ஒற்றைக் கல்லை வைத்து வணங்குவதால் இப் பெயர் வழங்கலாயிற்று. ஆக "ஒத்தக்கல் மந்து" உதகமண்டலம்" என்று மாறிப் பின்னர் சுருக்கமாக ஊட்டி" என்று ஆகிவிட்டது.

இதன் உயரம் கடல்மட்டத்திலிருந்து 7228 அடி. உதகை இரயில்வே நிலையத்தின் பக்கமாக இரவில் பார்த்தால்

"அடாடா', என்ன இரமணீயமான காட்சி; கட்டடங்கள் காலரியில் அடுக்கிவைத்தாற்போல் தோன்றும். மேட்டுப் பாளையம் முதல் குன்னூர் வரையில்தான் அதிகமேடும், மலைக் குகைகளும் இருக்கின்றன. ஆகையால் இரயில் வண்டிகள் அந்த இடத்தில் மணிக்கு எட்டு—ஒன்பது மைல் வீதம் செல்லுகின்றது.

இரயில் மார்க்கமாக மேட்டுப் பாளையம் முதல் ஊட்டி வரையில் மொத்தம் 29 மைல்கள் இருக்கின்றன. உதகை யில் என் உறவினர் திரு. தனசிங் வீட்டில் நானும் என் நண்பரும் தங்கியிருந்தோம். இவர் என்னுடைய பெரியம்மா மகன். இவரும் நல்ல சிக்காரி. அரசாங்க வெகுமதி எல்லாம் வாங்கி இருக்கிறார். இரண்டு நாட்கள் ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

மறுநாள் உதகையில் காட்டு வழியாக நட்சத்திர பங்களாவுக்குப் போகக் கருதினோம். அது சுமார் 9000 அடி உயரத்தில் இருக்கிறது, ஆகையால் அப் பயணத்திற்கு வேண்டிய சாமான்களைத் தயார் செய்து கொண்டோம். அந்த வழிப்பாதை கரடு முரடானது. செங்குத்தான ஏற்றம். ஆகையால் தனித்தனியே தூக்குவதற்கு வேண்டிய சாமான் களையும் வழிக்கு வேண்டிய மிட்டாய், தண்ணீர் முதலிய வற்றையும் தயார் செய்து கொண்டோம். உதகையில் குளிர் மிகுதியாக இருந்தபடியால் நான்கு மணிக்குப் பயணம் செய்ய வேண்டியவர்கள் காலை 6-00 மணிக்கு வீட்டை விட்டு நேராகத் தலையாட்டி மந்து வழியாக, "தொட்டபெட்டா ரிசர்வாயரு"க்குச் சென்றோம். அங்கு மூன்று தண்ணீர்த் தடாகங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றுக்கு "டைகர் ஹில் ரிசர்வாயர்" என்று பெயர். இது சமுத்திர மட்டத் திற்கு 7758 அடி உயரத்தில் இருக்கிறது. 1903ஆம் ஆண்டு ஆடமி' என்னும் மேலை நாட்டவர் இதைக் கட்டினார். இதிலிருந்து குழாய்களின் மூலம் கிராமங்களுக்குத் தண்ணீர் அனுப்பப்படுகிறது.

இதன் மேல் பனிமலை, கடம்பைமலை, கூட்டமலை எனப் பல மலைகளின் சிகரங்கள் சூழ்ந்துள்ளன. கடம்பை மான்கள் மிகுதியாய் இருப்பதால் அவற்றிலொன்றுக்கு கடம்பைமலை என்று பெயர். ஒரு பெரிய கீரைக்காட்டின் மத்தியில் ஒரு சிற்றெறும்பைப் போலிருந்தது நாங்கள் சென்ற ஒற்றையடிப் பாதை; பெரிய சோலைகள் நிறைந்த இடம். வானமே தெரியாதபடி மரங்கள் மூடிக்கொண்டிருந்தன. நாம் நடக்கும் ஓசைகள் மாத்திரம் அந்த மலைகளின் எதிரொலிக்கும்.

நடக்க நடக்க, எங்களுக்குப் பயம் மிகுதியானது. மலைச் சரிவுகளின் மூலமாகத் தொட்டபெட்டா மலைக்குச் செல்லும் ஒடுக்கமான ஒற்றையடிப் பாதையும் ஒடுங்கிக் கிடந்த பள்ளத்தாக்குகளும் வானத்தில் இருப்பன போலத் தோன்றின. உச்சியிலிருந்து பார்த்தால் பசுமை தவழ்ந்திருக்கும். மலைச்சரிவுகளை ஒரு பக்கத்தில் காணலாம். இன்னொரு பக்கத்தில் பசுமை என்பது மருந்துக்குக்கூடத் தென்படாத பாறைகளும் குன்றுகளும் கண்ணில்பட்டன. இக்காட்சிகளைக் கண்டதும் உள்ளத்திலே ஒருபக்கம் திகிலும், மற்றொரு பக்கத்திலே காணாதவற்றைக் காணச் செல்லுகின்றோமென்ற இன்பமும் தலைதூக்கி நின்றன. அப்பொழுது நாங்கள் கடற்கரையிலிருந்து 8858 அடி உயரத்திற்கு மேலுள்ள ஒரு மலையின் மீது இருந்தோம். ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும் பொழுதும் மூச்சுவாங்க ஆரம்பித்தது. ஒரே பிடிவாதமாக நடந்து மலை உச்சியைப் போய்ச் சேர்ந்தோம். சிறிதுநேரம் மலையுச்சியில் இளைப்பாறிய பின்பு நட்சத்திர பங்களாவிலிருந்து என் பைக்குலர் மூலம் நான்கு பக்கங்களிலும் பார்த்தோம். நான் கண்ட அக் காட்சியைக் கண்டது போல் எழுத முடியவில்லை.

உதகையின் மலையுச்சியிலிருந்து பைனாக்குலர் மூலம் மைசூர், கோவை முதலிய சுற்றுப்புறங்களிலிருக்கும் பல இடங்களையும், மலைகளையும் காணலாம்.

மலைகளின் எழில்மிக்க காட்சிகளைக் கண்டபின், மலையுச்சியிலிருந்து வேகமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தோம்.

அன்று மாலை சுமார் ஆறுமணிக்குக் கால்வலிக்க, காதடைக்க வீடு வந்து சேர்ந்தோம். சாதாரணமாக நீலகிரி மாவட்டம் முழுவதும் செம்மண் பூமியாக இருக்கிறது. இந்த மாவட்டத்தில் காப்பிக்கொட்டை, தேயிலை, சின்கோனு ஜாலப், நீலகிரி, கற்பூரத் தைலம். கோதுமை, பார்லி, சாமை, ராகி முதலியவைகளும், மேல்நாடுகளில் உண்டாகும் பழவகைகளும், காய்கறிகளும் நானுவித கிழங்குகளும், வெங்காயம், வெள்ளைப்பூண்டு, வெந்தயம், கடுகு முதலியவையும் பயிராகின்றன. எல்லோருடைய வீடுகளிலும் தரையில் நார்ப் பாயை விரித்திருக்கிருர்கள். நார்க்காட்டிலோ, பிரம்புக் கட்டிலோ மரக்கட்டிலோ ஒன்று இரண்டு வைத்திருக்கிருர்கள். அவற்றின்மேல் எப்பொழுதும் கம்பளம் விரித்திருக்கிருர்கள். இங்குக் குப்பைக்காரன் என்றும், கடைக்காரன் என்றும் தொழிலாளி என்றும் வித்தியாசம் தெரிந்து கொள்வது சற்றுக் கடினம்தான். ஏனென்ருல் எல்லாரும் சிராய், கம்பளிக் குல்லாய், கம்பளி பனியன் முதலியவைகள் அணிந்து கொண்டு இருக்கிருர்கள். ஈண்டுள்ள மக்கள் சாதாரணமாய்க் காலில் சப்பல்ஸ் அல்லது பூட்ஸ், அல்லது கால்கட்டை முதலியவைகளை அணிந்திருப்பார்கள். இங்கு பாம்பு, தேள், முதலியவைகள் அதிகமில்லை. இங்கு சைக்கிள் வண்டிகள் வெகு குறைவு. டவுனுக இருக்கும் இடங்களில் மட்டும் குழாய்கள் இருக்கின்றன. மற்ற இடங்களில் வாழும் மக்கள் கேணிகளையும், ஊற்றுகளையும் உபயோகப்படுத்துகிருர்கள். ஈண்டு உப்புத் தண்ணீரே கிடையாது. நீலகிரி முழுவதும் வீடுகளில் தொட்டி அல்லது "குழிக்கக்கூசு' தான் உபயோகப்படுத்தப்படுகிறது. இங்கு வாழும் மக்கள் சாதாரணமாய்ப் பல மொழிகளை பேசுகிருர்கள். ஏனென்ருல் பல இன மக்கள் பல ஊர்களிலிருந்து கோடைக்காலத்தில் வருவதால் அதன் மூலம் பல மொழிகளை இங்கு வாழும் மக்கள் பேசப் பழகிக் கொள்ளுகின்றனர். ஆனுல் இங்குத் தமிழும், படகர் மொழியும், கன்னடமும், மலையாளமும்தான் அதிகமாய்ப் பேசப்படுகின்றன.

இங்குள்ள மாணவர்களுக்குத் தமிழ், ஆங்கிலம், கன்னடம் முதலிய மொழிகள் கற்பிக்கப்படுகின்றன. ஆனால் சாதாரணமாய் எல்லோரும் படகர் மொழி பேசுகின்றனர். அன்று சென்றபோது உதகையில் நண்பர் இல்லத்தில் சுமார் ஒருவாரம் தங்கினோம். நண்பர் என்னை அடிக்கடி கவனித்துப் பல செய்திகளைக் கேட்டார்.

“அன்பரே! என்னிடம் எல்லாவற்றையும் கேட்க வேண்டுமென்று தாங்கள் விரும்பினால், சுமார் முப்பத்தைந்தாண்டுகளின் செய்திகளை என்னால் தங்களுக்கு எடுத்துரைக்கவும் முடியாது. உங்களால் பொறுமையாக உட்கார்ந்து கேட்கவும் முடியாது. அவ்வப்பொழுது எனக்கு உண்டான பல அனுபவங்களைப் பொதுமக்களாகிய ஏழைகள் தெரிந்துகொள்ள வேண்டுமென்று பல பத்திரிகைகளில் எழுதியிருக்கிறேன். பல நண்பர்கள் கேட்டதின் பேரில் என் பிரயாணத்தில் ஏற்பட்ட பல அனுபவங்களைத் தொகுத்துப் பல நூலாக்கியும் இருக்கிறேன். எல்லாவற்றையும் தாங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், என் பிரயாணத்தில் ஏற்பட்ட அந்தந்த ஆபத்துக்களையும், நுணுக்கங்களையும் அந்தந்தக் கட்டுரைகளை வாசித்தால்தான் அந்தந்த சமயங்களில் எப்படி எப்படி நான் ஆண்டவன் கருணையால் தப்பியிருக்கிறேன் என்பது நன்றாக விளங்கும்.

## கண்டேன் கொள்ளிப் பிசாசை!

---

நான் எந்த ஊருக்குச் சென்றாலும், யார் வீட்டில் தங்கினாலும் சரி என் பயணச் சாமான்களை நான் தனியாக ஒரே இடத்தில் தரையிலோ அல்லது மேஜையின் மேலே தான் வைப்பதுண்டு. என் குடும்பத்துடன் பயணம் செய்யும் பொழுதுகூட, என் மனைவி, மகள் இவர்கள்

இருவரின் பொருள்களைத் தனியாகவும், என் பொருள்களைத் தனியாகவும் மூட்டைகளாகக் கட்டுவதுண்டு. ஆனால் பார்க்கிறவர்கள் சிந்தனை செய்வார்கள்தான். ஆனால் அதற்காக நான் கவலைப்படுவதோ வெட்கப்படுவதோ இல்லை. அதைப் போல் என்னைக் கண்டு நகையாடும் நண்பர்களிடம் நான் கோபித்துக் கொள்வதுமில்லை. என் மனம் புண்பட்டால் உடனே நான் ஆபிரகாம்லிங்கன் கூறிய வார்த்தைகளை என் உள்ளத்தில் கூறிக் கொள்ளுவேன். அவை:

"தன்னம்பிக்கை, விடாமுயற்சி, சலிப்படையாத உள்ளம், இவையே வெற்றிக்குக் காரணம். உன் சாதியைப் பற்றியோ மதத்தைப் பற்றியோ, கவலைப்படாதே உன் ஏழ்மையைப் பற்றி கவலைப்படாதே நன்றாகப் படி மனத்தைச் சிதறவிடாதே. விடாமுயற்சியுடன் வேலை செய். துன்பங்களை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு வேலை செய். தன்னம்பிக்கையை இழக்காதே. வெற்றி உன்னைத் தேடி வரும். நீ வாழ்வில் சுகம் பெறுவாய்" என்று ஆப்ரஹாம்லிங்கன் அவர்கள் அடிக்கடி பொதுக் கூட்டத்தில் பேசுவதுண்டாம். இதை நான் அடிக்கடி என் உள்ளம் சோர்வு அடையும்பொழுது நினைத்து ஆறுதல் அடைவதுண்டு. மேலும், ஒரு சமயம் நானும் என் நண்பரும் நீலகிரி பக்கத்திலிருக்கும் குன்னூர் மலைக்குச் சென்று அங்கிருந்து, "நான்சச்சு எஸ்டேட்டு" வழியாக பக்கா சூரன் மலைக்குச் சென்றோம். இந்த மலைக்குப் போவதற்கு முன் அந்த மலையைப் பற்றி நான் கேள்விப்பட்டது என்ன தெரியுமா?

"அந்த மலைக்கு யாராவது சென்றால் உடனே அவர்கள் இறந்து விடுவார்கள். மற்றொன்று அங்குப் பெரிய பெரிய வண்டுகள் இருக்கின்றன. அவைகள் மனிதர்களை முகத்திலேயே வந்து கொட்டுமாம். மேலும் ஒரு பெரிய சங்கிலி இருக்கிறது. அதை இழுக்க இழுக்க அது மேல் நோக்கி வரும், குறிப்பிட்ட அளவு மேலே வந்ததும், அது திடீரென்று கீழே ஓடுமாம். அதை இழுப்பவர்கள் சற்று ஏமாந்தால் அவர்களையும் சுருட்டிக் கொண்டு போகும் என்றும், அது கடைசியில் விழும்பொழுது ஏதோ ஒரு பணப்

பெட்டியின் மேல் விழும் ஓசை கேட்பதாகவும் பலர் மூலம் கேள்விப்பட்டேன். அதைக் கேட்டதும் எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. காரணம், இப்படி எல்லாமிருக்குமா? என்று யோசனை செய்தேன். கடைசியில் பக்காசூரன் மலைக்குப் போகத் தீர்மானித்தேன். அப்படி நான் போகப் போகிறேன் என்று சிலருக்குத் தெரிந்ததும் அவர்களும் என்னுடன் வரத் தொடங்கினார்கள். அப்படி அன்று வந்தவர்கள், சுமார் இருபது பேருக்கு மேல் இருந்தார்கள். நாங்கள் சென்ற லாரி மலையடிவாரத்தில் போய் நின்றது. லாரியை விட்டு இறங்கியதும் மற்றவர்களைப் பார்த்து நான் கூறினேன்.

"மலையின் மேல் யாரும் தனிதனியாகப் பிரிந்து போகக் கூடாது. மலையின் மேல் புகை புகைத்தல் கூடாது. காரணம் புகையிலையின் நாற்றமும் புகையும் அந்தக் காட்டிலிருக்கும் வண்டுகளுக்குப் புதியவை அல்லவா? ஆகையால் காட்டிலிருக்கும் வண்டுகள் அந்தப் புகையின் நாற்றத்தைக் கண்டதும் உடனே அந்தப் புகை வரும் இடத்தை நோக்கி வரும். ஆனால் புகை வருவது எங்கே? மக்கள் சிகரெட்டுப் பிடித்துக் கொண்டே வருகிறார்கள். ஆகையால் வண்டுகள் உடனே முகத்தில் நோக்கி அடிப்பதால், பொது மக்கள் அதை எப்படி எடுத்துக் கொண்டார்கள் தெரியுமா? பக்கா சூரன் மலைக்குப் போக வேண்டாம், வண்டுகள் அங்கே போகிறவர்களைக் கொட்டு கின்றன வென்று பொய் வதந்தி பரவுகின்றது. அன்று அந்த மலைக்குச் சென்று நாங்கள் கண்டது என்ன தெரியுமா? ஒரு பெரிய மலைப்பாதையின் மேல் சுற்றிலும் சுவர் கட்டி யிருப்பதைக் கண்டேன். மேலும், அந்த மலைக்குச் செல்ல ஒரே ஒரு வழி தான் இருக்கிறது. அந்த மலையின் மேல் வண்டுகளுமில்லை. மனிதர்களுமில்லை. முழுதும் காட்டு மயம் தான், என்ற முடிவுக்கு வந்தோம். சங்கிலியுமில்லை மக்கள் எவ்வளவு விஷயங்களைப் பொய்யாகப் பரப்பி விடுகின்றனர் என்று பேசிக் கொண்டே மலையை விட்டு இறங்கினோம். மேலும், இப்படிப்பட்ட இடங்களில் சில சமயங்களில்

யானைகள் வருவதுண்டு. சாதாரணமாய் இவ்விடங்களில் பச்சை வாடை திடீரென்று வீசுவதுண்டு. அப்படி வரும் பொழுது இடி இடிப்பதைப் போலவும் தீபாவளிக்குப் பட்டாசு வெடிப்பதைப் போலவும் ஓசைகள் கேட்கும். அப்படி ஏதாவது ஓசை கேட்டாலும், பச்சை வாடை வீசினாலும், யானைகள் ஓடி வருகின்றன வென்று தெரிந்து கொள்ள வேண்டும். உடனே நாம் மறைந்து கொள்வதோ அல்லது காட்டை விட்டு விலகுவதோ தான் நல்லது. இந்த நிலையில் என்னைத் துப்பாக்கி வைத்துக் கொள்ளக் கூடாதா? என்று பலர் கேட்பதுண்டு. ஆம்! உண்மைதான். துப்பாக்கி வைத்துக் கொள்வதும் லைசன்ஸ் எடுப்பதும் எனக்கு கஷ்ட மில்லை. ஆனால் துப்பாக்கி வைத்துக் கொண்டால் கை சும்மா இருக்காது ஒன்று. மற்றொன்று, நான் முன்பின் பழகாத புதிய காடுகளுக்குச் செல்லுகின்றேன். பழக்கமான காடாக இருந்தால் எந்த இடத்தில் யார் இருப்பார்கள் என்பது சாதாரணமாய்த் தெரியும். ஆனால் புதிய காட்டுக்கு நான் போவதால் திடீரென்று எதையாவது பார்த்துச் சுட்டால், அது மறு பக்கத்திலிருக்கும் மானிடர் மேல் பட்டு விட்டால் என்ன செய்வது? ஏனென்றால் கல்லைத் தூக்கிப் போட்டுக் கொண்டு விளையாடினால், அது மானிடரைத் தேடிக் கொண்டு தான் போகும் என்பார்கள்! அதைப்போல் காட்டில் துப்பாக்கியால் ஏற்படும் ஆபத்துக்கள் பற்பல. அவைகளை எல்லாம் நேரில் கண்ட பின்னும் நான் துப்பாக்கி எடுத்துச் சென்றால் அது ———? மேலும் காட்டில் சில சமயங்களில் வழி தவறிப் போவதும் உண்டு. இப்படி வழி தவறிப்போனால் உடனே ஒன்றும் யோசனை செய்யக் கூடாது. ஏதாவது ஒரு மரத்தின் மேல் ஏறி நான்கு பக்கங்களிலும் பார்த்தால், காடர்கள் வீடுகளில் வாழை மரங்கள் வளர்ப்பது நன்றாகத் தெரியும். உடனே அந்தப் பக்கமாகப் பார்த்து நாம் குரல் கொடுத்தாலும் சரி, அல்லது அந்த மார்க்கமாகச் செல்லும் ஒற்றையடிப் பாதையில் நடந்து சென்றாலும் சரி நமக்கு உதவி கிடைக்கும்.

சில ஆண்டுகளுக்குமுன் ஒரு சமயம் நான் காட்டில் குடிசையில் தங்கியிருந்த பொழுது இராக் காலங்களில் சிறுநீர் கழிக்க வெளியில் போகவேண்டாம் என்று கூறினார்கள். முதலில் நான் இரவில் மனிதப் புலி ஏதாவது இருக்கிறதோவென்று நினைத்துக் கேட்டேன். அதற்கு அவர்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா?

"ஐயா! எங்கள் வாயால் அதைப் பற்றிக் கூறுவதற்கே பயமாக இருக்கிறது. நீங்களும் பல்லாண்டுகளாகப் பயணம் செய்கிறீர். ஆனால் இந்த மாதிரியான, "கொள்ளிப் பிசாசைப்" பார்த்திருக்கமாட்டீர்கள். சூரியன் மறைந்து, கொஞ்சம் இருள் சூழ்ந்ததும் ஒரே தீ ஜோதியாக ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டே இருக்கும். அந்தப் பக்கத்தில் யாராவது போனால் உடனே, "லபக்"கென்று விழுங்கி விடுவதை எங்கள் கண்ணால் பார்த்தோம்" என்று கூறினார்கள். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர்கள் பேயோ, பிசாசோ, எதையோ ஒன்றைக் காண்பது உண்மை. ஆனால் அது என்னவென்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படிப் பேயாக இருந்தால் என்னுடைய காமராவில் விளக்கை இணைத்துப் புகைப்படம் பிடிக்க வேண்டும். அதனிடம் பேசி, பல கேள்விகள் கேட்டு, அதைப் பேட்டி கண்டதைப் போல் பத்திரிகையில் பிரசுரிக்கவேண்டும்" என்று பல சிந்தனைகள் என் உள்ளத்தில் உதயமாயின. அன்று, மாலை எப்பொழுது சூரியன் மறையும் என்று காத்துக்கொண்டிருந்தேன். உள்ளுக்குள் எனக்குக் கொஞ்சம் அச்சமாகத்தான் இருந்தது. பல்லாண்டுகளாகப் பயணம் செய்யும் நான் இதைப்போல் ஒன்றும் கேட்டதே இல்லை. ஆனால் பயணத்தில் பல செய்திகளைக் கேட்டிருக்கிறேன். கண்டும் இருக்கிறேன். அன்று மாலை சுமார் ஏழு மணி இருக்கும்.

"ஐயா! ஐயா!! வாங்கோ!! வாங்கோ!!" என்று கூப்பிட்டார்கள். நானும் பைனாக்குலருடன் வெளியில் போனேன். ஒரு மரத்தடியில் இருளில் ஒரே பிரகாசமாக

இருந்தது. பைனுக்குலர் மூலம் கண்டேன். எந்த உருவத்தை யும் பார்க்க முடியவில்லை. எனக்குக் கொஞ்சம் அச்சமாகவும் கவலையாகவும் இருந்தது. என்னுடன் அன்றிரவே சில காடர்கள் வருவார்களா? என்று கேட்டேன். யாரும் என்னுடன் வர மறுத்துவிட்டார்கள். என்னை தனிமையில் போக வேண்டாம் என்றும் தடுத்துவிட்டார்கள். எனக்கும் தனிமையில் போவதற்கு வேண்டிய தைரியமில்லை. மறு நாள் காலையில் அந்த மரத்தடிக்கு நான் சில காடர்களுடன் சென்றேன்; அந்த இடத்தில் மரங்களை தவிர ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. எனக்கோ ஒன்றும் விளங்கவில்லை மறுபடியும் அன்றிரவு அதே மரத்தடியில் பெரிய ஒளிமயமாக இருந்ததைக் கண்டேன். என்னுடன் யாராவது ஒருவர் வந்தால் போதும், நான் முதலில் போகிறேன் என்று கூறினேன். அன்றிரவும் ஒருவரும் வரவில்லை. ஆனால் அன்றிரவு பைனுலக்குலர் மூலம் கொஞ்சம் அருகில் போய்ப் பார்க்கலாம் என்று என் குடிசையை விட்டுக் கொஞ்சம் தூரம் போய்ப் பார்த்தேன். ஏதோ மரத்தடியில் மரமே பற்றி எரிவதைப்போல் தோன்றியது, மறுநாள் காலையில் இரவு ஜோதியாக எரிந்த அந்த மரத்தடியில் போனேன். அந்தப் பகுதியை நன்ருகச் சுற்றிச் சுற்றி வந்தேன். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. என் கத்தியை எடுத்து அந்த மரத்தை வெட்டிக் கொஞ்சம் மரக்கட்டையை எடுக்க முயன்றேன். என்னுடன் வந்த காடர்கள் "ஐயா! ஐயா! வாயிலும் மூக்கிலும் இரத்தம் வந்து இறந்து விடுவீர்கள்" என்று ஒரே கூச்சல் போட்டார்கள். என்ன செய்வதென்றே தெரியாமல் திகைத்து நின்றேன். அன்றிரவு என்ன வந்தாலும் சரி, இதை ஆராய்ச்சி செய்துவிடவேண்டும். பயணத்தில் நன்மை தீமைகள் இரண்டும்தான் வரும். உலகில் பேய், பிசாசு இல்லை என்று நான் கூறவில்லை. ஆனல் நம்மை ஒன்றும் செய்யாது. ஆண்டவன் கட்டளை இல்லாமல் அது ஒன்றும் செய்யாது, ஆகையால் அன்றிரவு நானே தனிமையில் பைனுக்குலர் மூலம் பார்த்துக்கொண்டே கொஞ்சம் கொஞ்சமாக அருகில் சென்றேன். கடைசியில்

மரத்தடியில் போய்ச் சேர்ந்தேன். டார்ச்சு லைட் மூலம் நன்ருகப் பார்த்தேன். பிறகு அந்த மரத்தின் பட்டையை வெட்டிச் சிறு சிறு துண்டுகளாக ஆக்கி ஓர் "ஆர்லிக்ஸ்" புட்டியில் போட்டு என் மேஜையின் மேல் வைத்து விட்டுப் பக்கத்திலிருந்த விளக்கை அணைத்து விட்டேன். அந்த ஆச்சரியத்தை என்னுல் கூறவே முடியவில்லை.

பிறகு எல்லோரையும் அழைத்து என் குடிசைக்குள் புட்டியில் இருக்கும் ஒளியைக் காட்டினேன். இது ஒரு வகை, "ஒளியுள்ள மரம்." இது பேயுமில்லை. பிசாசுமில்லை. இயற்கையாகவே மரங்களில் சில இப்படி ஜோதி மயமாகத் தோன்றும். "ஜோதி மரம்" என்றும் பண்டைக் காலத்தில் கூறுவதுண்டு. பிரயாணத்தில் பல விஷயங்களை ஆராய்ச்சி செய்யும் திறமை வேண்டும். எதையும் உடனே முடிவு செய்யக்கூடாது." என்று அவர்கள் உள்ளத்தில் இருந்த அச்சத்தைப் போக்கினேன்.

## யாக் எருமை சவாரி

சில ஆண்டுகளுக்கு முன் இமயமலைச் சாரலிலுள்ள என்னுடைய நண்பர் திரு. இராம் வீட்டிலிருந்து ஜீப்பில் சில மலைப் பகுதிகளுக்குச் சென்ருேம். ஜீப்பை விட்டு கீழே இறங்கியதும், இமயவாசிகள் சுமார் நான்கு மைல் தூரத்தில் காட்டில் இருக்கின்றனர் என்று கூறியதும் உடனே நடக்க ஆரம்பித்தோம்.

மேலே போகப் போகக் கடுமையான ஏற்ற இறக்கங்களையும், கரடு முரடான பாதைகளையும் மலைச் சரிவுகளை அறுத்து ஓடும் சிறு சிறு நதிகளையும் சமாளித்துக் கொண்டு

நடந்தோம். பயணம் செய்யும் போது, எதைக் கண்டும் நாம் உடனே சோர்ந்து போகக் கூடாது. ஆனால் சோர்ந்து போகக் கூடாது என்று நாம் முட்டாள் தைரியத்தைக் கடைப் பிடிக்க கூடாது. பயணத்தில் கூர்மையான நிதான புத்தி வேண்டும். மலைப்பிராந்தியத்தில் சாதாரணமாய் ஒரு மைல் நடப்பது, சம வெளியில் பத்து மைல்கள் நடப் பதற்குச் சரி. மூட்டைகளைத் தூக்கிக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக நடந்து நடந்து முன்னேறினோம், மேலும் மலையிலும் சரி, கிராமத்திலும் சரி, நகரங்களிலும் சரி என் னுடைய மூட்டைகளை நானே கடந்த பல்லாண்டுகளாகப் பயணத்தில் தூக்கிச் செல்வதுண்டு. ஏனென்றால், எந் தெந்தப் பொருள்கள் எந்தெந்த மூட்டைகளில் இருக்கின் றன என்று எனக்குத்தான் தெரியும் எந்த மூட்டைகளை எப்படித் தூக்கவேண்டும் என்பதும் எனக்குத்தான் தெரியும். மூட்டைகளைத் தூக்கத் தெரியாமல் கூலியாட்கள் தூக்கிக் கடைசியில் கைப் பிடியையோ அல்லது தூக்கும் கயிற் றையோ அறுத்து விட்டு, கை தவறி மூட்டைகளைக் கீழே தவற விட்டால், அவைகள் மலைப்பாங்கான இடங்களில் உருண்டோடிப் பக்கத்திலிருக்கும் பள்ளத்தாக்கிலோ அல்லது அடர்ந்த புதரிலோ விழுந்து மறைந்து விடும். அந்தப் பையிலிருக்கும் பொருள்கள் உடைந்தும் விடும். ஏதாவது சாமான் உடைந்து விட்டால், நான் எடுத்துக் கொண்ட காரியம் பாழாகும். மேலும் சில சமயங்களில் மூட்டை களில் வழிச் செலவுக்குப் பணமும் வைத்திருப்பேன். அவ்வாறு விழுந்த மூட்டைகளை எடுப்பதற்குச் சில இடங் களில் ஒரு நாள் முழுதும் கழிந்திருக்கிறது. ஏனென்றால் பள்ளத்தில் இறங்க சுமார் நான்கு ஐந்து மைல்கள் சுற்றிக் கொண்டு போக வேண்டிய நிலையும் ஏற்படுவதுண்டு. அந்த நான்கு ஐந்து மைல்கள் சுற்றி நடந்துவர நமக்கென்று பாதைகளா இருக்கும்? நாங்களே புதிய பாதைகளைச் "சர்வே" செய்யவேண்டும். இந்தக் கஷ்டங்களை நீக்க வேண்டுமானால் பயணத்தில் அவரவர்களின் மூட்டைகளை அவரவர்களே தூக்கிச் செல்வது நல்லதல்லவா?

மலைப் பிராந்தியங்களில் நடந்து நடந்து பயணத்தில் களைப்பு ஏற்பட்டதும் வழியில் கொஞ்சம் உட்காரலாமே என்று நினைத்து உட்காரக்கூடாது. ஏனென்றால் இருள் சூழ்ந்து கொள்ளும். மழை பெய்யலாம். குளிரும் திடீரென்று அதிகமாகும். ஆகையால் மெதுவாகவாவது நடந்தால் நம்முடைய உடம்பில் சூடு ஏறிக் கொண்டே இருக்கும். இப்படி நடந்து செல்லும் பொழுது வழியில் வழி காட்டியை எப்பொழுதும் பேச வைப்பதுண்டு. ஏனென்றால் எங்களிடமிருக்கும் பொருள்களின் மேல் அவன் ஆசைப் படக் கூடாது. அப்படிஆசைப்பட்டால் நமக்கு ஆபத்தும் ஏற்படுவதுண்டு. மற்றொன்று அவன் சிந்தனை வேறு எதிலும் செல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இன்னொன்றும் அவன் வாயிலிருந்து ஏதாவது ரசமான சம்பவங்கள் வரலாம். எங்கள் வழிகாட்டி நடந்து கொண்டே, "சில சமயங்களில் அடர்ந்த பனி மூட்டம், பனி பெய்தல், புயல் காற்று, சில சமயங்களில் பனிப்பாறைகள் வெடித்து, வெடித்து வீழ்தல், போன்ற துன்பங்கள் நிகழ் வதும் உண்டு. அவற்றால் பலர் சிக்குண்டு மாண்டதும் உண்டு. எப்பொழுது? எங்கே? எந்தப் பகுதியில் என்ன துன்பம் நேரிடுமென்று சொல்ல முடியாது. மலைப் பிராந்தி யங்களில் நடப்பதே வாழ்க்கையில் பெரிய சோதனை தான்" என்று பேசிக் கொண்டே வந்தான். ஆண்டவன் கருணை யால் நாங்கள் வழி நடக்கும் பொழுது மழை சிறிதும் இல்லை சில இடங்களில் பெரிய பெரிய கூழாங்கற்களின் மேல் கால் வைத்து நடந்து போக வேண்டியிருந்தது.

அப்படிக்கூழாங் கற்களின் மேல் கால் வைத்து நடக்கும் பொழுது, சில இடங்களில் கால் புரண்டு விழுந்தும் இருக்கி றேன். அப்படி விழும் பொழுது ஜாக்கிரதையாக விழ வேண்டும். ஏனென்றால் மேற்கொண்டு நடக்க முடியாமல் சுளுக்குப் பிடித்துக் கொண்டால், நம்மை யார் தூக்கிக் கொண்டு வர முடியும். எவ்வளவு திட்டங்கள் பாழாகும் இவைகளை எல்லாம் நினைத்து நினைத்து ஆண்டவனைப்

பிரார்த்தனை செய்து கொண்டே நடக்க வேண்டும். சில சமயங்களில் பனித்துளியில் கண்கள் சிவந்து பூத்துப்போகும். அந்தச் சமயத்தில் கண்களில் அணிந்து கொள்ளவதற்காகப் பச்சைக் கண்ணுடிகளை நாங்கள் எங்கள் பைகளில் தயாராக வைத்திருந்தோம்,

அந்த இக்கட்டான இடங்களிலும் தென்னுட்டில் கேரளாவைச் சேர்ந்த நண்பர்கள் இரண்டு தேநீர்க் கடைகள் வைத்திருந்ததைக் கண்டு வியந்து, அங்கே சூடாகத் தேநீர் குடித்துச் சிறிது தெம்பு பெற்றேம். அந்த மலையில் வாழும் மக்களுக்காகவும், ஆடு, மாடு, யாக் எருமைகளை மேய்க்கும் தோழர்களுக்காகவும் இங்கே டீக்கடை வைத்திருக்கிருர்களாம். ஆனுல் இந்த மலையாளிகளைப் பார்த்தால் மலையாளிகள் என்று அவர்களின் தோற்றத்தைக்கண்டு கூற முடியாது. "மழைக் காலங்களில் இங்கே எப்படி பயணம் செய்வார்கள்?" என்று கேட்டேன். டீக்கடை நண்பரிடம். "சில இடங்களில் சதுப்பு நிலங்கள் மழைக் காலங்களில் ஏற்படுவதுண்டு. அப்பொழுது "யாக்" என்னும் எருமைகளிலே ஏறிச் சவாரி செய்வர்கள். அப்படிச் சவாரி செய்யச் சிலர் வாடகை சைக்கிள்களைப் போல், "வாடகை யாக் எருமைகள்" வைத்திருக்கின்றனர். யாக் எருமைகளின் கூடவே அவர்களும் நடந்து வருவார்கள்" என்று கூறினுர் அவர்.

"யாக்" என்பது ஒருவகைச் சடை எருமை. அவைகள் நம் ஊர்களில் வாழும் டெல்லி எருமைகளைப் போல் கம்பீரமான தோற்றத்துடன் கரடிகளைப்போல் நீண்டு அடர்ந்த ரோமங்களுடன் பயங்கரங்கமாகக் காட்சியளிக்கின்றன. பழக்கமில்லாதவர்கள் "யாக்" எருமையில் சவாரி செய்யும் போது பல முறை கீழே விழவும் நேரிடும் சில சமயங்களில் "யாக்" எருமைகள் முரட்டுத்தனமாக வெறி பிடித்து ஓடத் தொடங்குவதும் உண்டு.

இந்த யாக் எருமையின்மேல் சவாரி செய்யும் நிலைமையும் மழை முதலிய கஷ்டங்களும் இல்லாமல் எப்படியோ

கஷ்டப்பட்டு மலைவாழ் மக்களுடைய குடிசைகளைப் போய்ச் சேர்ந்தோம்.

இங்ஙனம் நடந்து செல்லும் பொழுது மலைப்பகுதிகளில் சாதாரண விலங்குகளுக்காக வழியில் வெடி குண்டு வைத்து விடுவார்கள் அதில் நாம் தவறிக் கால் வைத்து விட்டால் உடனே நமக்கு அபாயம் ஏற்படுவதும் உண்டு. அந்த மாதிரி நிலைமையில் காட்டு வழியில் சற்றுப் பார்த்துத் தான் நடக்க வேண்டும். அப்படிக் கவனமின்றி நடந்தவர்கள் பலர் இந்த வெடிக்குப் பலியாவதுண்டு.

மேலும், சில காடுகளில் பெரிய பெரிய சந்நியாசிகள் தவம் செய்வார்கள். அவர்கள் என்ன சொன்னாலும் உடனே காட்டிலிருக்கும் காடர்கள் கேட்பார்கள். மலைவாசிகள் காட்டில் தவம் செய்யும் சந்நியாசிகளைத் தங்கள் குருவாக மதிப்பது வழக்கம் அதைப் போல் சில காடுகளில் சந்நியாசிகள் இருந்தால் நான் அந்தக் காட்டுக்குப் போனதும், உடனே அந்தக் காட்டை விட்டு, திரும்பி விடுவேன்.

ஏனென்றால் சிலர் நகரத்திலோ கிராமத்திலோ அல்லது மற்ற தூரத்து ஊர்களிலோ போலீசுக்குப் பயந்து காட்டில் வந்து சந்நியாசிகள் போல் வேடம் அணித்து கொண்டு, மலைவாசிகளிடம் உணவு அருந்துவதுண்டு. இப்படிப்பட்டவர்கள் என்பது மலைவாசிகளுக்குத் தெரிந்தால், காட்டில் அவ்விதமான சந்நியாசிகள் ஒரு நிமிஷம் கூட வாழவோ வசிக்கவோ முடியாது. உடனே அவர்களே போலீசாரிடம் பிடித்துக் கொடுத்து விடுவார்கள். போலீசாரால் தேடப்படும் அப்படிப்பட்ட போலிச் சந்நியாசிகள் வாழும், மலைவாசிகளைத் தேடிக்கொண்டு தற்செயலாக நான் அந்த மலைக்குச் சென்றால், என்னை அப்படிப்பட்ட போலிச் சந்நியாசிகள் "இரகசிய போலீசு" என்று நினைத்துக் கொண்டு, உடனே அவர் நீண்ட நாட்களாகப் பழகும் ஆதிவாசிகளிடம் என்னைப் பற்றி ஏதாவது விரோதமாகச் சொல்லிக் கொடுத்து

விடுவதுண்டு. அப்படி ஏதாவது சந்நியாசிகள் சொன்னால், உடனே மலைவாசிகள் கேட்டுக் கொள்வார்கள்.

ஏனென்றால் நான் அன்றுதான் அந்த மலைக்குப் போன புதிய ஆள் அல்லவா? இதைப்போல் பல போலிச் சந்நியாசிகளைப் போலீசார் காடுகளிலும், மலைகளிலும் கண்டு பிடித்து கைது செய்திருப்பதை நாம் பத்திரிகையின் வாயிலாக வாசிக்கலாம்.

ஆகையால் அதைப் போன்ற காடுகளில் நான் போய்ச் சிக்கிக்கொள்ளாமல் முன்னெச்சரிக்கையாக இருப்பதுண்டு. மேலும் காட்டில் மற்றோர் அபாயமும் உண்டு. சில காடுகளிலும், சில மலைப் பிராந்தியங்களிலும், மலைவாசிகளுக்கு தெரியாமலும் போலீசாருக்குத் தெரியாமலும் கள்ளச்சாராயம் காய்ச்சும் கோஷ்டிகள் இருப்பார்கள். அப்படிப்பட்ட கோஷ்டிகள் திடீரென்று என்னைக் கண்டதும், ''மிரண்டவனுக்கு இருண்டதெல்லாம் பேய்'' போல் என்னை உளவாளி என்று நினைத்துவிட்டால் எனக்கு அபாயம் உண்டாவதுண்டு. அதைப்போல், 'ஒரு மாட்டுக்காரப் பையனை மலையிலிருந்து உருட்டிக் கொன்றதாக ஒரு சாராயம் காய்ச்சும் கோஷ்டியைப் போலீசார் தங்கள் சாமர்த்தியத்தால் கைது செய்தார்கள்.

அந்தப் பையன் அந்தக் கோஷ்டியைக் கண்டதால் அவன் மூலம் தங்களுடைய ''குட்டு'' வெளியாகும் என்று நினைத்து, அந்தப் பையனை மலையிலிருந்து கீழே தள்ளி விட்டார்களாம்.'' என்று பத்திரிகையில் தகவல் வெளி வந்தது. இதைப்போல் பல செய்திகள் வெளிவருவதைக் காணலாம். பயணம் ஒரு கலை. ஆனால் பயணத்தில் ஏமாந்தால், பயணிக்குப் பெரிய பெரிய அபாயம் உண்டாகும் என்பது திண்ணம்.

ஒரு சமயம் மைசூர் குண்டல் பேட்டையில் நான் நான்கு நாட்கள் தங்கி இருந்தேன். ஒரு நாள் இரவு எட்டு மணி இருக்கும். சுற்றுப் பக்கங்களில் இருக்கும் கிராமங்களி

லிருந்து மாடுகளை விலைக்கு வாங்கிக்கொண்டு பத்துப் பதினைந்து பேர் நான் தங்கி இருக்கும் இல்லத்திற்கு எதிரில் இரவு எட்டு மணிக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஓட்டி வந்தவை சுமார் அறுநூறு மாடுகள் இருக்கும். இந்த மாடுகளை இரவு ஒன்பது மணிக்குமேல் ஓட்டிக்கொண்டு போவதாக அவர்கள் சொன்னார்கள். இரவு ஒன்பது மணிக்குமேல் குண்டல் பேட்டையிலிருந்து கூடலூர், நிலம்பூர் மார்க்கமாகப் போனால் வழியில் ''பண்டிபூர்'' காடு குறுக்கிடுகிறது. அங்கு யானைகள்கூட இருக்கின்றன. இருள் ஆழ்ந்த காட்டில் மிருகங்களின் மத்தியில் மாடுகளையும் ஓட்டிக்கொண்டு காட்டு வழியில் எப்படிப் போவார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஆனால் அவர்கள் இத்தகைய பயணங்களுக்கு நன்கு பழக்கப்பட்டவர்கள். ஒரு கையில் விளக்கு, இன்னொரு கையில் தடி, தோளில் குடை, பெரிய கம்பளம், காலில் 'கர்' 'கர்' என்று ஓசை செய்யும் தடித்த செருப்பு இவற்றுடன் அவர்கள் புறப்பாட்டுக்குத் தயாராகிவிட்டார்கள். நூறு மைல் இருநூறு மைல்கள் கூட அவர்கள் போவார்களாம். குறுக்கு வழியில் நடந்தும் மாடுகளின்மேல் உட்கார்ந்தும் மணிக்கு ஆறு மைல் வேகத்தில் செல்லும் இவர்கள் ஓர் இரவில் சுமார் ஐம்பது மைல் கூடப் போவார்களாம்.

காலை சுமார் ஏழு அல்லது எட்டு மணிக்கு ஓர் ஊரி போய்ச் சேர்ந்ததும் அங்கு விற்பனையாகும் மாடுகளை விற்று விட்டு அன்று பகல் அங்கேயே மாடுகளுடன் மரத்தடியில் தாங்களும் நன்றாகத் தூங்கி, மீண்டும் இரவு எட்டு மணிக்குப் பயணத்தைத் துவங்குவார்கள். இரவில் நடந்து செல்லும் இவர்களது வருகையை எதிர்பார்த்து வழியில் சுமார், பத்து பதினைந்து டீக்கடைகளை மலையாளிகள் வைத்துக் கொண் டிருப்பதாகவும் சொன்னார்கள். காட்டு வழியில் போகும் பொழுது இவர்களுக்கு உற்றதுணை எண்ணெய்ப் பந்தம், ஏதாவது கொடிய விலங்குகள் குறுக்கிட்டால் உடனே பந்தத்தைக் கொளுத்திக் கொள்ளுவார்களாம். தீ என்றால்

காட்டு விலங்குகளுக்குப் பயம். அதிலும் பத்துப் பதினைந்து தீப் பந்தங்களை ஏக காலத்தில் கொளுத்தினால் யானை, கரடி, புலி எதுவானாலும் ஓட்டம் பிடிக்கத்தான் செய்யும். அவ்வாறு விரட்டி அடித்த பிறகு மறுபடியும் அந்தப் பந்தத்தை மண்ணைக் கொண்டு அணைத்து விடுவார்களாம். இவைகளை அவர்கள் சொல்லச் சொல்ல நான் ஆனந்தக் கடலில் மூழ்கினேன். என் உள்ளம் துடியாகத் துடிப்பதையும், நான் ஆர்வத்துடன் கேட்பதையும் கண்ட அவர்கள், “நீங்களும் எங்களுடன் ஓர் இரவு வந்துபார்க்கவும். நாங்கள் சொல்வதைக் கேட்பதைவிட நேரில் காணும் அனுபவம் நன்றாக இருக்குமல்லவா?” என்று அழைத்தார்கள். நானும் உடனே இரவு சாப்பாடு சாப்பிட்டுவிட்டு அவர்களுடன் ஒரு மாட்டுக்காரனைப்போல் புறப்பட்டேன்.

இரவில் ஆடுமாடுகளுக்கு நடப்பது கஷ்டமில்லை. மாடுகள் போகும் வழியில் நிதானமாகப் புல்லை மேய்ந்து கொண்டு செல்கின்றன.

அன்று இரவு நானும் செல்லக் காரணம், இரவில் மாட்டுக் கூட்டங்களுடன் காட்டு வழியில் நடந்து சென்றது இதுவே முதல் அனுபவம்.

நல்ல ஓர் எருமையின் மேல் என்னை உட்காரும்படி கட்டளையிட்டனர். நானும் அப்படியே உட்கார்ந்து கொண்டேன். நல்ல குளிர், காதுகளில் வலி எடுக்க ஆரம்பித்தது. உடனே என் பையிலிருந்து கொஞ்சம் பஞ்சுச் சுருளை எடுத்துக் காதில் வைத்துக்கொண்டேன். மூடு கண்ணாடி போட்டுக் கொண்டேன். அது வெயிலுக்குப் போடும் கண்ணாடி அன்று ‘என்னுடைய டார்ச் லைட்டுகளை எடுத்து அவர்களிடம் கொடுத்தேன். வழியில் ஒரே இருள் சூழ்ந்து இருந்தது. ஆனால் பட்டணங்களிலும், நகரங்களிலும் இரவில் லாரிகள் ஓடுவதைப் போல் இந்த “காட்ரோட்” (காட்டுவழி) டில் ஓடுவதைக் காண முடியவில்லை.

இரவு முழுவதும் மாடுகளுக்காக “ஓவ்—ஓவ்” என்று குரல் கொடுத்துக் கொண்டே நடந்து வந்தார்கள். என்

கண்களில் தூக்கம் தலை தூக்கி ஆடியது. அதைச் சமாளிக்க நான் சிறிது தூரம் நடப்பதும், சிறிது தூரம் எருமையில் சவாரி செய்வதுமாக பயணம் செய்தேன். இப்படி நடந்து செல்லும்பொழுது, தனித்த ஓர் உருவம் எங்களுக்கு முன்னால் அந்த இருளில் காட்டுப் பாதையில் நடந்துச் சென்றால், அந்த உருவத்தைப் பற்றி என்ன நினைப்பது? ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சிந்தனை உருவானது. கள்ளக் கூட்டத்தின் தலைவனோ! அல்லது பேயோ! பிசாசோ! என்று பலர் சிந்தனை செய்தோம். கடைசியில் அந்த உருவம் எங்களுடன் கலந்து மௌனமாக நடக்க ஆரம்பித்தது. எனக்குப் பின்னால் வந்து என்னையும், என் மூட்டைகளையும் கவனித்தது. அது என் பின்னால் வரும்பொழுது, மாட்டுக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் என் பின்னால் வந்து நின்றார். எனக்கோ அந்த உருவத்தையும் நம்ப முடியவில்லை. என்னுடன் வந்த, மாட்டுக் கூட்டத்தாரின் மேலும் சந்தேகம் உண்டானது.

சரி வந்தது வந்து விட்டோம். கொலைக்காரர் களே தான் எனக்குத் தெய்வம் என்ற நம்பிக்கையில் நடந்தேன். என் இதயம் சற்றுச், சோர்வு அடைந்தது. உடனே அன்று அண்ணா அவர்கள் அடிக்கடி கூறுவதை நினைத்துக் கொண்டேன். "எதையும் தாங்கும் இதயம் வேண்டும்" என்று கூறுவார்கள். இதை நினைத்ததும் சற்று தைரியம் வந்தது. இப்படி நடந்து செல்லும்பொழுது திடீரென்று எல்லோரும் கூக்குரல் கொடுத்தார்கள். உடனே எல்லோரும் பந்தங்களைக் கொளுத்திக் கொண்டோம். நான் மட்டும் ஒரு கையில் டார்ச்சை வைத்துக் கொண்டேன். மாடுகள் எல்லாம் "ஊம்—ஊம்—ஊம்" என்று ஊங்காரம் கொட்டின. என்னுடைய டார்ச்லைட் மூலம் வெகுதூரம் அடித்துப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் தெரியவில்லை, மாடுகள் அமைதி அடைந்ததும் தீப்பந்தத்தை அணைத்து விட்டார்கள்.

"என்ன செய்தி" என்ன கண்டீர்கள்? எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் ஏதோ இரத்த வாடையை மட்டும்

என்னுடைய மூக்கு மோப்பம் பிடித்தது என்று கூறினேன்.

அதற்கு அவர்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா?

''சமீபத்தில் புலி நம்மைத் தொடர்ந்து வருவதை மாடுகள் தெரிந்து கொண்டுதான், ''நமக்கு ''ஊம்'' என்ற குரல் கொடுத்தது. 'உஷார்' செய்தது என்றனர்.

இதை இரவு காலத்தில் நடந்து செல்லும் பொழுது, அதிலும் காட்டில் கேட்டால் எப்படி இருக்கும்? கடைசியில் ஓரிடத்தில் கொஞ்சம் வெளிச்சம் தெரிந்தது, அங்கே மாடுகளைக் கூட்டமாகப் படுக்க வைத்தார்கள். அதுதான் 'டீக்கடை' என்று கூறினார்கள். எல்லோரும் கடைக்குள் நுழைந்தோம். வழியில் எங்களுடன் வந்த உருவமும் உள்ளே வந்தது. விளக்கு வெளிச்சத்தில் அவரைக் கண்டதும், மாடுகளை மேய்க்கும் நாடோடிக் கூட்டந்திலிருந்த ஒருவன், நெடுஞ்சான்கிடையாக, அவர் காலில் விழுந்து வணங்கினான். கடந்த ஐந்தாறு ஆண்டு களாக்கத்தான் அவன் மாட்டு வியாபாரம் செய்து வருகிறான். வந்தவரோ ஒன்றும் தெரியாமல் விழித்தார். பிறகு மாட்டு வியாபாரியே தனது கதையைச் சொன்னான்.

''இப்பொழுது மாட்டு வியாபாரியாக இருக்கும் நான், முன்பு திருட்டுத் தொழிலில், கள்ளக் கூட்டத்தின் தலைவனாக இருந்தேன். அன்று எனக்குப் பத்துப் பேர் சகாக்கள் இருந்தார்கள். இரவு காலங்களில் ஆடு மாடுகளை ஓட்டி வரும் நாடோடியரை மடக்கி, அவர்களது மாட்டையும், பணத்தையும் கொள்ளை அடித்து எங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தோம். அப்படியிருக்கும் பொழுது ஒருநாள் இந்த மகானை, அன்று ஏதோ ஒரு காட்டு வழியில் மூட்டையுடன் கண்டோம். உடனே இவரிடம் பணம் ஏதாவது இருக்கு மென்று நினைத்து இவரையும் வழிமடக்கினோம். ஆனால் இவரோ அன்று தம்மிடம் இருக்கும் பொருளை எல்லாம் கொடுத்து விடுகிறேன்' என்றும், ஆனால் இவர் கேட்கும்

மூன்று கேள்விகளுக்கு மட்டும் பதில் கூறவேண்டுமென்றும் கூறினார். கள்ளக் கூட்டத்தின் தலைவன் என்ற முறையில் நானே கேள்விகளுக்குப் பதில் கூறுவதாக ஒப்புக் கொண்டேன். இந்த மகான் அன்று கேட்டவை :

1. இவ்வளவு ஆண்டுகளாகத் திருடி நீங்கள் என்ன சேர்த்து வைத்து இருக்கிறீர்கள்?

2. மானிடர் தூங்குவதற்கு ஆண்டவன் இரவைக் கொடுத்தார். உங்கள் வயதில் எத்தனை நாட்கள் இரவில் நிம்மதியாகத் தூங்கினீர்கள்?

3. உன் மனைவியைப் பார்த்து உன் மகன் "அம்மா" அப்பாவுக்கு என்ன வேலை?" என்று கேட்டால் அவள் என்ன பதில் சொல்லுவாள் என்று நீ எதிர்பார்க்கிறாய்? இந்த மூன்று கேள்விகளுக்கும் நீ பதில் கூறிய பின் என்னிடமுள்ள பொருள்களை எடுத்துக் கொள்ளுங்கள். நான் கோவணத் துடன் போகிறேன்." என்று கூறி இவர் அன்று நடந்து சென்றார்.

அன்று கேட்ட இந்தக் கேள்வி எல்லோருடைய உள்ளத்தையும் தொட்டுவிட்டது. அன்று முதல் நானும் என் சகாக்களும் திருட்டுத் தொழிலை விட்டு விட்டு வியாபாரம் தொடங்கினோம்.

மற்றவர்களும் ஏதோ தொழில் செய்கின்றனர்." என்று கூறி முடித்தான் மாட்டு வியாபாரி.

இந்தச் சம்பவம் அன்று இரவு என் உள்ளத்தை உறுக்கியது. உண்மையில் அவர் ஒரு பெரிய மகான்தான். விடைபெற்றுக் கொண்டு, மைசூரிலிருந்து உதகைக்குப் போகும் பஸ்ஸில் உதகைக்குப் பயணமானேன்.

பஸ் பயணத்தில் மறக்க முடியாததோர் சம்பவம் என் வாழ்நாளில் உண்டானது அது: அன்று மாலை சுமார் ஏழு மணிக்கு எங்கள் டாக்சி நாகர்கோவிலிலிருந்து கன்னியாகுமரியைப் போய் அடைந்தது. என் பையில்

எல்லாப் பொருள்களும் இருந்தன. கார் டிரைவருக்கு நன்றி கூறிவிட்டு, காரைவிட்டு இறங்கினோம்.

பயணிகளின் வாடகை அறைகளில் இடமில்லை என்று சொல்லிவிட்டார்கள். எங்கே தங்குவது? என்னிடம் இருப்பது சரியான முழுவிலாசம் இல்லையே' என்ற மனக் கவலை பெரியதாக இருந்தது. சரி எங்களிடமிருக்கும் அரை குறையான விலாசத்தை வைத்துக் கொண்டு அங்குச் சிலரைக் கேட்டேன். ஒருவர், நான் வந்து அவருடைய பங்களாவைக் காட்டுகிறேன்'' என்று கூறி எங்களை அழைத்துச் சென்றார். ''ஐயோ! அது பங்களாவாமே! நாமே அவர்களுக்குத் தெரியாத ஏழைகள். என் கட்டு ரையின் மூலம் அறிமுகமான நண்பர்கள். எப்படி வரவேற்பு கிடைக்குமோ தெரியவில்லையே? வருவதற்கு முன் கூட அவர் களுக்குக் கடிதம் எழுதவில்லையே. வரும் பொழுதே ஒரு பெரிய ஆபத்து ஏற்பட்டது. அது ஆண்டவன் அருளால் அகன்றது.

ஒரு வேளை அவர்களும் எங்கேயாவது வெளியூருக்கோ, அல்லது சினிமாவுக்கோ சென்று இரவு பத்து மணிக்கு வந்தால் என்ன செய்வது'' என்ற சிந்தனையுடன் அந்த வீட்டைக்காட்ட அழைத்துச் செல்லும் வழிக்காட்டியுடன் சென்றேன்.

என் மகளும் மனைவியும் என் பின்னால் வருகிறார்கள். அவர்களும் என்னமோ சிந்தனையுடன் தான் வருகிறார்கள் என்பதை அவர்களின் முகவாட்டமே கூறியது.

''பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றிய கடவுள், இன்னுமா காலை வாரி விடுவார்?'' என்ற சிந்தனையுடன் போகும் போது ''அவர்கள் இருக்கிறார்கள்'' என்று வழிகாட்டி கூறினார்.

நாங்கள் போய்த் தயங்கித் தயங்கி கேட்டின் அருகில் சென்று ''சார் இது சென்னையில் 'உமா'வில் வேலை செய்யும் திரு. தாஸ் அவர்களின் இல்லமா?'' என்று பயந்து கொண்டே

கேட்டேன். ஏனென்றால் முன்னாலேயே பெரிய ஆபத்தினால் பயந்து போய் மனக்கவலை அடைந்து விட்டோம்—அல்லவா? இன்னும் எங்களை விட்டு அந்த பயம் நீங்காமலே இருந்தது. மேலும் நான் கேட்கும் போது என் நாக்குச் சற்று அச்சத்தால் தடுமாறியது. அதற்குள், "இல்லத்திற்கு அழகு இல்லாள்" என்பதற்கேற்ப யாரோ ஒரு நடுத்தர வயதுடைய அம்மையார் தம் குழந்தையுடன் ஓடி வந்தார். "நான் தான் பிலோ இருதயநாத். நாங்கள் சென்னையிலிருந்து வந்துள்ளோம்." என்று சொல்லி என் வாயை மூடுவதற்குள், அந்த அம்மையார் "வாங்கோ! வாங்கோ!" முதலில் உள்ளே வாருங்கள். மூட்டைகளை எல்லாம் உள்ளே வையுங்கள்." என்று கூறி உள் பகுதிக்கு அழைத்துச் சென்றார்கள். எங்களுக்கு வழியில் ஏற்பட்ட ஆபத்தை, இந்த அன்பு அழைப்பு ஒரு விதமாக மாற்றியது.

"ஏன் உங்கள் முகங்கள் எல்லாம் ஏதோ ஒரு மாதிரியாக பயந்தவர்களைப் போலத் தெரிகின்றனவே. குழந்தை பிரேமலாவின் முகங்கூட மாறுபட்டு இருக்கிறதே. வழியில் ஏதாவது ஆபத்து ஏற்பட்டதா?" என்று அந்த அம்மையார் கேட்டார்.

"அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்பது நம் பழமொழி அல்லவா? மேலும், 'உலகில் உண்மையாக நடக்கும் உத்தமிகளுக்கு மறைவில் என்ன நடந்தாலும், அது அவர்களின் உள்ளத்தில் தெரியும்' என்று பெரியவர்கள் கூறுவார்கள். அதைப்போல் இருந்தது அந்த அம்மையார் வினவியது.

"ஆமாம்! வழியில் பெரிய ஆபத்து ஏற்பட்டது. அது ஆண்டவன் அருளால் நீங்கினாலும் அதனால் ஏற்பட்ட "ஷாக்" இன்னும் எங்களை விட்டு அகலவில்லை. என்னுடைய முப்பதாண்டு பயணத்தில் இதுதான் முதல் தடவை. ஏனென்றால் இன்று காலை நான்கு மணியிலிருந்து மாலை ஏழு மணிவரையில் முன்னூற்றுப் பத்து மைல் தொலைவு பஸ்ஸில் பயணம் செய்து இருக்கிறோம். அந்த அலுப்பால்,

இந்த விபத்து ஏற்பட்டதோ என்னவோ'' என்று கூறுவதற்குள் காப்பி கொண்டு வந்தார் அந்த அம்மையார். அதைக் குடித்துவிட்டு நான் சொல்ல ஆரம்பித்தேன்.

''நாங்கள் போகும் கார் வேகமாகத்தான் போய்க் கொண்டிருந்தது.'' சார்! கொஞ்சம் வேகமாய் ஓட்டுங்கோ. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன், உங்களுக்கு வணக்கம் சார்,'' என்றேன் நான் டிரைவரிடம். ''ஆண்டவனே! எங்களைக் காப்பாற்ற வேண்டும். குடும்பத்துடன் வந்தேன்.'' என்று மனத்தில் வேண்டிக் கொண்டேன்.

மறுபடியும் டிரைவரைப் பார்த்து ''சார்! கொஞ்சம் தயவு செய்யவும். எப்படியாவது காரைக் கொஞ்சம் வேகமாக ஓட்டக் கூடாதா?'' என்று கை கூப்பி டிரைவருக்கு வணக்கம் கூறினேன்.

''சார்! நான் வேகமாகத்தான் ஓட்டுகிறேன். இதற்கு மேல் என்னால் ஓட்ட இயலாது. மேலும், உங்கள் முகவாட்டத்தைக் கண்டு நான் இதற்கு மேல் ஓட்டினால் ஏதாவது ஆபத்து ஏற்பட்டால் அதனால் ஏற்படும் கால தாமதத்தையும், கஷ்டங்களையும், நஷ்டங்களையும் தயவு செய்து யோசித்தால் நீங்களே இப்படிச் சொல்லமாட்டீர்கள். என் வண்டியில் ஏறிய பிறகு எல்லாவித மனக்கவலைகளும் உடனே நிவர்த்தியாகும். நீங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம். நீங்கள் என்னைக் கும்பிடுவதைக் கண்டால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. நீங்கள் ரஸ்தாவின் இரண்டு பக்கங்களிலும், மட்டும் கொஞ்சம் பார்த்துக் கொண்டே வரவும். கட்டாயம் உங்களுக்குக் கிடைக்கும் கவலைப்பட வேண்டாம்.'' என்று அந்த டிரைவர் ஆறுதல் கூறினார்.

காரும் காற்று வேகத்தில் தான் பறந்தது. எவ்வளவு வேகமாகச் சென்றாலும்; முன்னால் ஓடும் பஸ்ஸைக் கண்ணால் கூட காண முடியவில்லையே. நான் என்ன செய்வேன்? யாராவது அந்தப் பையை எடுத்துக் கொண்டு போய் விட்டார்களோ! என்ற மனவேதனையே என் உள்ளத்தை அழுத்தியது.

என் மனைவியும், என் மகளும் காரின் பின் சீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் வாயைத் திறக்கவே இல்லை. என் மகள் மட்டும் ஏதோ தன் 'இள உள்ளத்தில் சிந்தனை செய்கிறாள்' என்பதை அவளுடைய முகம் காட்டியது. மனைவியின் முகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. அவளுடைய மனக்கவலையையும் முகவாட்டத்தையும் என்னால் வர்ணிக்க இயலாது. எனக்கு என் பக்கத்தில் என்ன நடக்கிறது என்று ஒன்றுமே தோன்ற வில்லை. காரின் வேகத்தைக் கவனித்தேன். வேகத்தின் முள் 'ஐம்பது மைல் என்று காட்டியது. அப்போது தான் என் உள்ளத்தில் சற்று அச்சம் தோன்றியது.

''எங்கேயாவது கார் மோதினால் என்று நினைத்தேன்...? உடனே கண்களை என் கைக்குட்டையால் மூடிக் கொண்டேன். பின் சீட்டிலிருந்து என்னை யாரோ தொடுவது போல் உணர்ச்சி ஏற்பட்டது. திரும்பினேன். முன்னால் எதையோ காட்டினாள் என் இல்லாள். ''ஆ!'' அதோ போகிறதே அரசாங்க பஸ் ''K—124'' நெம்பரும் சரிதான். ''டிரைவர் சார்! அதைக் கொஞ்சம் 'ஓவர் டேக் செய்யுங்கள்' என்று சொல்லி வாயை மூடுவதற்குள் நாங்கள் வந்த கார் அந்த பஸ்ஸை ''ஓவர்டேக்'' செய்து கொண்டிருந்தது.

''ஒல்டான்—ஒல்டான்'' என்று கத்தினேன் பஸ்ஸில் இருந்தவர்கள் எல்லோரும் தங்களுடைய தலையை வெளியில் நீட்டினார்கள். அதைக் கூட நான் கவனிக்கவில்லை. எங்கள் கார், பஸ்ஸின் முன்னால் சுமார் இருபது கெஜதூரத்தில் போய் நின்றது. காரைவிட்டு இறங்கியதும் பஸ்ஸை நோக்கி வேகமாக ஓடினேன். ஒரே 'ஜம்பில்' பஸ்ஸின் உள்ளே குதித்தேன்.

''யாராவது ஒரு காக்கிப் பையைப் பார்த்தீர்களா?'' என்று பயணிகளை பார்த்துக் கேட்டேன். ''இந்தப் பை உங்களுடையதா?'' என்று ஒரு பயணி என் பையைத் தூக்கிக் காட்டினார். ''ஆமாம் சார்'' என்றேன். மிக்க சந்தோஷம் சார்! நீண்ட நாட்களாக நான் பிலோ இருதயநாத்தைக்

காணவேண்டும் என்று நினைத்தேன். நான் மட்டும் அல்ல. தமிழ் நாட்டில் அநேகர் "உங்களைக் காணவேண்டும் என்று நினைக்கின்றனர். யார் உங்களுடைய கட்டுரையை வாசிக்கிறார்களோ அவர்கள் அனைவரும் அங்ஙனமேதான் கூறுகிறார்கள். இன்று நான் பாக்கியசாலிதான். இந்தப் பையின் மேல் தங்களுடைய "விசிட்டிங்கார்டு" தொங்குவதால்தான் நான் இதை என் மடியில் வைத்துக்கொண்டேன். நீங்கள் வராவிட்டால் இதை ஏதாவது சென்னையிலிருந்து வெளி வரும் பத்திரிகை மூலம் அனுப்பலாமென்று நினைத்தேன். நீங்களே வந்துவிட்டீர்கள் என்று கையைக் குலுக்கினார். அவருக்கு நன்றி கூறிவிட்டு என் காரில் வந்து ஏறிக் கொண்டேன்.

"சார்! நான் சொன்னது சரியாய்ப் போனது பார்த்தீர்களா" என்றார். பெருமையுடன் எங்கள் கார் டிரைவர்.

சுமார் இருபது ஆண்டுகளாகக் காடுகளில்சுற்றும் நான் இந்தக் காட்டு மூலிகைகளிலும், காடர்களுடைய மருந்துகளிலும் நம்பிக்கை உடையவன். இக்காரணத்திற்காக நான் கன்னியாகுமரியிலிருக்கும் 'மருந்துவால்' மலைக்குச் சென்று அந்த மலையில் என்னென்ன பச்சிலை மூலிகைகள் இருக்கின்றனவென்று ஆராய்ச்சி செய்யக் குடும்பத்துடன் வந்தேன். திருநெல்வேலி வரையில் இரயிலில் வந்து அங்கிருந்து நாகர்கோவில் பஸ்ஸில் வந்தோம். நாகர்கோவில் கன்னியாகுமரி பஸ்ஸில் எங்கள் சாமான்களை வைத்துக்கொண்டு உட்கார்ந்தோம். பஸ் புறப்படும் சமயத்தில் டிக்கட்டு வாங்காதவர்கள் எல்லோரும் தயவு செய்து பஸ்ஸைவிட்டு இறங்கிவிட வேண்டும்" என்று கூறினார் கண்டக்டர். முதலில் மற்றொரு பக்கம் கியூவில் நின்று டிக்கட்டு வாங்க வேண்டும் என்பது எங்களுக்குத் தெரியாது. ஆகையால் நாங்கள் பஸ்ஸைவிட்டு எல்லாச் சாமான்களையும் எடுத்துக்கொண்டு இறங்கியதும் அந்தச் சாமான்களுக்கு என் மனைவியையும் மகள் பிரேமாவையும் காவல் வைத்து நான் மட்டும் டிக்கட்டு வாங்க ஓடினேன்.

டிக்கட்டு வாங்கும் சமயத்தில் தான் என் பையைக் காணவில்லை என்பதும் அதை நான் பஸ்ஸிலேயே வைத்து விட்டேன் என்பதும் நினைவுக்கு வந்தன. ஓடோடி வந்தேன். மனைவியும் அந்தப் பையை எடுக்கவில்லை. அதற்குள் பஸ்ஸும் சுமார் ஐந்து மைல் ஓடியிருக்கும் என்று தெரிந்தது. அப் பையில் தான் பிரயாணத்திற்கு வேண்டிய பணமும், என்னுடைய காமிரா, மனைவியின் நகைகள் அதுவரையில் நாலாயிரம் மைல் பிரயாணம் செய்தபோது எடுத்த குறிப்புகள் உள்ள நோட்டுகள் புகைப்பட ரோல்கள் முதலியவை இருந்தன. இவ்வளவு முக்கியமான பையை நான் எங்குச் சென்றாலும், சாப்பிடும் பொழுதும் சரி என் தோளை விட்டுக் கீழே வைத்தது கிடையாது. நான் பஸ்ஸின் முன் சீட்டில் உட்கார்ந்தேன்.

''டிக்கட்டு இல்லாதவர்கள் இறங்கிவிடவும், பஸ் புறப்பட போகிறது என்று கூறியதும், உடனே இறங்கி விட்டேன். ஏனென்றால் டிக்கட் வாங்காதவர்களை ஒரு பர்லாங்கு தூரம் சென்றதும் இறங்கினால், மறுபடியும் அங்கிருந்து பஸ் நிலையத்தை நாடி அல்லவா வரவேண்டும் என்று நினைத்துக்கொண்டு உடனே இறங்கிவிட்டோம். அந்தப் பைமட்டும் பஸ்ஸில் போய்விட்டது. எங்களுக்கு எப்படி இருக்கும்? எங்களுடைய பயணத்திட்டமே அந்தப் பையில் இருக்கும்போது எங்களுக்கு என்ன செய்வது என்று தெரியாமல் மூளை குழம்பிவிட்டது.

உடனே இச் செய்தியை அரசாங்க பஸ் இன்ஸ்பெக்டரிடம் கூறினேன். அவர் உயரத்தில் குறைவானர்! நெற்றி சிவ மயமாய்க் காட்சி அளித்தது. என் பெயரைக் கேட்டதும். ''என்ன சார் எவ்வளவோ பயணம் செய்யும் நீங்கள் இப்படிச் சிந்தனையைச் சிதறவிடலாமா? பை-பஸ்ஸில் இருந்தால் அதில் எவ்வளவு ரூபாய் இருந்தாலும் சரி!—அது எங்கேயும் போகாது. ஆனால் கண்டக்டர் கண்ணில் சிக்காமல் தங்களுடைய பையை யாராவது எடுத்துக் கொண்டு இறங்கிவிட்டால் நாங்கள் என்ன செய்ய முடியும்''

என்று கூறி உடனே ஒரு காரை அழைத்து "அந்த பஸ் நம்பர் "K-124", உடனே இதில் அப்படியே கன்னியா குமரிக்கும் போய்விடுங்கள். நீங்கள் இந்தக் காரில் வேக மாகச் சென்றால் அந்த பஸ்ஸைச் சுமார் பத்தாவது மைலில் பிடித்துவிடலாம்" என்று கூறித் தன்னிடமிருக்கும் காகிதத்தைச் சோதித்துப் பார்த்த பிறகு "எல்லாப் பயணி களும் கன்னியாகுமரி என்றே டிக்கட்டு வாங்கி இருப்பதால் ஒருவரும் வழியில் இறங்கமாட்டார்கள். எனவே உடனே இதில் செல்லவும்.

இந்தக் காருக்கும் ஏதாவது கொடுத்துவிடவும் "என்று கூறி எங்களை இந்தக் காரில் ஏற்றி அனுப்பினர். அவருடைய தொண்டும் சேவையும், அன்பும் தைரியமான வார்த்தையும் கடலினும் பெரியன. இந்த நிலையில் நாங்கள் இன்று காரில் வந்து பஸ்ஸைப் பிடித்து; பஸ்ஸிலிருந்து பையை வாங்கிக் கொண்டதும் போதும் அதே காரில் கன்னியாகுமரிக்கு வந்ததும் போதும்" என்று காரைவிட்டு இறங்கியதும், வழிக் காட்டியின் மூலம் தங்களுடைய இல்லத்தை நாடித் தேடி வந்தோம்" என்று திரு. தாஸ் குடும்பத்தாரிடம் கூறினேன்.

இச் செய்தியைக் கேட்ட அவர்கள் "பாவம்! இவ்வளவு வேதனையுடன் பயணம் செய்து விஷயங்களைச் சேகரித்துக் கொண்டு போகிறீர்கள். ஆனால் நேரில் கண்ட அனுபவங்கள் உங்களுக்கு மாத்திரமல்ல தமிழ்நாடு முழுவதற்கும் தமிழர்கள் அனைவருக்கும் அல்லவா பயன்படுகின்றன.

எங்கள் ஊரில் நாங்கள் இல்லாவிட்டாலும் பிறரும் ஓர் அளவுக்கு உதவி செய்வார்கள். தங்களுக்கு வேண்டிய கூலியைச் சண்டை போட்டு வாங்கிக் கொள்வார்களே தவிர யாருமே பிறருடைய பொருள்களை எடுக்கமாட்டார்கள்" என்று அந்த அம்மையார் கூறினர்.

அன்றிரவு ஒரு பெரிய அறையைச் சகல வசதிகளுடன் கொடுத்தார்கள். அன்றிரவு நன்றாகத் துயில் கொண் டோம்."

# பயணம் இன்பமா? துன்பமா?

ஒரு சமயம் ஏதோ ஓர் ஊரில் காலையில் ஏழு மணிக்கு பஸ் அந்த ஊரை விட்டு புறப்பட்டால் மறுபடியும் அன்று மாலைத்தான் போன பஸ் திரும்பி வரும். திரும்பி வந்த பஸ் மறுபடியும் மறு நாள் காலையில் தான் போகும் என்று சொன்னார்கள். சுமார் பத்து நிமிஷங்கள் காட்டிலிருந்து நடந்து வரத் தாமதமானதால் மறு நாள் காலை வரையில் ஒருவருடைய திண்ணையில் தங்க வேண்டுமே என்ற கவலையில் உட்கார்ந்தோம் அன்று என்னுடன் வந்த நண்பர் திடீரென்று ஒரு லாரியை நிறுத்தினார் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். "வாங்கோ லாரியில் சத்திய மங்கலம் போனால், அங்கு நமக்கு பஸ் வசதிகள் கிடைக்கும்" என்று கூறினார்.

எப்பொழுதும் நான் லாரி பயணத்தை அதிகமாக விரும்புகிறவன். ஆனால் சில ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட ஓர் ஆபத்திலிருந்து லாரி பயணத்தை விரும்புவதில்லை. அன்று பஸ் வசதியே இல்லாததால் நண்பர் சொன்னதை உடனே ஒப்புக் கொண்டேன். நானும் நண்பரும் லாரியில் ஏறிக் கொண்டோம். லாரியும் புறப்பட்டது. காட்டு வழியாகச் சுமார் ஐந்து மைல்கள் ஓடி இருக்கும். "டமார்" என்ற ஓசைக் கேட்டது. உடனே லாரியும் நின்றது. அன்று நாங்கள் வந்த வழி பஸ் வராத குறுக்கு வழி ரோட்டின் ஓரமாக லாரியை தள்ளி விட்டு, லாரியின் பக்க வாட்டத்திலிருக்கும் கித்தான்களை மூடிவிட்டு லாரியில் சிறிது நேரம் உட்கார்ந்தோம். ஊமையன் கனவு கண்டால் அதை யாரிடம் சொல்ல முடியும். முள் வேலியின் மேல் துணியைப் போட்டுவிட்டேன். நிதானமாகத்தான் எடுக்கவேண்டும் அல்லவா? அங்குக் குடிக்க தண்ணீருமில்லை; ஆண்டவன்

செயல் என்று பேசாமல் இருந்தேன். கடைசியில் இரவு இரண்டு மணி இருக்கும். லாரி ரிப்பேர் ஆகிவிட்டது என்று கூறினர்கள். லாரியும் புறப்பட்டது. கடைசியில் காலை ஐந்து மணிக்கு ஓர் ஊரை வந்து சேர்ந்தோம். அங்கே ஒரு டீக்கடை இருந்தது. அங்கே காப்பி குடித்து விட்டு லாரிக்கு ஒரு சலாம் போட்டு விட்டு நானும் நண்பரும் பயணிகள் பஸ்ஸில் ஏறிக் கொண்டோம்;

''நண்பரே! எப்பொழுதும் லாரியில் பயணம் செய்தால் மிகவும் ஆபத்துக்கள் உண்டாகும்; காரணம் பஸ்ஸில் சுமார் இருபது முப்பது பேராவது இருப்பார்கள். ஒருவருக்கு ஒருவர் துணை கிடைக்கும். இரவு காலமாக இருந்தால் முப்பது பேருக்கு வரும் அபாயம் நமக்கும் வரட்டும் என்று இருக்கலாம். மேலும் ஏதாவது திருடர் கூட்டம் வந்தாள் முப்பது பேர் இருக்கிறோம் என்றதோர் தைரியமிருக்கும். ஆனல்லாரியிலோ நான்கு ஐந்து பேருக்கு மேல் இருக்க மாட்டார்கள். லாரி டிரைவரிடமும் லாரி உதவியாளரிடமும் நம்மைப் போல் பணமும் சாமான்களுமிரா. அவர்களிட மிருக்கும் பணத்தையும் லாரியில் எங்கேயாவது சொருகி வைத்து விடுவார்கள். ஆனல் நமக்கோ அந்த இடமெல்லாம் தெரியாது. மற்றொரு காரணமும் இருக்கிறது. சில ஆண்டு களுக்கு முன் பூனவிலிருந்து கார்லாகுகைக்கு செல்ல வேண் டுமென்று லாரியில் புறப்பட்டேன். இப்படியே மாலை சுமார் ஏழு மணிக்கு என்னுடைய நண்பர் லாரியில் புறப்பட்டார். லாரியில் ஒரு பொருள் துண்டாக உடைந்து ரோட்டில் விழுந்து விட்டது. உடனே அவர் லாரியை நிறுத்தி விட்டு எதிரில் வரும் மற்றொரு லாரியை நிறுத்தினர். நீங்கள் இங்கேயே உட்கார்ந்துக் கொண்டிருங்கள். நான் இந்த லாரியில் போய் சாமானை வாங்கி வந்து விடுகிறேன். வரும் பொழுது உங்களுக்கு ஆகாரமும் வாங்கி வந்து விடுகிறேன்'' என்று கூறி இரவு சுமார் ஒன்பது மணிக்குச் சென்றவர் மறு நாள் காலை சுமார் நான்கு மணிக்குத் தான் மற்றொரு லாரி யில் வந்தார். மறுநாள் வரையில் என் நிலையை நான் உங்களுக்கு எடுத்துக் கூறவேண்டியதில்லை. முன் இரவு

விளக்குகள் இல்லாத ரோட்டில் தனிமையில் இருந்தேன். மறு நாள் காலையில் ஏதாவது சாப்பிடலாமென்ருலோ அருகில் காப்பி ஓட்டலோ, டீக்கடையோ ஒன்றுமே இல்லை. முன் நாள் இரவு சுமார் ஏழு மணிக்குச் சாப்பிட்டது. தண்ணீர் மட்டும் கொஞ்சம் கிடைத்தது. அப்படியும் சில லாரிகளும் சில கார்களும் வந்தன. அவர்கள் என்னை வரும்படி அழைத்தார்கள். ஆனல் அவர்களின் அழைப்புக்கு நான் போய் விட்டால், என் பொறுப்பிலுள்ள லாரியையும் லாரியிலிருக்கும் பொருள்களையும் என்ன செய்வது? அது அவ்வளவு ஒழுங்கானதும் அன்று. ஆகையால் என்னை பற்றிய கவலை, என் நண்பருக்கும் இருக்காதா? அவரும் என்னைப் போல் மனிதன் தானே என்று சற்று பொறுமையுடன் இருந்தேன். மறுநாள் மாலை வந்தவர் மிகவும் வருத்தத்துடன் என்னை மன்னிக்க வேண்டும். நான் போவதற்கு முன் கடையை மூடி விட்டார்கள். மேலும், நான் கேட்ட லாரியின் பொருள் அந்த கடையில் இல்லை என்றும், மறு நாள்தான் பல கடைகளில் தேடிப் பார்க்க வேண்டும் என்றும் கூறினர்கள். இன்று பகல் சுமார் பன்னிரண்டு மணிக்குத்தான் பொருள் கிடைத்தது.

பொருளை வாங்கியதும் இங்கே வருவதற்கு எனக்கு லாரியில் இடம் கிடைக்கவில்லை. ஏனென்ருல் முன்னல் மூன்று பேர் தான் உட்கார வேண்டும், என்ற சட்டம் தான் உமக்குத் தெரியுமே என்று கூறினர். பிறகு சுமாரீர் நான்கு மணிக்கு வந்தவர் கொண்டு வந்த பொருளை எங்கள் லாரியில் பூட்டிச் சரி பார்த்து அந்த இடத்திலிருந்து புறப்படுவதற்குள் மாலை சுமார் ஏழு ஆகி விட்டது. தலையெழுத்தே என்று பேசாமலிருந்தேன். அன்று முதல் லாரியில் பயணமே செய்யக் கூடாது என்று தீர்மானித்தேன். ஆனல் ஒரு வசதியும் இல்லையே என்றும், மேலும் நீங்கள் கூப்பிட்டீர்களே என்று நினைத்துத் தான் இன்று லாரியில் பயணம் செய்ய ஒப்புக் கொண்டேன். சரி! ஏதோ வந்து சேர்ந்தோம்.

பயணம் என்பது ஒரு நல்ல கலைதான் ஆனால் பயணத்தில் நிதான புத்தியோ, சற்று முன் யோசனையோ இல்லா விட்டால் நம் உயிருக்கே ஆபத்து உண்டாகும். பயணத்தில் கோடிக்கணக்கானவர்களுக்கு அபாயம் உண்டாவதைப் பற்றி நாம் கேட்டும் பத்திரிகையில் வாசித்துமிருக்கிறோம் அல்லவா? என்று பேசிக் கொண்டே வந்தேன்.

என்னுடைய பயண அனுபவங்களில் எவ்வளவோ இடையூறுகள், சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன ஒரு சமயம் சுமார் எழுபது ஆசிரியர்கள் உல்லாச பயணம் புறப்பட்டார்கள். அவர்கள் ஆசிரியராக இருந்தும் போதுமான அனுபவம் இல்லாதவர்கள். காரணம் ஒவ்வோர் ஊரையும் சுற்றிப் பார்த்த பின் பஸ் நிலையத்துக்கு வந்து ஒவ்வொரு பஸ்ஸிலும் ஐந்து, பத்து, இருபது பேர் என்று ஏற்றி ஏற்றி விடுகிறார் அந்த கூட்டத்தின் தலைவர். முதலில் போனவர்கள் மற்றொரு பஸ் நிலையத்தில் போய் தங்க வேண்டும் எல்லோரும் வந்த பின் ஓட்டலுக்கோ வேறு விடுதிக்கோ தங்குவதற்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

இந்த நிலையில் என்ன ஆனது என்றால் ஓர் ஆசிரியர் முன் கூட்டத்தில் போய்விட்டார் என்று நினைத்துக் கொண்டு தலைவராக இருந்தவர் கடைசியில் வந்த பஸ்ஸில் போய் விட்டார். அந்த பஸ் ஸ்டாண்டில் தனித்து நின்ற ஆசிரியரின் உள்ளம் திகில் அடைந்து விட்டது. காரணம் அவரிடம் பணம் இல்லாதது ஒன்று, அடுத்து அவர்கள் எந்த ஊருக்கு போகிறார்கள் என்றும் தெரியவில்லை. அப்படி அவர் திகைத்து நிற்கும் பொழுது தான் நான் போய் சேர்ந்தேன். விஷயங்களை கேள்வி பட்டதும் "ஐயா! நீங்கள் இங்கும் அங்கும் அலைய வேண்டாம். இந்தப் பஸ் ஆபீஸில் இருங்கள் நான் அந்த வழியாகத்தான் மற்றொரு ஊருக்கு போகிறேன் ஆகையால் அவர்கள் அங்கே இருந்தால் நான் விஷயத்தை கூறுகிறேன். அடுத்து இங்கே வரும் பஸ்ஸில் நான் உங்கள் பெயரைச் சொல்லி, இந்த பஸ் ஆபீசில் இருப்பதையும் சொல்லி பணம் அனுப்பும் படி ஏற்பாடுகள் செய்கிறேன்" என்று கூறிச் சென்றேன்.

நான் போய்ச் சேரும் போது பகல் சுமார் ஒரு மணி யிருக்கும். அப்பொழுது தான் அந்த பஸ் நிலையத்தில் தலை வருடன் சுமார் ஐந்து, ஆறு பேர் நின்று கொண்டு காணுமல் போன ஆசிரியரைப் பற்றி விசாரித்துக் கொண்டும் ஒவ்வொரு பஸ்ஸாகப் பார்த்துக் கொண்டுமிருந்தார்கள். உடனே அவர்களுக்கு விஷயத்தைச் சொல்லி திரும்பி போகும் பஸ்ஸில் பணம் கொடுத்து அனுப்பும் படியும், அவர் அந்த பஸ் ஆபீசில் உட்கார்ந்துக் கொண்டிருப்பதையும் கூறி தொலைபேசியின் எண்ணையும் கொடுத்தேன். அவர்கள் அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதாக சொன்னுர்கள்.

இப்படி தவறுகள் ஏற்படுவதற்கு என்ன காரணம் தெரி யுமா? பயணத்தில் அனுபவமில்லாதது ஒன்று. மற்ருென்று பயண திட்டம் சரியான முறையில் வகுக்காதது. மேலும் பயணத்தில் முட்டாள் தைரியத்தைக் கடைப் பிடிப்பது.

நான் எழுதும் இச்செய்திகளை வாசிக்கும் அன்பர்கள், இப்படி எல்லாம் பார்த்தால் கடைசியில் பயணமே செய்ய முடியாது "என்று கூறுவார்கள்" ஆனுல் உண்மையில் பய ணத்தில் நல்ல திட்டங்கள் இல்லாவிட்டால் பயணமே செய்ய முடியாது தான். மேலும் பயணத்தில் நம்மிடம் இருக்கும் பயண செலவுக்காக வைத்திருக்கும் பணம் ஒரு வருக்கும் தெரிய கூடாது. எந்த நேரத்திலும் பணத்தை வெளியில் எடுக்கக் கூடாது. பணத்தை சுமார் நான்கு, ஐந்து இடங்களில் பங்கிட்டு வைப்பது நலம். ஒரே பெட்டியிலோ பயண பையிலோ வைக்கக் கூடாது. உதாரணமாய் சில ஆண்டுகளுக்கு முன் குஜராத்திலுள்ள சிக்கிலி என்னுமிடத் திலிருந்து பம்பாயைப் பார்க்க ஒரு ஆசிரியர் வந்தார். அவ ருடன் சில மாணவர்களும் வந்தார்கள். அதில் மூன்று மாணவர்களும் ஆசிரியரும் ஏதோ ஒரு ஸ்டுடியோவுக்குப் போனுர்களாம். வழியில் டாக்ஸி டிரைவர் "டாக்ஸி அங்கே வராது" என்று கூறியதும் உடனே பணம் வைத்திருக்கும் பையை திறந்தாராம், அதில் ரூபாய் 2,500 இருந்ததை கண்ட டிரைவர் "கொஞ்சம் தூரம் போனுல் சில்லறை

கிடைக்கும்'' என்று கூறினாராம். அப்படியே ஆசிரியர் ஒப்புக்
கொண்டதும் டாக்சி டிரைவரும் காரை ஓட்டி கொண்டு
யாரும் நடமாடாத இடத்துக்குச் சென்று கடைசியில் கத்தி
யால் குத்தினனும். அந்த மூன்று மாணவரில் ஒருவன் சற்று
புத்திசாலியாக இருக்கவே, அவன் ஓட்டமாக ஓடி வந்து ஒரு
பஸ்ஸை பிடித்து ஏதோ ஒரு போலீஸ் ஸ்டேஷனில் புகார்
செய்ததின் பேரில் போலீசார் அந்த இடத்திற்குப் போன
போது டாக்ஸி மட்டும் அங்கேயே நின்றிருந்ததாகவும்,
டிரைவரையும், ஆசிரியரையும், இரண்டு மாணவர்களையும்
காணோம். அதைப் பற்றி போலீசார் புலன் விசாரணை
செய்து வருவதாகப் பம்பாயில் கூறப்பட்டது. இந்த
நிலைக்கு காரணம் ஆசிரியரின் யோசனை இல்லாத செயல்
என்பது நன்ருக விளங்குகிறது அல்லவா? அவரிடமிருக்கும்
பணத்தை மற்றவர்கள் தெரிந்துக் கொண்டது ஒரு பெரிய
குற்றமல்லவா? மேலும், பஸ் பயணத்தில் ஒரு ஊருக்கு
செல்ல வேண்டும் என்ருல் அந்த ஊரிலிருந்து மறுபடியும்
திரும்பி வரவோ அல்லது நாம் போகும் ஊரிலிருந்து அடுத்த
ஊருக்குச் செல்லவோ பஸ் தொடர்ந்து கிடைக்குமா?
என்றும் முதலில் நாம் தெரிந்து கொண்டு பயணம் செய்வது
நலம். மேலும் பஸ் பயணத்தை எல்லாம் காலையில்
வைத்துக் கொள்வது நலம். நமக்கு தெரிந்த அனுபவமுள்ள
ஊராக இருந்தால் அந்த ஊர்களுக்கு மட்டும் மாலை ஐந்து,
ஆறு, ஏழுமணி அளவுக்கு பிரயாணம் செய்யலாம். புதிய
ஊர்களுக்கு போவதாக இருந்தால் கட்டாயம் காலையில் பய
ணத்தை வைத்துக் கொள்வதும், போய் சேர்வது, மிகவும்
நல்லது.

காரணம் நாம் தேடிச் சென்ற நபர் அந்த ஊரில் இல்லா
விட்டால் நாம் உடனே திரும்பி வந்து விடலாம். இல்லா
விட்டால் போன இடத்தில் ஒரு நாளோ அல்லது இரவே
தங்க வேண்டிய நிலை ஏற்படும். பயணத்தில் சாதாரண
விஷயமாக இருக்குமொன்று கடைசியில் பெரிய சண்டை
யிலும் மன வருத்தத்திலும் வந்து முடியும்.

# பயணத்தில் ஆசிரியர்கள் நிலை!

பஸ் பயணத்தில் வாந்தி எடுப்பவர்கள் முதலிலேயே சொல்லி விட வேண்டும். மேலும் வாந்தி எடுக்க வேண்டும் என்று இருந்தால் முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பஸ் பயணத்தில் பிள்ளைகள் வாந்தி வருகிறது என்று தாயிடம் சொன்னால்கூட அந்தக் குழந்தைகளை "அதெல்லாம் ஒன்றும் வராது. பேசாமல் உட்கார்", என்று சொல்லும் தாய்மார்களை நாம் பார்த்திருக்கிறோம். கடைசியில் அந்தக் குழந்தை என்ன செய்யும் தெரியுமா? தாயின் புடவையிலோ, எதிரில் இருப்பவர்களின் மேலோ வாந்தி எடுத்து விடுவதைப் பார்த்திருக்கிறோம். இவைகள் எல்லாம் பஸ் பயணத்தில் சிறிய விஷயமாக இருந்தாலும் கடைசியில் பெரிய மனக் கஷ்டமான பேச்சுகள் பயணிகளிடம் வளர்வதை நாம் கண் கூடாக பார்த்திருக்கிறோம். மேலும் ஆண் கைக் குழந்தை யாக இருந்தால் தாய் மடியில் வைத்துக் கொண்டிருக்கும் பொழுது பையன் வயிற்றின் மேல் துணி போட்டு மூடி விட வேண்டும். இல்லாவிட்டால் ஆண் குழந்தை தாயின் மடியி லிருந்து சிறு நீர் கழிக்கும்போது எதிரில் உட்கார்ந்திருப் பவர்களின் மேல் சிறு நீரை அடித்து விடுவான். அதனால் எதிரில் உட்கார்ந்திருப்பவர்களுக்கும் தாய்க்கும் பேச்சு கொஞ்சம் வளர ஆரம்பிக்கும். இந்தக் குழந்தை விஷயங்கள் பஸ்ஸில் தான் ஏற்படுவதாக நினைக்க வேண்டாம். இரயில் வண்டிகளிலும் எல்லா வகுப்புகளிலும் ஏற்படுவதைப் பார்த்திருக்கிறேன். சாதாரணமாய் படித்த வர்களிடம் தான் இந்த குற்றம் அதிகமாக ஏற்படுகிறது என்பதை என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். முன் யோசனையோடு தனிமையில் பயணம் செய்யும் பொழுதே, எவ்வளவோ சிக்கல்களும், ஆபத்துகளும், கவலைகளும்

உண்டாகின்றன. ஆனால் சிலர் முன் பின் யோசிக்காமல் "உல்லாச பயணம் போகிறோம்" என்று சுமார் ஐம்பது, அறுபது பேரை அழைத்துக் கொண்டு போகிறார்களே என்று நினைத்துப் பஸ்ஸில் உல்லாசப் பயணம் செய்யும் பயணிகளை சுமார் ஆறு, ஏழு ஆண்டுகளாக எங்கே, எந்த ஊரில் எந்த பயணப் பஸ்ஸைக் கண்டாலும் "எப்படி பயணம்" என்று விசாரிப்பது வழக்கம். அப்படி உல்லாச பயண பஸ் நின்று விட்டால் உடனே நானும் வண்டியை நிறுத்தி அந்த உல்லாச பயண பஸ்ஸுக்கு ஏதாவது உதவி வேண்டுமா? என்று கேட்பது வழக்கம்.

ஒரு சமயம் அப்படி ஓர் உல்லாச பயண பஸ் வழியில் நின்றிருந்தது. அந்த பஸ் நின்ற நேரம் மாலை சுமார் ஐந்து மணி இருக்கும். சூரியன் மறைந்து விட்டது. அந்த பஸ்ஸில் சுமார் ஐமபது ஆசிரியர்கள் இருந்தார்கள். அதில் ஆசிரி யர்களை விட ஆசிரியைகள் அதிகமாக இருந்தனர். அதற்கு ஓர் தலைவர் இருந்தார். அவரிடம் "என்ன சங்கதி"? என்று கேட்டேன். அதற்கு அவர் பஸ் "பிரேக் டவுன்" என்றும் இது இறக்கம்தான். ஆகையால் பஸ் கொஞ்சம் ரிப்பேர் ஆகிவிட்டால் உதகையிலிருந்து மைசூருக்கு ஒரே ஓட்டமாக ஓடி விடுவார் நம் டிரைவர் என்று கூறினார். இச் சொல்லைக் கேட்டதும் என் உடல் நடுங்கியது. ஏனென்றால் ஒரு உல்லாச பயணத்தை நடத்தும் தலைவர் இப்படிக் கூறுகிறாரே! என்று நினைத்தேன். ஒவ்வொரு ஆசிரியரும் ரூபாய் நூறு கொடுத்திருக்கின்றனர். மொத்தம் ஒன்பது நாள் பிரயாணமாம். மேலும் அவரிடம் எந்தெந்த ஊர் போகிறோம்! எந்த ஊரில் இரவு தங்குவது! எந்த ஊரில் என்னென்ன இடங்களை காண வேண்டும். எத்தனை மணிக்கு எங்கே சாப்பாடு? என்ற பட்டியலே கிடையாது. ஏதோ பணம் வாங்கினோம். எங்கேயாவது அழைத்துச் சென்றால் போதும்" என்ற கண்மூடித்தனமாக அழைத்துச் செல்லுகிறார்.

"எல்லோரும் ஆசிரியர்கள் தான். இவர்களே இப்படி பயணம் செய்தால், இவர்களிடம் பிள்ளைகளை ஒப்படைத் தால் எவ்வளவு அழகாக உல்லாசப் பயணம் அழைத்து போவார்கள்'' என்று என் நண்பர் கேட்டார். ஒரு சம்பவத்தை எடுத்துக் கூறினேன்.

"நண்பரே! சில ஆண்டுகளுக்கு முன் சென்னை யிலிருக்கும் ஓர் உயர்நிலைப் பள்ளியில் பத்தாவது வகுப்பு மாணவர்களை மாமல்லபுரம் அழைத்துச் சென்றார்கள். அந்த மாணவர்களில் சுமார் இருபது பேரை ஒரே சமயத்தில் மாமல்லபுரத்திலிருந்து திரும்பி வரும் பொழுது ஒரே இடத்தில் கூட்டமாக சந்தித்தேன். நான் ''மாமல்லபுரத்தில் என்ன பார்த்தீர்கள்? என்று கேட்டேன். அவர்கள் சொன்ன பதில் இது. "எங்களைப் போய் பாறைகளை சுற்றிப் பார்த்து விட்டு வாங்கோ மாலை மூன்று மணிக்கு இங்கே வந்து நிற்க வேண்டும்'' என்று கூறி விட்டு ஆறு ஆசிரியர்கள் ஒரு மரத் தடியில் உட்கார்ந்து சீட்டு ஆடிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் கல் தச்சன் செய்த பொம்மைகளை பாறையில் பார்த் தோம். காஞ்சி அரசன் செய்ய சொன்னாராம். காஞ்சிபுரத்து அரசன் செய்த பின் சீதை வந்து படுத்து தூங்கின ஒரு பாறையையும் பார்த்தோம் என்று மாணவர்கள் சொன்னார்கள்'' என்று என் நண்பருக்கு எடுத்துக் கூறினேன். நண்பர் அப்படியே சிலையாக நின்று விட்டார் நிற்க.

மலைப்பிராந்தியத்தில் பஸ் விடுவதற்கே ஒரு தனித் திறமை வேண்டும். இப்படி பேசிக் கொண்டே பஸ் ரிப்பேர் செய்வதைப் பார்த்தேன். அன்று. ஆண்கள் மட்டும் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந் தனர். ஆசிரியைகள் பஸ்ஸிலேயே உட்கார்ந்து கொண்டிருந் தார்கள்.

நான் சென்ற காரின் டிரைவரும் அந்த பஸ் டிரைவருக்கு உதவி செய்துக் கொண்டிருந்தான். ஆகையால் வெளியில் நின்றுக் கொண்டிருந்தோம். சுற்றிலும் மலைகளை

கவனித்த நான் உல்லாசப் பயணிகளிடம் "டார்ச்சு யாராவது வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன். அதற்கு எல்லோரும் இல்லை என்று சொல்லி விட்டு எங்களுக்கு ஏன் டார்ச்சு என்றுசொன்னார்கள். இப்படி பேசிக் கொண்டே இருந்தோம். அன்று பஸ் நின்ற இடத்திற்கு இரண்டு பக்கங்களிலும் மலைகள் இருந்தன. இப்படிப்பட்ட இடங்களில் சாதாரணமாய் காரையோ பஸ்ஸையோ வண்டியையோ நிறுத்தக் கூடாது. காரணம் இந்த மலையிலிருந்து எதிர் மலைக்கு மாலை சூரியன் சென்று மறைந்ததும் விஷ பாம்புகள் இரைத்தேடிக் கொண்டு ஓடும் பழக்கமுடையவை.

திடீரென்று பஸ் உள்ளே இருந்த ஆசிரியைகள் கூக்குரல் கொடுத்துக் கொண்டு வெளியில் குதித்தார்கள். பஸ்ஸி லிருந்து குதிக்கும் வேகத்தில் ஒருவர் மேல் ஒருவர் விழுந்தும், மோதிக்கொண்டும் விழுந்ததால் சிலருக்கு இலேசான காயங்கள் ஏற்பட்டன. உடனே நாங்கள் பஸ்ஸின் அருகில் ஓடிப்போய் "என்ன விஷயம்!" என்று கேட்டோம். பஸ்ஸிக்குள் பாம்பு வந்து விட்டது என்று சொன்னார்கள். சரி! யார் பார்த்தது! என்று கேட்டால், வந்து விட்டதாம் என்று பதில் கிடைத்தது. சரி என்று நானே பஸ்ஸின் உள்ளே ஏறிப்பார்த்தேன். அப்படி ஒன்றும் இல்லை என்று சொல்லி வாய் மூடுவதற்குள் பஸ்ஸின் கீழே ஒரு சிறு குட்டிப் பாம்பு இருந்தது. அதை உடனே அடித்து விட்டேன். அப்போது என்னிடமும் டார்ச்சு இருந்திரா விட்டால் என்ன செய்து இருப்பார்களோ தெரியாது. ஆனால் "அப்படி டார்ச்சு வேண்டிய அவசியம் ஏற்பட்டால் ஒரு கொம்பில் பந்தம் கொளுத்திக் கொள்ளலாம்" என்று கூறினேன்.

அதற்கு மண்ணெண்ணெய்க்கு என்ன செய்வது என்று சிலர் கூறினார்கள். ஒரு கொம்பை எடுத்து யாராவது ஒருவருடைய கைக்குட்டையில் பாதியை கிழித்துக் கொம்பில் சுற்றி பஸ்ஸிலிருக்கும் பெட்ரோலில் நனைத்து பந்தமாக உபயோக படுத்த வேண்டியதுதான். "வெளிச்சம்

வேண்டும் என்கிற அவசியம் ஏற்படும் பொழுது இப்படி செய்திருக்கின்றேன்'' என்று கூறினேன். எப்படியோ ஒரு வகையாக பஸ்ஸும் ரிப்பேராயிற்று.

அதுவும் புறப்பட்டது. நாங்களும் புறப்பட்டோம். எங்கள் காருக்கு பின்னுலேயே தான் பஸ்ஸும் ஓடி வந்தது.

இரவு சுமார் ஒன்பது மணிக்கு மேல் மைசூர் வந்தடைந்தோம். அதற்கு மேல் முன் யோசனை இல்லாமல் மைசூரிலிருந்து பிருந்தாவனம் போய் பார்ப்பதற்காக பஸ்ஸை விட்டார்கள். நாங்கள் நேராக ஒரு ஓட்டலில் தங்கி விட்டோம். மறு நாள் காலையில் நாங்கள் காரில் சாமுண்டேஸ்வரிமலையில் போகும் பொழுது முன் இரவு பார்த்த பஸ் அங்கே நின்று கொண்டிருந்தது. பஸ்ஸைக் கண்டதும் ''என்ன செய்தி, நேற்று பிருந்தாவனம் பார்த்தீர்களா?'' என்று கேட்டேன். அதற்கு பஸ்ஸில் இருந்த ஒரு ஆசிரியை கூறிய செய்தி இது.

''இவர்கள் இரவு ஒன்பது மணிக்கு மேல் பிருந்தாவனம் சென்றுல் இவர்களுக்கென்று திறந்தாயிருக்கும். ஒருவித முன் ஏற்பாடோ அல்லது பயணம் அனுபவமோ இல்லாத ஒரு தலைவருடன் நாங்கள் வந்து விட்டோம். நேற்று வீணாக நேரம் தான் கழிந்தது. மேலும் பயணத்தில் எவ்வித திட்டங்களையும் வகுத்துக் கொள்ளாமல் அடுத்து எந்த ஊர் என்பது தலைவருக்கே தெரியாது. என்றுல் எவ்வளவு அழகாகப் பயணமிருக்கும் என்று யோசனை செய்து பாருங்கள். மேலும் ஒவ்வொரு ஊரிலும் இரவு ஒரு மணிக்கு மேல் தான் இந்த அறுபது பேரையும் எங்கே இன்றிரவு தங்க செய்வது'' என்று பஸ்ஸில் அந்த ஊரை சுற்றி சுற்றி வருகின்றனர். சுமார் இரண்டு மணிக்கு மேல் ஏதோ ஓர் பாழடைந்த இடத்திற்கு கொண்டு போய் தங்க வைக்கின்றனர். பெண்கள் இரவு காலத்தில் ஒதுக்குமிடம் போய் வந்து படுப்பதற்கு மூன்று மணி ஆனதும் மறுபடியும் நான்கு மணி அல்லது ஐந்து மணிக்கு எழுந்து பஸ்ஸில் உட்காரவேண்டும். காலையில் காப்பியோ, எட்டு அல்லது

ஒன்பது மணிக்கு தான் கிடைக்கும் எப்படியோ பணத்தை கொடுத்து விட்டோம் பயணமும் செய்ய வேண்டும் அல்லவா? திட்டத்தில் குறித்த ஊர்களில் மிக முக்கியமான இடங்கள் சிற்பங்கள் கோட்டைகள் ஏதாவது ஒன்று பார்க்க வேண்டும் அல்லவா?

"மைசூரில் சாமுண்டீஸ்வரி மலையையும், சேலத்தில் மேட்டூர் அணையையும், கோவையில் ஏதாவது ஒரு மில்லையும், கோவாவில் கிறிஸ்தவருடைய பாதிரியார் கோவிலையும் காணுமல் ஒரு உல்லாசப் பயணம் செய்தால் அது உல்லாச பயணமா? அல்லது......... பயணமா? எது என்று கூறுவது.

உல்லாச பயணத்தில் சிலர் சிலவற்றை நன்ருகக் கண்டு ரசிப்பார்கள்? சிலர் ரசிக்கத் தெரியாமல் எதைதை வாங்கித் தின்னலாம் என்று யோசிப்பார்கள். சிலர் பஸ்ஸில் நன்ருக தூங்கிக் கொண்டே வருவார்கள். இப்படிப் பலர் பலவிதம் அவரவர்களுடைய விருப்பம் போல் உரிமையைக் கொடுக்க வேண்டும். எதற்கும் உரிமை கொடுக்க வேண்டும்? ஆனுல் சொன்ன நேரத்திற்கு வந்து பஸ்ஸில் எல்லோருடனும் கலந்துக்கொள்வது மிகவும் அவசியம் தான். ஏனென்ருல் சிலரால் பலருக்குப் பயணம் குந்தகமாகக் கூடாது அல்லவா? அந்தக் கட்டுப் பாட்டுக்கு ஒப்புக் கொண்டாலும் உல்லாச பயணத்தலைவர் திட்டம் போட்டு நடத்த வேண்டும் அல்லவா? மேலும் எல்லோரையும் ஒரே விதமாகப் பயணத்தில் நடத்த வேண்டும் என்பது மிகவும் முக்கியம்" என்று அந்த அம்மையார் அவர்களுடைய பயண வேதனையை" எடுத்துக் கூறினுர்கள்.

மேலும் மலைப்பிராந்தியத்தில் போக்குவரத்து பஸ்கள் எல்லாம் இரவு சுமார் ஏழு அல்லது எட்டு மணிக்கு மேல் விடக் கூடாது என்ற ஒரு சட்டம் இருக்கிறது போல், உல்லாசப்பயண பஸ்களும் மலைப்பிராந்தியத்தில் இரவு ஏழு அல்லது எட்டு மணிக்கு மேல் பயணம் செய்யக் கூடாது. என்று அந்தந்த ஊர் கலெக்டர்கள் உத்தரவு பிறப்பிக்க வேண்டும். மேலும் இப்படி உல்லாசப் பயணப் பஸ்ஸை

ஒவ்வொரு ஊரிலும் போலீஸ் அதிகாரிகள் பிரேக் பரிசோதனைகள் செய்ய வேண்டுவது மிகவும் முக்கியம். ஏனென்றால் பணத்தாசையால் சில உல்லாசப் பயண பஸ்கள் பிரேக்குகள் சரியாக பிடிக்காமம் மலைகளிலிருந்து உல்லாசப் பயணிகளுடன் உருண்டு விழுந்தன என்று பல செய்திகளைப் பத்திரிகைகளில் வாசிக்கிறோம். இப்படி அபாயங்கள் ஏற்படுவதற்கு காரணம் என்ன? உல்லாசப் பயண பஸ்களை வழியில் போலீஸ் அதிகாரிகள் "பிரேக்" பரிசோதனை செய்வதில்லை. இனிமேல் வழியில் பரிசோதனை செய்து "செக் போஸ்ட்" உத்தரவு கொடுத்த பிறகு தான் மலைப்பிராந்தியத்திற்குள் உல்லாசப் பயண பஸ்கள் நுழைய வேண்டும் என்று ஒரு சட்டம் வருவது மிகவும் முக்கியம். மேலை நாடுகளில் இல்விதமான சட்டங்கள் இன்றும் இருக்கின்றன. மேலும் ஒவ்வொரு உல்லாசப் பயணத் தலைவரிடமும் "டூரிஸ்டு செண்டர்" அனுமதி சீட்டும் அவசியம். டூரிஸ்ட் தலைவரை கேள்விகள் கேட்ட பின் தான் உல்லாசப் பயண பஸ்ஸுக்கு அனுமதிச் சீட்டுக் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியம் என்ற சட்டமும் வர வேண்டும். இப்படி நிபந்தனைகள் இருந்தால் ஏதோ பயணம் ஏற்பாடுசெய்து விட்டு லாபம் அடிக்க மாட்டார்கள். சில பேர் வழிகள் பொது மக்களுக்கு ஆபத்தும் வராது அல்லவா? இப்படி பேசிக் கொண்டே வந்த நான் அந்த பயணத்தலைரிடம் "ஏன் இப்படி கஷ்டங்களுக்குள்ளாக்கினீர். ஆசிரியைகள் மிகவும் வருந்துகின்றனர்" என்று கூறினேன். அதற்கு அந்த தலைவர் கூறிய பதில் இது:

"ஏழைகளுக்கு பணக்காரர்களுடைய உறவும் இருக்கக் கூடாது. விரோதமும் இருக்கக் கூடாது. இரண்டுமே ஏழைகளுக்கு ஆபத்து. நம்மைவிட மேல் அதிகாரிகளிடமும் நமக்கு உறவும், விரோதமும் அவர்களிடம் பலக்கமும் இருப்பது கீழ்ச் சிப்பந்திகளுக்கு ஆபத்து தான். அது உலக இயல்பு, என்னவென்றால் உழுகின்றவனுக்கு சோறில்லை. நெய்கின்றவளுக்கு . துணி இல்லை. கட்டுகிறவனுக்கோ

குடிமை இல்லை. சோதிடனுக்குத் தன் குடும்பத்தினருடைய ஜாதகம் தெரியாதாம். அதை போல் பெண்களுக்குப் பெரிய பதவிகள் கிடைத்ததால் அவர்கள் செய்வது என்ன தென்று தெரியாது. தலை கணமாகவே பேசுவார்கள். ஏதோ நூற்றில் ஓரிருவர் தாம் பெண்களுக்கிருக்கும் பண்புடன் நடந்துக் கொள்கின்றனர். இது என் அனுபவத்தில் கண்ட பல உண்மைகளில் ஒன்று.

பெண்களை நம்பி ஒரு காரியம் செய்வதும் மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்குவதும் ஒன்றே. பெண்கள் சூழ்ந்த ஒரு பள்ளியில் பணியாற்றும் சிலருக்கு பெண் களுடைய சூழ்ச்சிகளும் தெரியும். பெண்கள் ஆண்களை ஒரு நொடியில் மயக்கி விடுவார்கள் என்பதில் பலருக்கு என்னை விட அனுபவமிருக்கலாம். ஆனால் பெண்களிடம் என் அனு பவம் வேறு. உங்கள் அனுபவம் வேறு. தன் கணவனைவிட மற்ற எல்லா ஆண்களும் மட்டமானவர்கள் என்று நினைக்கும் பல படித்த பெண்களின் மந்த புத்தியையும் நான் கண்டிருக் கிறேன். படித்த பெண்களைவிட படிக்காத பெண்களே உத் தமிகள். படித்த பெண்கள் என்பவர் யார்? படித்ததை துணையாகக் கொண்டு நல்ல முறையில் சீர் தூக்கி வாழ்ந்த சில பெண்களும் உண்டு. ஆனால் இன்று கர்வம் பிடித்த பெண்களும், மமதை பிடித்த பெண்களும், யானை மதம் கொண்ட சில பெண்களும் பல துறையில் பணியாற்று கின்றனர். அவர்களை நான் யார் என்று குறிப்பிட தயாராக இல்லை. அவர்களை நீங்களே தெரிந்துக் கொள்ளக்கூடும். பெண் பெண்ணைக் கொஞ்சம் தொலைவில் வைப்பதே நலம். பெண் என்றால் பேயும் மனமிரங்கும். அது அன்று; இன்றன்று. பெண்களுக்கு ஆண்டவனால் கொடுத்த தண்டனை இரண்டு உண்டு. அவை உலகம் அழியும் வரை மறையா. ஒன்று மாதம் மாதம் மூன்று, ஐந்து நாட்கள் சுகமில்லாமலிருப்பது மற்றொன்று பிரசவ வேதனை. இந்த இரண்டிலும் பெண் களுடைய முடிவை ஆண்டவன் வைத்துள்ளான்.

பெண் அரசியாக இருக்கலாம். ஆண் கூலிக்காரனாக இருந்தாலும் அவளுக்கு இவன் தயவு கட்டாயம் வேண்டும்

இவன் ஆண் மகன் தான். பெண்களுக்குப் பின்புத்தி இருப்பது இயற்கை அது எல்லோரிடத்திலும் உண்டு. சில பெண்களுக்கு உயர்ந்த பதவி கிடைத்தால் காலைத் தூக்கி அடும்பின் மேல் வைப்பார்களாம். ஆனால் அந்த அடுப்பி னுள்ளே இருக்கும் தீ ஒரு நாளைக்கு அப்படிப்பட்ட பெண் களைச் சாம்பலாக்குவதும் உண்மை. ஏதோ நீங்கள் அனுபவ முள்ளவர். பல இடங்களுக்கு பயணமும் செய்திருக்கிறீர். என்னை கேட்கிறீர். நான் எனக்கு தெரிந்ததைக் கூறுகிறேன். பெண்களுக்குப் பிடிவாதமும், கர்வமும், தைரியமும் இருக்க வேண்டும் என்பது அவசியம் தான். ஆனால் அளவுக்குமேல் அது இருந்தால் அவர்களுக்கே ஆபத்தாக வந்து முடியும். ஆனால் ஆண்கள் உள்ளம் அப்படிப்பட்டதன்று. அது ஓர் அள வுக்குச் சமாளிக்கும் தன்மை உடையது. ஏதோ எனக்கு தெரிந்ததைச் சொல்லுகிறேன். இந்த உல்லாசப் பய ணத்தில் எங்களுடன் வந்த பெண்களுக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுத்தால் கடைசியில் நம் தலை யிலேயே மிளகாய் அரைப்பார்கள். ஆகையால் தான் அதிக வசதிகள் செய்யாமல் இப்படி அழைத்துக் கொண்டு வரு கிறேன். நாங்கள் கொடுக்கும் வசதிகள் கூட அவரவர் களின் வீட்டில் இல்லை. ஆனால் இங்கே வந்தால்தான் என் னவோ அரண்மனையில் வாழ்ந்தவர்கள் போலும் இங்கே வசதிகள் குறைவு போலும் நடந்து கொண்டு பேசுவார்கள் என்று சொல்வதற்குள் பஸ்ஸும் புறப்பட்டது. அவரும் விடைபெற்றார்.

''நண்பரே! பார்த்தீர்களா? தலைவனுடைய பேச்சை பெண்களில் நல்லவர்களும் உண்டு. ஆண்களில் நல்லவர்கள் இருக்கின்றனர். எனவே நாம் நல்லவர்களாகப் பழகினால் மற்றவர்களும் நல்லவர்களாக இருப்பார்கள். பிறர் உன்னை எப்படி நடத்த வேண்டும் என்று நினைக்கிறாயோ, அப்படியே பிறரை நீ நடத்து. நடந்து காட்டு, என்று காந்தி கூறினார். இந்த உல்லாசப் பயணத்தை பணம் வாங்கிக் கொண்டு நடத்தும் பேர்வழிகள் மேல் குற்றமில்லை. நம்முடைய பணத்தை அவர்களிடம் கொடுத்து விட்டு நாம் ஏன் இப்

படிக் கஷ்டப்பட வேண்டும், மேலும் ஆசிரியர்களாக இருப்பவர்கள் நான்கு பேர்கள் ஒன்ருகச் சேர்ந்தால்'கண்ஸெஷன்' டிக்கெட்டுகள் மூலம் வேண்டியபடி அவரவர்கள் விரும்பும் அளவுக்கு பயணம் செய்யலாமே. அப்படி இருக்க ஏன் இந்த ஆசிரியர்கள் இப்படிப்பட்ட உல்லாசப் பயணத்தில் சிக்கிக் கொண்டார்கள்: மேலும் நான்கு ஐந்து ஆசிரியர்கள் ஒரே பள்ளியில் இருக்க வேண்டியதும் இல்லை. ஒவ்வோர் ஆசிரியரும், வெவ்வேறு பள்ளியில் பணிபுரிந்தாலும் பாதகமில்லை ஆனல் ஆசிரியர்களாகவோ அல்லது ஆசிரியைகளாகவோ இருக்கலாம். அரசாங்கத்தாரால் அங்கிகரிக்கப்பட்ட ஆசிரியர்களாக இருக்க வேண்டும். அது தான் சட்டம்' என்று நண்பரிடம் கூறினேன். இவைகளையெல்லாம் கேட்ட நண்பர் மிகவும் சந்தோஷ மடைந்தார். சிலர் உல்லாசப் பயணம் ஏற்பாடுகள் செய்கிருர்கள். மிகவும் நன்ருகவும், குறிப்பிட்ட உல்லாசப் பயணத்தை என்றும் மறக்காமலும் இருக்கும்படி நல்ல திட்டங்களுடன் நடத்துகிருர்கள். ஆனல் எல்லாராலும் எல்லாவற்றையும் செய்ய முடியாது அல்லவா இப்படிப் பேசிக் கொண்டே காரை ஓட்டிக் கொண்டு வரும் பொழுது மற்ருெரு உல்லாசப் பயண பஸ் ஒன்று வழியில் நின்றுக் கொண்டிருந்ததையும் பார்த்துக் கொண்டே வந்தோம்.

# இரயில் பயணத்தில் "சோர்-சோர்"

பஸ் பயணத்தைக் காட்டிலும் இரயில் பயணத்தில் பலவித அபாயங்கள் இருக்கின்றன; வசதியும் இருக்கின்றன. இரவு இரண்டு மூன்று மணிக்கு இரயில் வண்டி மாற வேண்டியதாக இருந்தால் சிலர் அந்த நேரத்தில் நன்ருகத் தூங்கிவிடுவார்கள். அப்படித் தூங்கிவிட்டு மற்ருெரு ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்வதைக் கண்டிருக்கிருேம். ஆனல் அவர்

கள் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? இரண்டு மணிக்கு குறிப்பிட்ட ஸ்டேஷனில் இறங்க வேண்டியதாக இருந்தால், அந்த நேரத்திற்கு அரைமணி அல்லது கால்மணி முன்னதாக எழுந்து தம்முடைய சாமான்களைத் தயார் செய்துக் கொள்ள வேண்டும். அல்லது தம்முடைய சாமான்கள் சரியாக இருக்கின்றனவா? என்று எண்ணிப் பார்த்துக் கொள்ளவேண்டும். மேலும் அப்படித் தூங்காமல் எழுந் திருக்கவேண்டும் அல்லவா? அதற்காக ''அலாரம்'' அடிக்கும் கடிகாரம் வைத்துக் கொள்ளுவது நலம். அந்த நேரத்திற்கு அலாரம் வைத்துக் கொண்டு, வண்டி நின்றதும் இறங்கிவிட வேண்டும். கடிகாரத்தைத் திருடர்கள் தூக்காமல் பார்ப் பது நம் கடமை யன்றோ! மேலும் ஒவ்வொரு பெரிய சந்திப்பு களிலும், நம்முடைய பொருகளைக் கொஞ்சம் கஷ்டத்தைப் பார்க்காமல் அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொள்ளவேண் டும். இப்படி நான் எண்ணி எண்ணிப் பார்ப்பதை என் பக்கத்திலிருக்கும் ஒருவர் பார்த்துப் பார்த்து சிரித்தார். அவர் சிரிக்கிறாரே என்று நான் எண்ணுவதை நிறுத்தி விடவில்லை.

உடனே அவர் ''ஐயோ! என்னுடைய ''பெட்''டைக் காணோமே, வண்டியின் மத்தியிலிருக்கும்''பொது அறையில்'' தான் வைத்திருந்தேன்'' என்று இப்படியும் அப்படியும் ஓடினார். கடைசியில் ஜோலார் பேட்டையில் யாரோ இறங்கும் பொழுது இவருடைய ''பெட்''டை எடுத்துக் கொண்டு இறங்கி விட்டார்களாம்.

எடுத்துக் கொண்டு இறங்கியவர்களின் மேல் ஒன்றும் குற்றமில்லை. ஏனென்றால் கூலிக்காரர்கள் எல்லாவற்றையும் எடுப்பதுண்டு. மற்றொன்று நம்முடைய ''பெட்—கவர்'' போல் கடையில் பல ''பெட்கவர்'' இருக்கின்றன. நம் முடைய பெட்டி போல் பலருடைய பெட்டிகளும் இருக் கின்றன. ஆகையால் தவறுதல் நேர்வதுண்டு. கடைசியில் அன்று அலைந்தவருக்கு ''பெட்'' கிடைக்கவில்லை. அவர் பெட்டில் என்னென்ன வைத்திருந்தார் தெரியுமா?

நான்கு காஷ்மீர் கம்பிளிகள், ஆறுபட்டுப் புடவைகள், எவர் சில்வர் தட்டுகள் நான்கு, பட்டு வேட்டிகள் ஆறு, இப்படிப் பல பொருள்கள் வைத்திருந்தாராம். சுமார் ரூபாய் இரண்டாயிரம் மதிப்பு இருக்கலாம் என்று கூறினர். கடைசியில் காட்பாடியில் இறங்கி, திருப்பதிக்குப் போனவர்கள் தான் எடுத்துப் போய் இருக்க வேண்டும் என்று திருப்பதிக்குப் போனர். அவர் குடும்பத்தைச் சென்னைக்குப் போகும் படியும் "அவர்களை ஓர் நல்ல இடத்தில் சேர்த்து பார்த்துக் கொள்ளும்படியும்" என்னிடம் கூறினர். கடைசியில் மறு நாள் வெறுங் கையுடன் வந்தார். 'பெட்' கிடைக்கவில்லை என்று சொல்லிவிட்டு, "நீங்கள் உங்கள் பொருள்களை எண்ணும்போது உங்களைப் பைத்தியம்" என்று நினைத்தேன். ஆனல் உண்மையில் நான் தான் கர்வமுள்ள பைத்தியக் காரன் என்று வருந்துகிறேன். பொருள்கள் போனதோடு மட்டுமன்று, அதற்கு வட்டியாக அலைச்சலும், இருபது ரூபாய் செலவும் ஆனது தான் மிச்சம்" என்று வருத்தத் கூறினர்.

இப்படி கூறியதைக் கேட்டதும், எனக்கும் மனவேதனையாக இருந்தது. மேலும் இரயில் வண்டியிலிருந்து இறங்கும் போது நாம் குடும்பத்துடன் இருந்தால் முதலில் யாரையாவது ஒருவரை இறங்கி நாம் உட்கார்ந்த பலகணிக்கு எதிரில் வந்து நிற்கும் படி சொல்ல வேண்டும். பிறகு உள்ளிருந்து நம்முடைய சாமான்களை எடுத்துக் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்தால் கூடுமான வரையில் பிறர் நம் சாமான்களை மாற்றித் தூக்கிக் கொண்டு போகாமல் பார்த்துக் கொள்ள முடியும். இல்லாவிட்டால் ஒருவர் சாமான்களை மற்றவர்கள் மாற்றிக் கொண்டு போவது மிகவும் சகஜமாக இருக்கும். ஒரு பழக்கம். ஒரு சாமானை தூக்கிக் கொண்டு போகும் பொழுது அதற்காக நாம் ஓடினல், மற்ற சாமான்களைப் பார்ப்பது யார்? இவ்வளவுக்கும் நாம் பயணம் செய்யும் பொழுது சாமான்களைக்கூடுமான வரையில் முக்கியமான சாமான்களாகவும் குறைவாகவும் எடுத்துக் கொள்ள வேண்டும். பயணத்தை எப்பொழுதும் லேசானதாகச்

செய்து கொள்ள வேண்டும். எங்கே? எப்படி? எதில் பயணம் செய்தாலும் அவசரமும் அதே நேரத்தில் நிதானமும் வேண்டும்.

சில ஆண்டுகளுக்கு முன் நான் பெங்களூரிலிந்து பூனுவுக்கு மூன்ருவது வகுப்பில் பயணம் செய்தேன். எனக்குக் கிடைத்தது, ஒரு சிறு பெட்டி தான். அதாவது நான்கு சீட்டுகள். அதன் பக்கத்தில் கார்டு பெட்டியோ ஏதோ ஒன்று இருந்தது. அன்று என்னுடன் பெங்களூரிலிருந்து இரண்டு இஞ்ஜீனியர்களும் ஒரு மார்வாடிக் குடும்பத்தினரும் இருந்தார்கள். அந்த மார்வாடிக் குடும்பத்தில் திருமணம் செய்து கொண்டு புதிய தம்பதிகள், மாமஞர், மாமியார் முதலியவர்கள் இருந்தனர். எங்களுடைய இரயில் வண்டி காலே ஒன்பது மணிக்குப் பெங்களூரை விட்டுக் கிளம்பியது.

பகல் முழுவதும் வண்டியில் பழகியதால் நாங்கள் எல்லோரும் ஒரே குடும்பம் போல் பேசிக் கொண்டே போனேம். இரவு சாப்பாடு முடிந்ததும், அந்த இரண்டு என்ஜினீயர்களும் மேலே போய் படுத்துக் கொண்டார்கள். மார்வாடியும் நானும் கீழ் சீட்டுகளில் படுத்துக் கொண்டோம். மார்வாடிப் பெரியம்மா குறுக்கே வழியில் படுத்துக் கொண்டாள். அந்த வழி அந்த அம்மாவுக்கு சரியாக இருந்தது. காரணம் அந்த அம்மா சற்று பருமனுக இருந்தார். அடுத்து இருக்கும் சீட்டில் புதிய மணப்பெண்ணும், சாமான்கள் வைக்கும் இடத்தில் மனமகனும் படுத்துக் கொண்டனர்.

மார்வாடிக் குடும்பமாக இருந்தாலும், திருமணம் முடித்துக் கொண்டு தம்பதிகளுடன் வருவதால் மணப்பெண் கொஞ்சம் நகைகளும், ஒரு நெக்லஸீம் அணிந்துக் கொண்டிருந்தாள். இவைகளே யெல்லாம் கவனித்த நான், பெரிய மார்வாடியிடம், ''முதலில் நான் தூங்கிவிடுகிறேன். ஏனென்ருல் உங்கள் மகளும், மருமகனும், மற்றவர்களும் நன்ருகத் தூங்கட்டும். நீங்கள் இரவு ஒரு மணி வரையில் தூங்கமாலிருந்தால் போதும் ஒரு மணிக்குப் பின் நான் விழித்துக் கொண்டிருக்கிறேன். ஏனென்ருல் இரவு ஒரு

மணியிலிருந்து காலை சுமார் ஐந்து மணி வரையில் தான் இரயிலில் திருடர் பயம் என்று சொல்லுகின்றனர். ஆகை யால் நான் விழித்துக் கொண்டிருக்கிறேன்.'' என்று நன்மை யைக் கருதி கூறினேன். ஆனால் மாா்வாடி என்ன கூறினார் தெரியுமா? ''அதெல்லாம் என்னிடம் ஒன்றும் செல்லா துங்கோ! நல்ல சூட்டு பூட்டு போட்டுக் கொண்டிருக்கும் நபரைத் தான் இந்தக் காலத்தில் நம்பக் கூடாதுங்கோ! நீங்கள் ஒன்றும் கவலைப்படாதீங்கோ நீங்கள் வேண்டியதாக இருந்தால் இப்பொழுதே தூங்கவும். உங்கள் சாமான்களை யும் சேர்த்து நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று அலட்சியமாக கூறினார்.

''சரி, நமக்கென்ன! எப்படியோ போகட்டும். வீண் வம்பு உங்களுக்கு ஏன்? தயவு செய்து எங்கள் சாமான்களைப் பார்த்துக் கொள்ளவும். ஏனென்றால் நாங்கள் திருநெல் வேலியிலிருந்து—'பம்பாய் போவதால் உடம்பு அலுப்பாக இருக்கிறது.'' என்று அந்த இரண்டு இஞ்ஜினீயர்களும் சொன்னார்கள். மார்வாடி பெரியவர் அப்படிக் கூறியதும் உடனே என் பொருள்களை எப்படிப் பத்திரம் செய்ய வேண்டுமோ, அப்படியெல்லாம் செய்து விட்டு பயணங்கள் உட்காரும் இடத்தில் படுத்துக் கொண்டேன். சுமார் இரவு இரண்டு மணியிருக்கும். எல்லோரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். இரயில் வண்டி ஓடிக்கொண்டே இருந்தது. யாரோ கதவைத் திறக்கும் ஓசை கேட்டது. உடனே நான் ''யார் அது?'' என்று குரல் கொடுத்துக் கொண்டே எழுந்தேன். ஆனால் யாரையும் காணோம். உடனே நான் படுத்தேன். நன்றாகத் தூங்கி விட்டேன். ''சோர்—சோர்'' என்று தூங்கும் மணப்பெண் கூக்குரல் கொடுத்தாள். உடனே நான் துள்ளி யெழுந்து வழியின் குறுக்கே நின்று கொண்டேன். வளர்ந்த ஓர் ஆள் பைஜாமாவுடன் என்னைத் தள்ளிக் கொண்டு போக முயற்சி செய்தான். நான் ''ஸ்டாப்'' என்று போட்ட ஒரே கூச்சலில் அவன் நின்று விட்டான். மருமகன், மார்வாடி எல்லோரும் என்னுடைய துணைக்கு வருவார்கள், என்று நினைத்தேன்.

எல்லோரும் நாங்கள் இருவரும் எதிர் எதிராக நிற்கும் காட்சியைக் கண்டு குப்புறப் படுத்துக் கொண்டார்கள். மேலே படுத்திருக்கும் இரண்டு எஞ்சினீயர்களும் என்னைக் கண்டு கண்ணடித்தார்கள். உடனே நான் திருடனைப் போக விட்டேன். அவனும் வண்டி ஓடும் பொழுதே பக்கத்துப் பெட்டியில் ஏறிக் கொண்டான்.

திருடன் சென்ற பின் மேலே இருக்கும் இஞ்ஜினீயர் ஒருவர் என்னைப் பார்த்து "திடீரென்று நீங்கள் பாய்ந்து குறுக்கே நின்றீர்களே. அவன் உங்களைக் கத்தியால் குத்தியிருந்தால் என்ன செய்வீர்கள். திருடர்களுக்கெல்லாம் கூட்டாளிகள் இருப்பார்கள். இந்த மார்வாடியை நம்பி நீங்கள் நின்றது மிகவும் தப்பு. உங்களுக்கு, அவர்களும் உதவி செய்ய வரமாட்டார்கள். நாங்களும் வரமாட்டோம். அவர்கள் இருவரும் குப்புறப் படுத்துக் கொண்டதைக் கண்ட பின் தான் நான் உங்களுக்குக் கண்ணடித்தேன். இல்லாவிட்டால் உங்களுக்கு ஆபத்து உண்டாகியிருக்கும்' என்று கூறினார்கள்.

"நீங்கள் கண்ணடித்ததைக் கண்டதும் தான் நானும் ஏதோ ரகசியம் மறைந்திருக்கிறது. என்று நினைத்து உடனே அந்த திருடனைப் போகச் செய்தேன்" என்று கூறினேன்.

இது இரவு இரண்டு மணிக்கு நடந்தது. சுமார் ஐந்து நிமிஷங்களுக்குள் இந்த நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. பிறகு மார்வாடியும், மருமகனும் இருவரும் விடியும் வரையில் உட்கார்ந்துக் கொண்டிருந்தார்கள். வந்த திருடன் மணமகள் கழுத்திலிருக்கும் "நெக்லஸை" கை வைத்து இழுத்தானும். ஆனல் அந்த "நெக்லஸை" மணப்பெண் என்ன செய்திருக்கிருள் தெரியுமா? "நெக்லஸை" உள் பக்கமாகப் 'பின்'னைக் கொண்டு சட்டையுடன் சேர்த்துக் குத்தியிருக்கிருள். ஆகையால் அதை திருடன் இழுக்கும் பொழுது முகவாயில் திருடனுடைய கைப்பட்டதும் உடனே விழுத்துக் கொண்டு "**சோர்—சோர்**" (திருடன்-திருடன்) என்று கத்திஞளாம்.

இது நடந்தப் பின் நானும், மேலே இருக்கும் நண்பர்களும் நிம்மதியாகத் தூங்கினோம். இரயில் பயணத்தில் நான் மலஜலம் கழிக்கச் சென்றால், உடனே என்னுடைய கைக்குட்டையில் கைக்கடிகாரம், சாவி, கையிலிருக்கும் மோதிரம், பேனாக்கள் முதலியவற்றையும் வைத்து மூட்டையாகக் கட்டி என் மனைவியிடமோ அல்லது என் பயணப் பையிலோ வைத்து விட்டுப் போவதைக் கண்ட ஒருவர் "என்ன அவ்வளவு பயமா? என்று கேட்டுச் சிரித்தார். நான், "எதற்கும் ஜாக்கிரதையாக இருப்பது நலம். இல்லாவிட்டால் பின்னால் வருந்துவதில் என்ன பயனிருக்கிறது?" என்று கூறினேன். இப்படிப் பேசிக் கொண்டே இவர், சிறுநீர் கழிப்பதற்காகச் சென்றார். போனவர், சிறிது நேரத்திற்கெல்லாம், "சார்-சார்" என்ன செய்வதுங்கோ. உடனே சொல்லுங்கள். என்னுடைய கைக்கடிகாரம் மலஜலம் போகும் துவாரத்தில் விழுந்து விட்டது. என்ன செய்வது என்று தெரியவில்லைங்கோ! சீக்கிரம் சொன்னால் நலம்" என்று பதைப்பதைத்தார்.

நான். "கடிகாரத்தின் விலை ரூ250/-க்கு மேல் இருந்தால் சங்கிலியைப் பிடித்து இழுக்கவும், இல்லாவிட்டால் பேசாமல் உட்காரவும்? என்று கூறினேன். அதன் விலை ரூபாய் இருநூறு தான். என்ன செய்வது? என்று கூறி மிகவும் கவலைப்பட்டார். அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றதும், ஸ்டேஷன் மாஸ்டரிடம் விஷயத்தைக் கூறினார் அவர், "வேண்டியதாக இருந்தால், நீங்கள் போய் தேடுங்கள். உங்கள் டிக்கெட்டில் நான் கையெழுத்திட்டுக் கொடுக்கிறேன் நீங்கள் நாளைக்குக் அதே டிக்கெட்டில் பயணம் செய்யலாம்" என்று கூறினார்.

"நீங்கள் போனால் அது கிடைக்கும் என்பதுநிச்சயமில்லை. மேலும் மனைவியையும், குழந்தைகளையும் தனிமையில் விட்டுச் செல்வது நல்லதில்லை" என்றேன். அவர் கடைசியில் போனால் போகிறது என்று வண்டியில் வந்து ஏறிக் கொண்டார். பிறகு, "உங்களை என்றும் மறக்காமல் இருக்க

இச்சம்பவம் என் மனதில் நிலைத்து விட்டது'' என்று கூறினார்.

ஒரு சமயம் நான் மூன்றாவது வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்திருந்தேன். அந்தப் பெட்டியில் இருந்தவர்கள் எல்லோரும் ஒவ்வொருவராக இறங்கி விட்டார்கள். கடைசியில் நானும், ஒரு பருவ மங்கையும் தான் அந்த பெட்டியில் இருந்தோம். சிறிது தூரம் வண்டி ஓடியதும் அந்த மங்கை என்னை பார்த்து "இது என்ன ஸ்டேஷன்?'' என்று கேட்டாள். வண்டியும் நகர்ந்து விட்டது. நான் சற்று பலகணியின் மூலம் எட்டிப் பார்த்து, துண்டாகவும், சர்வ சாதாரணமாயும், "அருகில் வாடி'' என்று கூறிவிட்டுப் பேசாமல் இருந்தேன். ஆனால் அந்த மங்கையின் முகம் ஒரு விதமாக மாறிவிட்டது. எனக்கு அதன் கருத்து ஒன்றும் தெரியவில்லை. நான் பேசாமல் இருந்து விட்டேன். பிறகு நானே, "நீங்கள் எந்த ஸ்டேஷனில் இறங்க வேண்டும்'' என்று கேட்டேன். அதற்கு அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

மறுபடியும் நானே ஒரு வேளை "அருகில் வாடி'' ஸ்டேஷனில் இறங்க வேண்டுமோ என்று நினைத்துத்தான் கேட்டேன். மன்னிக்கவும்'' என்று கூறினேன். உடனே அந்த மங்கை "என்ன! "அருகில் வாடி'' என்று ஒரு ஸ்டேஷன் பெயரா?'' என்று கேட்டாள். நான் "ஆம்! உங்கள் முகம் வாடியதைக் கண்டு தான் நானே இந்தப் பிரச்சனையைக் கிளப்பினேன். "அருகில் வாடி'' என்று பெயர் வைத்திருக்கின்றனர் பாருங்கள்'' என்று கூறி விளக்கியப் பின் தான் அந்த மங்கையின் முகம் மலர்ந்தது. இப்படிப் பயணம் செய்யும்போது பல சிக்கல்கள் உண்டாவதுண்டு.

ஒரு சமயம் ரெயில் வண்டியில் கூட்டம் அதிகமாக இருந்தது. நெருக்கடி மிக்க அந்தச் சமயத்தில் ஒருவர் வாய் நிறைய புகையிலையைக் குதப்பிக் கொண்டிருந்தார். இப்படி இருப்பதைக் கண்ட ஒருவர் எதிர் சீட்டிலிருந்து, "தயவு

செய்து எச்சிலை வெளியில் துப்புங்கள், இல்லாவிட்டால் திடீரென்று இருமல் வந்தால் அவ்வளவு எச்சிலையும் எதிரில் இருப்பவர்களின் மேல் உமிழ்ந்து விடுவீர்கள்'' என்று சொன்னார். அதற்கு அவர், வாயில் எச்சிலை வைத்துக் கொண்டே, ''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்'' என்று முகத்தில் அடிப்பது போல சற்றுச் சுருக்கென்று கூறினார்.

''சரி அது உங்களுக்கு தெரியும் அல்லவா? எனக்குத் தெரிந்ததைக் கூறினேன். எச்சில் மேலே படும் பொழுது எனக்குத் தெரிந்ததை செய்கிறேன்'' என்று கூறி இங்கே இருப்பவர்கள் எல்லோரும் நான் கூறியதற்குச் சாட்சி'' என்று கூறி முடித்தார். சிறிது நேரத்திற்கெல்லாம், அவர் ''லொக்'' என்று இரும்மி விட்டார். எதிரில் இருந்தவர்கள் மேல் எல்லாம் எச்சில் விழுந்தது. உடனே எதிரில் உட்கார்ந்து முதலில் எச்சரிக்கை கொடுத்தவர் என்ன செய்தார் தெரியுமா? புகையிலை போட்டவர் கன்னத்தில் ''பளார்'' என்று கொடுத்தார். ''இது தான் எனக்கு தெரிந்தது'' என்று கூறிப் பேசாமல் இருந்தார். பிறகு எல்லோரும் புகையிலை போட்டவரின் மடத்தனத்தைப் பற்றிப் பேசினார்கள். இப்படி இரயில் பயணத்தையும், பஸ்ஸில் பயணம் செய்வதையும் பற்றி எழுத வேண்டு மென்றால் முடிவில்லாமல் எழுதிக் கொண்டே போகலாம். பல விஷயங்களை விட்டு விட்டுப், பயணத்திற்கு வேண்டிய முக்கியமான விஷயத்தை மட்டும் இங்கே எழுதினேன். இரயில் வண்டிகளில் முதல் இரண்டு வகுப்புகளில் ஏற்படும் ஆபத்துக்களோ தனிப்பட்ட விஷயம்.

இனி பிரயாணம் செய்யும்பொழுது ஓட்டலிலும், மற்ற இடங்களிலும், தங்குமிடங்களிலும் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? உறவினர் வீட்டிலும், நண்பர்களின் வீட்டிலும் ஏற்படும் மனவருத்தங்கள் யாவை? என்பன பற்றிக் கவனிப்போம்.

# பயணச் சிக்கல்

புதிய ஊர்களுக்குச் சென்றால், நண்பர்களின் இல்லத்திலோ, உறவினர்களின் இல்லத்திலோ தங்குவதற்கு நாம் முன் கூட்டியே ஏற்பாடு செய்திருக்கிறோம். என்று வைத்துக் கொள்ளுவோம். அப்படிச் செய்த ஏற்பாட்டின்படி நாம் அவர்களின் இல்லத்திற்குப் போகும் பொழுது நண்பர் வேலையின் நிமித்தம் வெளியூருக்குப் போயிருந்தால், அவர் ஊருக்கு போகும் பொழுது, சொல்லி விட்டுப் போயிருந்தாலும், கணவனோ அல்லது ஆண்கள் இல்லாத சமயங்களில் வெளியூரில் நண்பர்கள் இல்லத்தில் படுப்பது கூடாது. சாமான்களை நண்பர் இல்லத்தில் வைத்து விட்டுப் பக்கத்து வீட்டிலோ எதிர் வீட்டிலோ இரவில் மட்டும் தங்குவது நலம். பகலில் நண்பர் இல்லத்தில் பழகுவது நலம். இதில் ஏற்படும் சிக்கலை என் பயணத்தில் அனுபவமாகக் கண்டேன்.

மேலும் ஓர் ஊருக்குச் சென்றால் அந்த ஊரில் யார் இல்லத்தில் தங்குகிறீர்களோ அவர்களின் விலாசமும், நம்முடைய ஊரின் நிரந்தரமான விலாசமும் எழுதி வைத்துக் கொள்வது நலம். இவைகள் எல்லாம் அவசியமா வென்று கேட்பவர்கள் பெரிய நகரங்களில் இருக்கும் ஆஸ்பத்திரிகளில் போய் விசாரித்தல் நலம். அனாதைப் பிணங்கள் எத்தனை இருக்கின்றனவென்று தெரியும். மேலும், நம்முடைய விலாசமும் கொஞ்சம் நமக்கு மனப்பாடமாகத் தெரிந்திருப்பது நலம். இப்படியெல்லாம் செய்யாததால் "காணவில்லை" என்ற தலைப்பில் இரண்டு வயது குழந்தை முதல் நூறு வயது பெரியவர்கள் வரை உள்ள காணாமல் போன செய்திகள் தற்காலத்தில் தினந்தோறும் பத்திரிகைகளில் வெளிவருதைக் காணலாம். இப்படி பத்திரிகைகளில்

"காணவில்லை—காணவில்லை" என்று வருவதற்குக் காரணம் என்ன? இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. அக் காரணங்களில் வழி தவறி விடுவதும், விலாசம் தெரியாமல் தவிப்பதும் ஒன்று. மேலும் வெளியூர்களிலிருக்கும் நண்பர் களைத் தேடிக்கொண்டு பகலில் போவதுதான் நலம். இரவில் அவர்களின் இல்லத்திற்குப் போவது அவ்வளவு சிறந்ததன்று. ஏனென்றால் இரவு காலங்களில் வீட்டின் அடையாளம் தெரியாது. மேலும் இரவில் மலஜலம் கழிக்கும் குழிகளில் காலைவிட்டு குளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டால் அவர்களுக்கு சிரமம் கொடுத்தது போலாகும் அல்லவா? எனவே ஓர் ஊருக்குப் போவதாக இருந்தால் பகல் மூன்று, நான்கு மணிக்குள் போய் சேர்வது நலம்.

சில ஆண்டுகளுக்கு முன் எம். ஏ. பி. டி. படித்த ஒரு உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் ஒரு மலைப் பிராந்தியத்தில் வேலை செய்துக் கொண்டிருந்தார். மலைப்பகுதியில் சில ஆண்டுகள் வேலை செய்தபின், அவருக்கு ஏதோ ஒரு நகரத்திற்கு மாற்றலாகி விட்டது. ஆனால் சில மாதங்களுக்குப் பின் சில முக்கியமான வேலையின் நிமித்தம் அவர் முன்பு வேலை செய்த மலைப் பிராந்தியத்திற்கு வந்தார். அவர் வேலையை அந்த மலைப்பகுதியில் முடித்துக் கொண்டு பஸ் ஸ்டாண்டுக்கு வருவதற்குள், கடைசி பஸ்ஸும் போய்விட்டது. அது மே மாதமாக இருந்ததால் அன்று அவர் வேலை செய்த பழைய பள்ளி ஆசிரியர்களும் விடுமுறைக்காக அவரவர்களின் ஊர்களுக்குப் போயிருந்தார்கள். எனவே சுமார் நான்கு ஐந்து மைல் தூரத்திலிருக்கும் ஒரு பழைய மாணவன் வீடு மட்டும் தெரிந்திருந்ததால், அந்தப் பையனை தேடிக்கொண்டு ஒரு தேயிலை தோட்டத்திற்குள் சென்று அன்றிரவைக் கழிக்கலாமென்று நினைத்து போனார். ஆனால் போகும் பொழுது இருள் சூழ்ந்துக் கொண்டது. கையில் டார்ச்சு விளக்குமில்லை. தேயிலைத் தோட்டமாக இருந்ததால் சற்று உள்ளே நடந்து போக வேண்டும். அந்த சமயத்தில் அந்த மலைப் பிராந்தியத்தில் எங்குப் பார்த்தாலும் திருடர்கள் பேச்சு கொஞ்சம் பரவி இருந்ததால், அந்தத் தேயிலைத்

தோட்டத்தில் வாழும் தோட்டத் தொழிலாளிகள் யாவரும் இரவு எட்டு மணிக்கெல்லாம் கதவுகளை அடைத்துக் கொள்ளும் பழக்கமிருந்தது. இந்த நிலையில், இந்த ஆசிரியர் அந்தப் பையனைத் தேடிக்கொண்டு சுமார் இரவு ஒன்பது மணிக்கு அந்தத் தேயிலைத் தோட்டத்திற்குப் போனதும், அந்தத் தேயிலைத் தோட்டத்தில் இருக்கும் நாய்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து குரைக்க ஆரம்பித்தன.

ஏக காலத்தில் எல்லா நாய்களும் குறைக்கவே அந்தத் தோட்டத் தொழிலாளிகள் சந்தேகப்பட்டு தத்தம் வீட்டிலிருக்கும் நாய்களையும் அவிழ்த்துவிட்டு விட்டார்கள். ஏக காலத்தில் நாய்களின் கூக்குரல் எழும்புவதைக் கண்ட ஆசிரியர் இருளில் ஒட ஆரம்பித்தார். ஓடும் ஆளைக் கண்டதும் நாய்கள் துரத்த ஆரம்பித்தன. ஆசிரியரின் கையில் டார்ச்சு இல்லாதது ஒன்று. மற்றொன்று புதிய இடம். இந்த நிலையில் அவர் ஓடியது முதல் குற்றம். இரண்டாவது நாய்கள் துரத்தும் பொழுது ஓடக்கூடாது. கூட்டமாக நாய்கள் ஆசிரியரைத் தாக்கியதால் பல கடிகள் உண்டாகி ஓடிப் போய் இருட்டில் பாறையில் மோதி மயக்கமாக விழுந்து விட்டார்.

திடீரென்று நாய்கள் குரைக்கும் ஓசை நின்றதும் வந்த திருடன் ஓடி விட்டான் என்று தோட்டத் தொழிலாளிகள் நினைத்துக் கொண்டார்கள். மறுநாள் காலையில் தோட்டத்திற்குப் போகும் தோட்டத் தொழிலாளி யாரோ பார்த்து நாய்களால் முகமெல்லாம் கடி வாங்கி யாரோ ஒரு புதிய ஆள் இறந்து கிடக்கிறார் என்றும், அடையாளம் தெரியவில்லை என்றும் கூறினான். சட்டபடி அதிகாரிகள் என்னென்ன செய்ய வேண்டுமோ அவ்வளவு செய்து பார்த்து விட்டார்கள். கடைசியில் பத்திரிகைகளிலும் பிரசுரம் செய்தார்கள். இவ்வளவுக்கும் காரணம் என்ன? அவருடைய வீட்டு விலாசம் அவரிடம் இல்லாதது தான். கடைசியில் சுமார் ஒரு மாதம் கழித்து, உறவினர்கள் தேடிக் கொண்டு பல இடங்களில் அலைந்தார்கள். அலைந்தும்

எங்கே, எப்படி மறைந்தார் என்பதே தெரியவில்லையாம் எம்.ஏ., பி.டி. படித்துப் பட்டம் பெற்றவர். உலக அனுபவ மில்லாததால் உண்டான ஒரு விபத்தின் முடிவு பெரிய சிக்கலில் போய் முடிந்தது.

சிலர் ஓட்டலில் தங்கினுல் சரியான விலாசம் கொடுக்க வேண்டும். மேலும் உடனே இந்த ஓட்டலில் தங்கியிருக் கிறேன். என்பதை, ஓட்டலில் தங்கும் நபர் வீட்டுக்கோ, உறவினர்களின் வீட்டுக்கோ தெரியப்படுத்த வேண்டும். ஏனென்ருல் நம்முடைய உணவில் கூட நஞ்சு இருக்கலாம். நஞ்சு உணவு என்று இன்று பத்திரிகையில் ஆயிரக்கணக்கான செய்திகளை வாசிக்கிருேம். இக்காரணங்களை வாசிக்கும் நண்பர்கள் "இவைகளை யெல்லாம் பார்த்தால் நாம் பயணமே செய்யாமல் அறையில் தான் உட்கார வேண்டும்" என்று சிலரும், "எல்லாம் ஆண்டவன் செயல் என்று பயணம் செய்ய வேண்டும்" என்று சிலரும் கூறலாம். ஆம்! எல்லாம் ஆண்டவன் செயல் தான். ஆனுல் எது ஆண்டவன் செயல் என்பதைத் தெரிந்துக் கொள்வது தான் புத்திசாலித்தனம் மேலும், ஓட்டலில் தங்குவதாக இருந்தால்; நம்முடைய சொந்தப் பூட்டையே தான் கதவு களுக்குப் போடுவது நலம். மேலும் ஓட்டலில் நாம் தங்கும் அறையிலிருந்து நாம் போகும் பொழுது அறைக்கு பின் பக்கமாக இருக்கும் பலகணியையும் கதவையும் அடைத்து விட்டுத்தான் வெளியில் போக வேண்டும். இரவில் தூங்க வேண்டும். மேலும் இரவுக் காலங்களில் சிறு நீர் கழிக்க வெளியில் சென்ருல் நம்முடைய அறையில் தான் வந்து நுழைகிருமா? என்று கவனிப்பது மிகவும் முக்கியம்! தூக்கக் கண்ணில் தம் அறை தவிரவேறு அறையில் நுழைந்து விடுகிற வர்களையும் என் பயணத்தில் கண்டிருக்கிறேன். மேலும் அப்படி நுழைந்ததால் மிகவும் பெரிய சிக்கல்கள் உண்டாகி யிருப்பதைக் கண்டு நியாயம் செய்துவைத்து யிருக்கிறேன்.

ஓர் ஓட்டலில் ஒரு சிக்கல் நடந்து விட்டதாம். இரவுக் காலங்களில் மலஜலம் கழிக்கப் போகும் ஆண்களும்

பெண்களும் துணையுடன் போவது நல்லது. ஓட்டலில் மட்டும் இந்தச் சிக்கல் ஏற்படுவதில்லை. இன்று அரசாங்கம் கட்டும் காலனிகளில் நம்முடைய உறவினர்கள் வந்தால், வீட்டின் உள்ளே காற்று இல்லை என்றும், இடமில்லை என்றும் வெளித் திண்ணையிலோ அல்லது வராண்டாவிலோ படுப்பதுண்டு. இரவிக் காலங்களில் மலஜலம் கழிக்கத் தூரத்தில் சென்றவர்கள், மறுபடியும் தங்கள் ''பிளாக்''கைக் கண்டுபிடிப்பதற்கு பதிலாக மற்ருெரு ''பிளாக்கில்'' போய்த் தேடுவார்கள். அதே சமயத்தில் இந்த பிளாக்கில் யாராவது ஜன்னல் பக்கமாகப் பார்த்து விட்டு என்ன யோசிப்பார்கள் தெரியுமா?

''என்ன! இரவு இரண்டு மணிக்குத் தலையில் முண்டாவுடன் (இவர் பனிக்காகத் தலையில் கட்டிக் கொண்டிருப்பார்) இப்படியும் அப்படியும் அலைந்துக் கொண்டிருக்கிருர் என்று அந்த பிளாக்கில் இருக்கும் ஒருவர் பார்ப்பார். மற்ருெரு ஜன்னலிலிருந்து மற்ருெருவர் பார்ப்பார். கடைசியில் இருவரும் சேர்ந்து வெளியில் வந்த பின் ''திருடன் – திருடன்'' என்று கூக்குரல் கொடுத்ததும் எல்லோரும் வெளியில் வந்து பிடித்து விசாரித்தால், ''அட பாவமே? ''பிளாக் தெரியாமல் அலைந்துக் கொண் டிருக்கிருர்'' என்று கூறுவார்கள்.

இச்சம்பவம் ஒன்று சமீபத்தில் ஒரு நகரத்தில் நடந்ததாம். ஆனுல் சிலர் பகலிலேயே தம் நண்பர் பிளாக்குத் தெரியாமல் அலைவதை நாம் கண்கூடாகப் பார்த்திருக்கிருேம் அல்லவா? இவைகளை யெல்லாம் என் நண்பர்களிடம் கூறினுல் ''இவ்வளவு பயந்த சுபாவமுள்ளவர், எப்படி பயணம் செய்கிருர்?'' என்று பலர் கேட்பதுண்டு. இது பயந்தவன் என்பதைக் குறிக்கவில்லை. பயணத்தில் முன் ஜாக்கிதையாக இருக்க வேண்டும் அல்லவா?

மேலும் யார் வீட்டிலாவது நான் இரவில் தங்கும் போது என் படுக்கையைச் சுற்றிலும் டார்ச்சின் உதவியால் பார்த்து விட்டுப் படுப்பதுண்டு. ஆண்டவன் கருணை

இல்லாமல் ஒன்றும் நடக்காது. ஆனால் ஆண்டவன் நமக்கு புத்தியும் யோசனையும், கொடுத்து இருப்பதால் அவற்றை நாம் உபயோகிக்க வேண்டும் அல்லவா? மேலும் நம்முடைய பையில் வெளியூரில் யாருடைய வீட்டில் தங்கி யிருக்கிறோமோ, அவர்களின் வீட்டு விலாசத்தை எழுதி வைத்துக் கொள்வதுண்டு. ஏனென்றால் அந்த ஊரைச் சுற்றிப் பார்த்தப் பின் அவ்வூரில் நாம் தங்கியிருக்கும் வீட்டுக்கு மறுபடியும் வந்து சேர வேண்டும் அல்லவா?

மேலும் ஒருவர் வீட்டிலோ அல்லது ஓட்டலிலோ தங்கி யிருந்தால் அந்த இடத்தை விட்டு நாம் நம்முடைய ஊருக்குப் புறப்படும்பொழுது நம்முடைய சாமான்களை யெல்லாம் எடுத்துக் கொண்டோமாவென்று நன்றாக யோசித்து முன் நாளே எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். அல்லது ஒரு சீட்டிலாவது எழுதி வைத்துக் கொள்ள வேண்டும். அப்படி நம்முடைய பொருள்களைப் பையிலோ, பெட்டியிலோ எடுத்து வைக்கும் பொழுது, நாம் தங்கியிருக்கும் வீட்டின் நபரைப் பக்கத்தில் வைத்துக் கொள்வது நலம். காரணம் வீண் சந்தேகங்கள் நீங்கும். ஆனால் இது நாம் தங்கி இருந்த வீட்டு நபருக்குத் தெரியக் கூடாது.

உல்லாசப் பயணம் செய்யும் கூட்டத்தினர் யாரை யாவது கெட்டிக்கார நபரைத் தலைவராக வைத்துக் கொள்வது நலம். அவர் எங்கே? எப்படி? என்னென்ன செய்ய வேண்டும்? என்பதைக் குறித்துக் கொள்ள வேண்டும். காரணம் அப்பொழுது தான் பயணம் நன்றாகவும், ஒழுங்காகவும் நடைப்பெறும். அந்தக் கூட்டத்தின் தலைவராகப் பணியாற்றும் நபர் மற்ற அனைவ ருடைய விலாசத்தையும் வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும். மேலும் எல்லோர் மீதும் தலைவனாக இருப்பவர் தம் கண் பார்வையை வைத்திருப்பது நலம்.

# பயணத்தில் கொலை

மேலும், பயணத்தில் எப்பொழுதும் திரும்பி வருவதற்கு வேண்டிய பணத்தை அடிக்கடி எண்ணிப் பார்ப்பதும், அல்லது இருக்கிறதா? வென்று கவனிப்பதும் மிகவும் அவசியம். இவைகளைக் கண்டு அனுபவமில்லாதவர் சிரிப் பார்கள். இதோ அத்தகைய சம்பவம் ஒன்று கூறுகிறேன்.

''சில ஆண்டுகளுக்கு முன் ஒருவர் தம் குடும்பத்துடன் எங்களைத் தேடிக் கொண்டு ''டாடா'' நகரிலிருந்து சென்னைக்கு வந்தார். அவர் வேண்டிய பணத்திற்குச் சற்று அதிகமாகவே கொண்டு வந்திருந்தார். அவருடைய மகன்கள் இருவரும் பி. ஏ. படித்து நல்ல உத்தியோகத்தில் இருக் கிறார்கள். ஒரே மகள். அவளும் பி. ஏ. பி. டி. ஒரு பள்ளியில் ஆசிரியராக இருக்கிறாள். இப்படி ஐந்து பேர் சேர்ந்த அந்த ''டாடா'' நகர் குடும்பம் சென்னையில் எங்கள் வீட்டில் தங்கி இருந்தது.

காலையில் சுமார் ஆறு மணிக்கு வெளியில் சென்றால், இரவு சுமார் ஒன்பது மணிக்குத் தான் வருவார்கள். இப்படி சென்னையையும், மற்ற இடங்களை சுற்றிப் பார்த்துக் கையிலிருக்கும் பணம் எல்லாம் செலவாகும் வரையில் கண்டதையெல்லாம் கணக்கு போடாமல் பெட்டியில் வாங்கி வைத்தார்கள். கடைசியில் ஊருக்குப் போகும் நாள் நெருங்கியது. அப்பொழுது மனைவியிடம் கல்கத்தா வுக்கு டிக்கட்டு வாங்கி விடுகிறேன் என்று கூறினார். மனைவி சரி என்று கூறினார். நாளைக் காலையில் பணம் கொடுத்தால் போதும் என்று அவர் கூறினார்.

''என்ன பணம்?'' என்று கேட்டார் மனைவி. ''அது தான் டிக்கட்டுக்கு என்று ஒதுக்கி வைத்துவிட்டு மீதியை

என்னிடம் கொடுக்கச் சொன்னேன். நீ என்ன செய்தாய்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

''உங்களிடம் அந்தப் பையை அப்படியே கொடுத்து விட்டேன். நீங்களே ஒதுக்கி வைத்து விட்டுச் செலவு செய்கிறீர் என்று தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினார். கடைசியில் திரும்பிப் போவதற்கு இரயிலுக்குப் பணம் இல்லை. என்ன செய்வதென்று தெரியாமல் மிகவும் கவலைப்பட்டார்கள். கடைசியில் அவர்களிடமிருக்கும் நகையை விற்பனை செய்து இரயில் டிக்கட்டு வாங்கினார்கள். பிறகு நாங்கள், பண நெருக்கடியின் காரணத்தால் 'டாடா' நகர் வரையில் வழிக்கு வேண்டிய ஆகார வசதிகள் செய்துக் கொடுத்தோம். ஏன் இந்த வீண் கஷ்டம், வீண் கவலை. அப்பொழுதைக்கப் பொழுது அடிக்கடி பணத்தை எண்ணிப் பார்த்திருந்தால் நகையை விற்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்காது அல்லவா?

ஒரு சமயம் சேலத்தில் என்னுடைய நண்பர் வீட்டில் நடைபெற்ற திருமணத்திற்குச் சென்றோம் அதே திருமணத்திற்குப் பம்பாயிலிருந்து சில உறவினர்களும் வந்திருந்தார்கள். தூரத்தில் இருந்து வந்ததால் பயண களைப்பின் காரணத்தால் ஒன்றுக்கு ஒன்று பேசிவிட்டுப் படுத்து விட்டார்கள். நாங்களும் அவர்களின் பக்கத்திலேயே ஒன்றாக பெரிய ஹாலில் படுத்துக் கொண்டோம். மறுநாள் காலையில் பம்பாயிலிருந்து வந்தவர்களில் ஒருத்தி ''என்னுடைய நெக்லஸைக் காணோம்'' என்று கூறித் தேட ஆரம்பித்தாள். என்ன செய்வதென்றே தெரியாமல் எல்லோரும் விழித்தார்கள். ஆனால் பம்பாயிலிருந்து வந்தவர்கள் சும்மா—சும்மா எங்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். எங்களுக்கும் இது வேதனையாக இருந்தது. ''விழுங்கவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவித்தோம்.'' அவர்களுக்கு எங்கள் மேல் சந்தேகமா? என்றும் சொல்ல முடியவில்லை: இல்லை என்றும் சொல்ல முடியவில்லை. இக்காரணங்களால் நாங்கள் திருமண இல்லத்திலேயே ஒரு நாள் தங்க வேண்டிய நிலைமை உண்டானது.

அன்று மாலே, பம்பாயிலிருந்து வந்த அந்த அம்மாள் குளிப்பதற்காகச் சென்ருள். அந்த அம்மாளின் பாவாடை லேசில் "நெக்லஸ்" சிக்கிக் கொண்டிருந்ததைக் கண்டு மிகவும் குதூகலத்துடன் அதைத் தூக்கிக் கொண்டு, ஓடி வந்து எல்லோரிடமும் காட்டினுள். எல்லோரும் சந்தோஷப் பட்டார்கள். ஆனல் நாங்கள் மட்டும் ஒன்றும் சொல்ல வில்லே. நாங்கள் உடனே புறப்பட்டோம். மூட்டை எல்லாம் கட்டும்படி என் குடும்பத்தாரிடம் கூறினேன். அவளும் "இப்பொழுது பஸ் வசதியோ, இரயில் வண்டி வசதியோ கிடையாதே" என்று வாயை திறந்தாள். "புறப்படு" என்று ஒரே வார்த்தைத் தான் கூறினேன். ஏதோ இரகசியம் அந்த "புறப்படு" என்ற வார்த்தையில் இருக்கிறது என்று அவள் தெரிந்துக் கொண்டாள். அவளும், மகளும் உடனே புறப்பட்டார்கள். "நாங்கள் போய் வருகிருேம்" என்று கூறிஞேம்.

எல்லோரும் இப்பொழுது இரயிலிலோ பஸ் வசதியோ இல்லேயே எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

"இல்லே. ஏதாவது ஒரு இரயில் வண்டி வரும். அதில் போகிருேம்" என்று கூறினேன். அன்று மாலே சுமார் ஏழு மணிக்கு இரயில் நிலேயத்தை அடைந்தோம் இரயில் நிலேய அதிகாரிடம் "ஐயா! இரயில் வண்டி தொடர்போ பஸ் தொடர்போ இல்லே எங்களுக்குத் தெரியும் ஆனல் திருமண வீட்டில் நடந்த சம்பவம் இது! ஆகையால் எங்களுக்கு ஸ்டேஷனில் தங்கும் அறையில் வசதி செய்து கொடுக்கவும்" என்று கூறினேன். அவர் நல்லவர் நல்ல வசதி கிடைத்தது. மின்சார வசதியுடன் நன்ருகப் படுத்துத் தூங்கிஞேம்.

மறு நாள் காலேயில் ஏழு மணிக்கு திருமண வீட்டி லிருந்து பலர் வந்தார்கள். அவர்களும் எங்களுடன் கலந்துக் கொண்டார்கள். "நீங்கள் ஒன்றும் சொல்லாமலேயே புறப்பட்டு விட்டதால் பம்பாயிலிருந்து வந்தவர்கள் மன வேதனே அடைந்தார்கள்" என்று அவர்கள் கூறினுர்கள். "ஏன்?" என்று கேட்டேன். "அது தான் தெரியவில்லே"

என்ருர்கள். ஆனல் நான் மட்டும் பேசாமல் இல்லை, "அது தான் ஆண்டவன் அவர்களுக்குக் கொடுத்த தண்டனை!" என்று கூறி பேசாமலிருந்தேன்.

மேலும் பயணத்தில் பிறருடைய பொருட்களை தொடாமல் இருப்பது நலம். சிறு வயது முதலே பிறருடைய பொருள்களைத் தொடாமல் இருப்பது நலம். அப்படி ஒருவன் வளர்ந்தால் அது அவனை பிற்காலத்தில் உயர்ந்தவனுக்கும் என்பதில் எவ்விதமான சந்தேகமில்லை. ஏனென்ருல் சில பொருள்களை எப்படித் தூக்குவது என்பது பொருளின் சொந்தக்காரர்களுக்குத் தான் தெரியும். உதாரணமாக தற்காலத்தில் விற்பனையாகும் பைகளை வைத்துக் கொள்ளலாம்.

மேலும், பயணத்தில் சாதாரணமாய் நாம் பொது இடங்களில் குளிக்கும்படி ஏற்படும். அப்படிக் குளிக்கும்படி ஏற்பட்டால் குளித்த பின், குழாயின் மேல் சுவரில் எல்லாம் பார்த்து விட்டு வரவேண்டும். ஏனென்ருல் சோப்பையோ, டவலையோ, துணிகளையோ, கழுத்துச் சங்கலியையோ மறந்து விடுவது சாதாரணமாய் ஏற்படும் பழக்கம் இவை களைத் தவிர்க்க வேண்டுமானல், நாம் என்ன செய்ய வேண் டும் என்ருல், குளித்த அறையிலிருந்து வெளிவரும் பொழுது, குளிக்கும் அறையை நன்ருக சுற்றி பார்ப்பது நலம் இப்படிப் பார்க்காமல் வந்ததால் வேளாங்கண்ணியில் பொதுவாகக் குளிக்கும் அறையில் புதிய டர்க்கிடவலை என் மனைவியும், பல பொருள்களைப் பலரும் வைத்து விட்டுக் கஷ்டப்பட்ட தைக் கண்டேன் இத்தகைய ஒரு சம்பவம் என் நண்பருக்கும் நேர்ந்தது. நானும், என் நண்பரும் என்னுடைய மாமாவின் இல்லத்திற்குச் சென்ருேம். இரண்டாம் நாள் நானும், என்னுடைய மாமாவின் குடும்பத்தினரும் ஒரு திருமணத் திற்குச் சென்ருேம். என்னுடைய நண்பர் மட்டும் வரவில்லை. நாங்கள் திருமணத்திற்குச்சென்று மாலை சுமார் ஐந்து மணிக்கு வந்தோம். வந்தவர்கள், கதவைத் தட்டித் தட்டிப்பார்த்தோம், என் நண்பரின் குரல் வரவில்லை. நேரம்

ஆக ஆகக் கூட்டம் கூடி விட்டது. கூட்டத்தில் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு அழகான கதையைச் சொல்ல ஆரம்பித் தார்கள். துணிந்து வீட்டின் மேல் ஏறவும் கூட்டத்திலிருப் பவர்கள் கஷ்டப்படுகிறார்கள். சிலர் பயப்படுகிறார்கள். கடைசியில் நானும் மற்றொரு வரும் வீட்டின் மேல் ஏறினோம் வீட்டில் நண்பரையே காணோம். மெதுவாக உள்ளே குதித்துத் தெருக் கதவை திறந்து விட்டேன். பிறகு சில ஆண்கள் மட்டும் சிப்பாய்களைப் போல் வந்தார்கள். நண் பரையே காணோம். கடைசியில் குளிக்கும் அறையின் கதவு மூடி இருந்தது. தள்ளித்தள்ளிப் பார்த்தோம் முடியவில்லை. அந்த வீட்டின் நபர் வந்து, "கதவு கட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கும். ஓர் உதை கொடுங்கள்" என்று கூறினார்.

அதற்குள் நான் உதைத்தேன். நண்பர் உள்ளே வாடிய முகத்துடன் துணி துவைக்கும் கல்லின் மேல் உட்கார்ந்துக் கொண்டிருந்தார் என்ன சங்கதி என்று கேட்டேன்.

"காலையில் நீங்கள் எல்லோரும் போனதும் நான் குளிக்கச் சென்றேன் குளிக்கும் அறையை மூடிக் கொண்டு குளித்தேன். கதவு தண்ணீரில் ஊறி இருந்ததால் கெட்டி யாக மூடிக் கொண்டது. உள்ளே கதவைப் பிடித்து இழுக்க ஒரு விதமான பிடியுமில்லை. என்றால் ஆனமட்டும்; "இழுத்து இழுத்துப்" பார்த்தேன். முடியவில்லை. என் முயற்சிகள் எல்லாம் வீணாகப் போயின. நேரம் ஆக ஆகப் பசி மிகுந்தது. என்றால் ஒன்றும் செய்ய முடியவில்லை. காலையில் நீங்கள் போகும் பொழுது கொடுத்த காப்பியுடன் தான் இருக்கிறேன்." என்று கூறி மயக்கமாகச் சாய்ந்தார். உடனே அவருக்குச் செய்ய வேண்டிய தெல்லாம் செய்தோம்.

பயணம் என்பதே ஒரு தனிக் கலைதான். ஏதோ தெய்வாதீனமாக மாலையிலேயே திரும்பி வந்து விட்டோம். இரண்டு நாட்கள் கழித்து வந்திருந்தால் நண்பரின் கதி என்ன ஆகியிருக்கும். வீண் ஆபத்துக்களும், கவலையும்தான் ஏற்பட்டிருக்கும் அல்லவா? சாதாரணமாய் எங்குச்சென்

ரூலும் சொல்லி விட்டுப் போவது நலம். அல்லது பொது விடு தியாக இருந்தால், குளிக்கும் அறையின்மேல் துணி போடுவது நலம்.

ஏதாவது ஒரு ஊருக்குச் சென்ருல் கூடுமான வரையில் நல்ல குடும்பமுள்ள வீட்டில் தங்குவது நலம். சாப்பாடு வசதிகளை ஓட்டலில் வைத்துக் கொண்டாலும்; படுப் பதற்கும், தங்குவதற்கும் நண்பரின் வீட்டில் வசதி ஏற் படுத்திக் கொள்வது நலம். அப்படி நண்பரின் இல்லத்தில் தங்குவதற்கு வசதி கிடைத்தாலும் நண்பர் (நைட்டு டூட்டி) இரவு வேலைக்குப் போவதாக இருந்தால், உடனே நாமும் அவருடன் வேலை செய்யுமிடத்திற்குப் போவதுதான் நல்லது. ஏனென்ருல் புதிய இடத்தில் இரவு காலங்களில் தனிமையில் படுப்பதோ—இருப்பதோ பயணக் கலைக்கு உகர்ந்தது அன்று. ஏனென்ருல், ஏதோ ஒரு பூச்சி கடிக்கலாம் அல்லது ஏதோ சில விபத்துக்கள் உண்டாகலாம். மேலும் என்னுடைய நண்பர் ஒரு விஷயம் எனக்கு கூறினுர்.

என் நண்பருக்கு, நண்பரிடமிருந்து ஒருவர் சென்று என் நண்பரின் இல்லத்தில் தங்கினுராம். அப்படித் தங்கிய பொழுது என் நண்பர் அன்றே ஒரு திருமணத்திற்காக இரண்டு நாட்களுக்கு வெளியூர் போக வேண்டியதாக இருந் ததால், முன் அறையில் மட்டும் வந்தவரைத் தங்கும்படி சொல்லி வீட்டைத் திறந்து விட்டு விட்டுப் போய் விட் டார்கள். நண்பர் முன் அறையில் மட்டும் தங்கினுர். இரண்டாம் நாள் இரவு ஒருவர் வந்து தான் என் நண் பரின் தம்பி என்று புதியவரிடம் கூறித் தானும் அங்கேதான் தங்கி இருப்பதென்றும், எல்லோரும் ஒன்ருகத்தான் சாப் பிடுவது வழக்கம் என்றும் கூறினுர்.

புதிய நண்பர், "எனக்கு இந்த அறையைத்தான் திறந்து விட்டார்கள் என்றும் மற்ற அறையின் சாவி தன்னிடமில்லை என்றும் கூறினுராம். ஆனல்; இப்படித்தான் அடிக்கடி அண்ணனும் அண்ணியும் வெளியூர் போவது வழக்கம். என் னிடம் ஒரு செட்டு சாவி இருப்பதால் அவர்கள் கவலை இல்

லாமல் போவார்கள்'' என்று கூறி எல்லா அறைகளையும் தன்னிடமிருக்கும் சாவியைக் கொண்டு திறந்து விட்டு விட்டார். பிறகு இருவரும் வெந்நீரில் குளித்தார்கள். அன்றிரவு புதிய நண்பர் நன்ருகத் தூங்கி விட்டார். இரண்டாவதாக வந்தவர் ஆபீஸ் வேலை இருக்கிறது என்று பக்கத்து ரூமில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். மறுநாள் காலையில் எல்லா அறைகளும் திறந்திருந்தன.

நண்பர் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுதே திருமணத்திற்குச் சென்றவர்கள் காலை சுமார் ஐந்து மணிக்கெல்லாம் வந்து விட்டார்கள். வந்தவர்கள் மிகவும் திடுக்கிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ''என்ன பூட்டியிருந்த அறைகள் எல்லாம் திறந்திருக்கின்றனவே?'' என்று கேட்டார்கள். வந்த புதிய நண்பர், ''உங்கள் தம்பி வந்தார். அவரும் உங்களிடம் தான் இருக்கிருராம். அவரிடம் இருக்கும் ஒரு செட்டு சாவியால் எல்லாவற்றையும் திறந்து விட்டார். அதோ அந்த ரூமில் படுத்துத் தூங்குகிருர்!'' என்று அவர்களை அழைத்துக் கொண்டு அடுத்த அறைக்குச் சென்ருர். அங்கே என்ன இருக்கிறது? எல்லாப் பொருள்களும் தாறுமாருக இருக்கக் கண்டார்கள். தம்பி என்ற உருவத்தையே காணேம். திருமண வீட்டிலிருந்து வந்தவர், ''ஐயா! எனக்குத் தம்பியே கிடையாது. உங்களை வேறு யாராவது ஏமாற்றி விட்டுப் போய்விட்டார்களா? அல்லது நீங்கள் தான் என்னை ஏமாற்றுகிறீர்களா? என்பது எனக்குத் தோன்றவில்லை'' என்று வெளியில் போனவர் சிறிது நேரத்திற்கெல்லாம் போலீஸ் படையுடன் வந்தார். போலீசார் வீட்டைச் சோதனைப் போட்டார்கள். கடைசியில் புதியதாக வந்த நண்பரின் பெட்டியையும் சோதனைப்போட்டனர் அந்த வீட்டின் ஒரு பொருளை எடுத்து, தம்பி என்று வந்த திருடன் இந்த நண்பரின் பையில் போட்டு விட்டுப் போய் விட்டான். அந்த பொருளை போலீசார் வெளியில் எடுத்ததும் வீட்டின் சொந்தக்காரர், ''இது உங்களுடையதா?'' என்றுக் கேட்டார். வந்த நண்பர் ''இது என்னுடையது அன்று. இது எப்படி வந்தது என்று தெரியாது. நான் கூறு

வதைக் கொஞ்சம் கேட்கவும். நான் ஒரு குற்றத்தையும் அறியாதவன். வந்தவன் உங்கள் தம்பி என்று கூறினன். ஆகையால் நான் ஏமாற்றமடைந்தேன். தம்பி என்று கூறியவன், இதனை எடுத்து என் பையில் போட்டிருக்க வேண்டும்'' என்று கூறினர்.

''சரி! போலீசுக்கு வாங்கோ, அங்கே பேசிக் கொள்ளலாம்!'' என்று அழைத்துச் சென்ற பொழுது, இந்த நண்பரையும், போலீசாரையும் பார்த்ததும் திடீரென்று ஓர் உருவம் மறைந்து ஓடியதைக் கண்டார். ஜீப்பில் இருந்த ஒரு போலீஸ் அதிகாரி உடனே அந்த ஜீப்பை அந்த சந்தின் பக்கமாக ஓட்டச் சொன்னர். ஜீப் சந்தின் பக்கம் வந்ததும் உடனே அந்த உருவம் வேகமாக ஓடியது. கடைசியில் போலீசார் ஓடிப்போய் பிடித்துக் கொண்டார்கள். ஜீப்பில் இருந்த நண்பர் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தார். இவர் ஜீப்பிலிருந்து ஓடியதையும் ஒரு உருவத்தையும் அவர் கவனிக்கவில்லை. ஓடிய உருவத்தைப் பிடித்துக் கொண்டு வந்து ஜீப்பில் ஏற்றும் பொழுது தான், ஜீப்பில் இருந்த நண்பர் தலையைத் தூக்கினர். தூக்கியதும், ''ஆ! இவர் தான் உங்கள் தம்பி என்று நேற்றிரவு வந்தவர்'' என்று தன் பக்கத்திலிருந்த வீட்டுச் சொந்தக்காரரிடம் கூறினர். உடனே போலீசாருக்கு விஷயம் விளங்கி விட்டது. ''இவன் ஒரு கேடி. திருடன் என்று கூறித், திருமணத்திற்குச் சென்ற நண்பரின் பொருள்களை எல்லாம் மீட்டுக் கொடுத்தார்கள்.

புதிய நண்பரும் விடுதலையானர். ''பயணத்தில் அடைந்த அனுபவம் இது'' என்று கூறி உடனே ஊருக்குப் புறப்பட்டார் நண்பர்.

சில ஊர்களில் சரியான விலாசமிருந்தாலும், அதைத் தேடிக்கொண்டு போவது மிகவும் கஷ்டம். அப்படிப்பட்ட கஷ்டமான விலாசமாக இருந்தாலும் பகல் நேரமாக இருந்தால் நேராகத் தபால் ஆபீசுக்குப் போவது மிகவும் நல்லது. இரவு காலமாக இருந்தால் தபாலாபீசில் வேலை

செய்யும் நபரின் வீட்டுக்குச் சென்று கேட்பது நலம். வீணுக அலேய வேண்டிய நிலே ஏற்படாது.

மேலும் பயணத்தில் நாம் தாய்மொழியைத் தவிர மற்ற மொழிகள் தெரியாதவர்களேப் போல் நடந்து கொள்வது மிகவும் முக்கியம்: ஏனென்ருல் அப்பொழுது தான் எதிராளி என்ன பேசுகிருர் என்பதை அறிய முடியும். அப்படி அறிவது பயணத்தில் மிகவும் முக்கியம். மேலும் சிலருக்குப் புதிய இடங்களில் தூக்கம் வராது. எனவே இவர்கள் இரவில் விளக்கு எரிந்துகொண்டு இருந்தால் மற்றவர்களுக்குக் கஷ்டம் என்று நினேத்து "பெட்விளக்கை" வைத்துக்கொண்டு படிப்பது வழக்கம். இப்படிப் "பெட் விளக்கில்", எந்தவிதமான ஆபத்துமில்லே என்று நினேத்துக் கொள்வதுண்டு. ஆனல் பெட்விளக்கைப் போல் மிகவும் ஆபத்தானது வேறு ஒன்றுமில்லே. ஏனென்ருல் ஒரு கிராமத்தில் இரண்டு குழந்தைகளின் தாய் இரவில் பெட் விளக்கில் பேய்க்கதை வாசித்துக்கொண்டே தூங்கி விட்டாள். தூக்கத்தில் இந்த அம்மையாரின் மேல் போர்வை தீப்பிடித்துக் கொண்டது. உடனே அவள் கண் திறந்து பார்த்ததும் தூக்கக் கலக்கத்தில் பேய் போல் ஒன்று தெரிந்ததாம். உடனே எழுந்து "பேய்—பேய்" என்று கத்திக்கொண்டே தெருவுக்கு ஓடினுள். தீ நன்ருகப் பிடித்துக் கொண்டது. உடனே அவளே ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் சென்ருர்கள். அங்கே மரணமடைந்தாள்.

இது சாதாரணமாய் இரவு பதிஞெரு மணிக்கு நடந்தது என்ருல் மிகவும் ஆச்சரியமாக இல்லேயா? இவைகள் மட்டுமா? பிள்ளேகள் உல்லாசப் பயணம் போகும் பொழுது மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்: ஒரு சமயம் உல்லாசப் பயணமாக ஒரு பள்ளிக்கூடப் பிள்ளேகள் மாமல்லபுரத்திற்குச் சென்ருர்கள். மாலே எல்லோரும் தனிப் பஸ்ஸில் ஏறி வந்துவிட்டார்கள். சென்னேக்கு வந்தபின், எல்லோரும் அவரவர்களின் வீடுகளுக்குப் போய் விட்டார்கள். மறுநாள் ஒரு பையனுடைய பெற்ருேர் தன் பையன் முன் நாள் உல்லாசப் பயணம் சென்ருன் என்றும்

அவன் திரும்பி வரவில்லை. என்றும் குறை கூறினர். உடனே ஆசிரியர் "அந்தப் பையனை நான்தான் கொண்டுவந்து பள்ளியில் விட்டுவிட்டேன்." என்று கூறினர். பெற்றோர் என்ன செய்வதென்று தெரியாமல்மாமல்லபுரம்சென்றார்கள். அங்கே தன் பையனின் உடல் கடற்கரை ஓரமாக ஒதுங்கி இருந்ததைக் கண்டு அலறி அழுதார். என்ற செய்தி கிடைத்தது. இவ்வாறே-மிருகக் காட்சி சாலையில் கூண்டின் அருகில் போகாதீர்" என்று எச்சரிகைப் பலகை இருப் பதையும் கவனிக்காமல் அநேகர் கூண்டின் அருகில் சென்று பல ஆபத்துக்களுக்கு உள்ளாவதைக் காண்கின்றோம்: மனிதர்களைவிட மிருகக் காட்சியிலிருக்கும் மிருகங்கள் மிகவும் கொடியன. காட்டு விஷயங்களில் அனுபவ மில்லாத மாணவர்களும் பெரியவர்களும் அங்கு ஆபத்தில் சிக்குவதைக் காணலாம்.

மேலும் காட்டில் பயணம் செய்யும்போது மூங்கில் பாலங்களைச் சில சமயங்களில் கடந்து செல்ல வேண்டிய நிலை ஏற்படும். அப்படி மூங்கிற் பாலங்களைக் கடக்க வேண்டியதாக இருந்தால், மூங்கிற் பாலத்தின் மேல் வேகமாக ஓடக்கூடாது. மெதுவாக நடந்துதான் போக வேண்டும். கால்களைப் பரப்பி வைத்துத்தான் நடந்து செல்ல வேண்டும்.

இவைகள் மட்டுமல்ல பயணத்தில் இன்னும் பல சிக்கல்களும் இருக்கின்றன. இராமநாதபுரத்திலிருக்கும் ஓரியூருக்கு ஒரு சமயம் போனேன் அங்கிருந்து பஸ் வசதி இல்லை என்று கூறியதும், ஓ ரி யூ ரி லி ரு ந் து திருவனைக்கால் என்ற கிராமத்துக்கு மூன்று நான்கு மைல்கள்தான் என்றும் சைக்கிளில் எடுத்துக் கொண்டால் போய்விடலாம் என்றும் வழிகாட்டி கூறினன். நானும் சரி என்று கூறினேன். இரண்டு சைக்கிள்களில்நாங்கள்இருவரும் காற்றாய்ப் பறந்தோம். சுமார் இரண்டு மைல்கள் போனதும் இருவரும் சைக்கிளை விட்டு இறங்கினோம். "வாங்கோ! ஒரு மைல் தொலைவுக்கு மணலில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டேதான் போகவேண்டும்." என்று சர்வ சாதாரண

மாய்க் கூறினுன் வழிகாட்டி. மணி சுமார் பத்து இருக்கும்; தோளின் மேல் இருக்கும் சாமான்களைச் சுமந்து கொண்டு, மணலில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடப்பதென்ருல் லேசான காரியமா? என்ன செய்ய முடியும்? வந்து விட்டோம், இதைப் பார்க்காமல் போனுல் வழி காட்டிக்குப் பணம் குறையப் போவதில்லை. 'சரி போக லாம்' என்று தலையை ஆட்டினேன். ஆனுல் சிறிது நேரம் அங்கேயே பேசாமல் நின்று கொண்டிருந்தேன். ஏனென்ருல் மணலைத்தாண்டிப் போனதும் உண்மையில் அப் பக்கத்திலேயே கிராமம் இருக்கிறதா? அல்லது வழிகாட்டி பொய் சொல்லி அழைத்துச் சென்று ஏதாவது விபரீதங்கள் நடந்தால் என்ன செய்வது என்பதை நினைத்துக் கொண்டு கொஞ்சம் இளைப்பாறுவதைப் போல் நின்று கொண்டி ருந்தேன். பிறகு குழந்தைகளுடன் ஒரு குடும்பம் வந்தது. அவர்களிடம் ஒன்றும் தெரியாதவன் போல், "இதை விட்டால் வேறு வழியில்லையா?" என்று கேட்டேன். "அவர் களும் இல்லை" என்றனர்.

அவர்கள் கூடவே பேசிக் கொண்டே ஒரு மைல் மணலைக் கடந்து சென்ருேம். மறுபடியும் ஒருமைல் திரும்பிவரும் பொழுதும் தள்ளிக் கொண்டே வந்தோம். மற்ருெரு சமயம் சேலம்—மல்லூரில் 'சுனைக்கரடு' என்ற இடத்தைக் காண வேண்டும் என்று கருதிக் கீழே தண்ணீர்ச் சுரங்கப் பள்ளத்தில் இறங்கினேும்.' ஆனுல் எங்களுடன் வந்த "பியூன்" குறுக்கு வழியில் இறங்கினுர். அங்கே ஒரு பாறையில் மேல் கால் வைத்தார். உடனே அந்தப் பாறையின் முனை உடைந்து விட்டது. உடைந்த பாறையின் துண்டு அந்தப் பியூனின் காலில் பட்டுக் காயத்தை உண்டாக்கியது: கடைசியில், "நீங்கள் போன வழியில் நானும் போயிருந்தால் நன்மையாக இருந்திருக்கும் என்று கூறினுர். சில இடங்களில் குறுக்கு வழியில் நடந்து போகும் பொழுது, சதுப்பு நிலம் இருக்கும். அதனை "உளைபூமி" என்று கூறுவார்கள்: அப்படிப்பட்ட பூமியில் சிக்கிக் கொண்டால் பெரிய அபாயம் உண்டாகும். ஆளைப்

பூமிக்குள்ளேயே இழுத்துவிடும். அப்படிச் சிக்கியவர்களைக் கைகொடுத்து இழுப்பது ஆபத்து. உடனே வேஷ்டியையோ, புடவையையோதான் தூரத்திலிருந்து போட்டுப் பிடித்துக் கொள்ளும்படி செய்து பிறகுதான் தூக்க வேண்டும். அனுபவமில்லாதவர்கள் உடனே தாவிப் பிடித்துவிடு வார்கள். ஆனால் பிடித்தவர்களும் உள்ளே போய் விடுவார்கள்.

## பயணத்தில் போலிக் கன்னியர்

ஒரு சமயம் நானும் என் நண்பர் ராமனும் காரில் பயணம் செய்துக் கொண்டிருந்தோம். அது கிராமமு மில்லாத நகரமுமில்லாத ஒரு தனி வழி. அங்கே திடீரென்று சுமார் ஐந்து கிருஸ்தவக் கன்னிமார்கள் ஒரு சோலையிலிருந்து வந்து எங்கள் காரை நிறுத்தினார்கள்.

‘‘நாங்கள் இங்கிருந்து சுமார் ஐந்து, ஆறு மைல் தூரத்திலிருக்கும் ஒரு கிராமத்திற்கு வேதம் போதிக்கப் போனோம். திரும்பிவர நேரமாகி விட்டது. அடுத்த கிராமத் திற்கு போய் விட்டுவிட்டால் போதும்’’ என்று கூறினார்கள். உடனே இராமன் ‘‘ஐயோ பாவம்’’ என்று கன்னியர் உடையில் இருந்ததால் அவர்களைக் காரில் ஏற்றிக் கொண்டார். சிறிது தூரம் சென்றதும் ‘‘எனக்கு மயக்க மாக இருக்கிறது’’ என்று வழியில் இருக்கும் ஒரு கடையில் சோடா வாங்க நான் இறங்கினேன். நான் என் நண் பரைக் சீண்டி அழைத்தேன். நாங்கள் இறங்கும் பொழுது நானே ‘‘அவர்கள் தாய்மார்கள், வரமாட்டார்கள்’’ என்றுகூறி, ‘‘உங்களுக்கு ஏதாவது வேண்டுமா,’’ பீடி,

சிகரெட் என்று கேட்டேன். "அதெல்லாம் வேண்டாம்" என்றனர்.

பிறகு நாங்கள் இருவரும் கடைக்குப் போய்ச் 'சோடா குடிப்பதைப் போல், "இராமன்! அவர்கள் கன்னி யர்கள் இல்லை. அவர்கள் அந்த உடையிலிருக்கும் கள்ளர்கள். கன்னியர்களுக்கு இடுப்பில் கயிறும், சிலு வையும் இருக்கும். மேலும் கன்னியர்கள் "வள—வள" வென்று பேச மாட்டார்கள். செபம் செய்துக்கொண்டே தான் வருவார்கள். இக் காரணங்களை வைத்துக் கொண்டு கவனித்தால் அவர்களால் நமக்குப் பெரிய ஆபத்து உண்டாகப் போகிறது" என்று கூறினேன்.

நான் ஏதாவது சொன்னால் அதில் உண்மை இருக்கும் என்று இராமன் நினைத்தார். அவர் என்ன செய்வதென்றே தெரியாமல் விழித்தார். இந்த கடையில் இருப்பவனும், காரில் இருப்பவர்களும் ஒரு கோஷ்டியினர் தெரியுமா? என்று நான் கூறியதும் அவருக்கு இன்னும் சந்தேகமாகி விட்டது. "காரிலிருந்து கடைக்கு போகிறோம்" என்று நாம் சொன்னதும் அந்தக் கூட்டத்திலிருக்கும் ஒருவன் "நாங்கள் காரில் இருப்பது அவனுக்குத் தெரிய வேண்டாம்" என்று கூறியதைக் கவனித்தீர்களா? ஆகையால், முன்பு எனக்கு வயிற்றில் ஆபரேஷன் ஆகி யிருப்பாதாகவும், மறுபடியும் வயிற்றில் ஆபரேஷன் செய்து கொள்ளப் போகிறோம்' என்றும் கூறுகிறேன். அப்போது கார் கெட்டுப் போனதைப் போல் "கர்—கர்" பாசாங்கு செய்யவும். நான் உடனே "என்ன?" என்றுக் கேட்கிறேன். நீங்கள் "காரைக் கொஞ்சம் பின்னாலிருந்து தள்ள வேண்டும். உங்களுக்கு வயிற்றில் ஆபரேஷன் ஆகி யுள்ளதே என்ன செய்வது என்றே—தெரியவில்லை" என்று கூறுங்கள். நான் உடனே அவர்களிடம் மன்னிக்க வேண்டும். கொஞ்சம் காரை தள்ளினால் போதும். உங் களிடம் எப்படிச் சொல்வதென்றுதான் யோசனை செய் கிறோம்." என்று கூறுகிறேன் என்று, முன்னேற்பாடு செய்துக் கொண்டேன். அப்படியே செய்தோம்.

உடனே அந்த ஐந்து கன்னியர்களும் அதற்கென்ன ஆபத்தில் உதவி செய்ய வேண்டும் என்றுகூறி, இறங்கி, ஆண்கள் தள்ளுவதைப் போல் எங்கள் வண்டியை தள்ளினார்கள். எங்கள் கார் கொஞ்சம் கொஞ்சமாக "ஸ்டார்ட்" செய்வதைப் போல் பாசாங்கு செய்வதும் நிற்பதுமாக மிகவும் நாசுக்காகவும் சாமர்த்தியமாகவும் நண்பர் செய்தார். கடைசியில் "ஸ்டார்ட்"டாகும் பொழுது அந்த ஐந்து பேரும் ஏதோ பேசிக் கொண்டே இருந்து வேஷ்டிக் கட்டுவதைப் போல் ஒருவர் தம் ஆடையை தூக்கி பின் பக்கமாக முட்டிக்கு மேல் தூக்கி விட்டார். அதை உடனே கவனித்த அவருடைய சகாக்கள் அதை இழுத்து விட்டார்கள். இவைகளை யெல்லாம் காரின் உள்ளிருக்கும் கண்ணாடியின் மூலம் பார்த்துக் கொண்டே இருந்த நான் "கமான்—கோ" என்று நண்பரிடம் கூறினேன். அவ்வளவு தான். கார் காற்றாய் பறந்தது. வெகுதூரம் போன பின் காரை கொஞ்சம் மறைவான இடத்தில் நிறுத்தி வைத்து விட்டுக் கொஞ்சம் தூரம் திரும்பி வந்து பைனாக்குலர் மூலம் பார்த்தோம்.

"ஆ! ஆண்டவனே நீங்கள்தான் காப்பாற்றினீர்கள்" என்று நினைத்துக் கொண்டோம். ஏனெனில் அவர்கள் ஒவ்வொருவராக உடையை நீக்குவதைக் கண்டோம். என் நண்பர் அதைப் பார்த்துவிட்டு "மிஸ்டர் நாத்! எப்படி அவ்வளவு சீக்கிரம் இவை உங்கள் மூளை வேலை செய்கிறது." என்று கேட்டார்.

"நண்பரே! எம் மதமும் சம்மதமே" என்ற கொள்கையில் நான் ஒவ்வோர் இனமக்களின் நடை, உடை, பழக்க, வழக்கங்கள் முதலியவைகளைப் பற்றி தீவிரமாக ஆராய்ச்சி செய்வதுடன் கூர்ந்து கவனிக்கும் பழக்க முடையவன். அதுதான் இன்று நாம் உயிர் தப்பியதற்குப் பேருதவியாக இருந்தது" என்றுகூறி ஆண்டவனுக்கு நன்றி வணக்கம் செய்தேன்.

மேலும், நாம் வேறோர் ஊருக்குப் போனால் நம்முடைய ஊரிலிருந்து ஏதாவது முக்கியமான ஒரு அத்தாட்சிப் பத்திரத்தை நாம் வாங்கி வைத்துக் கொள்வது மிகவும் முக்கியமானதாகும்: இவைகள் கூடவா பயணத்தில் முக்கியம் என்று சிலர், ஏன், பலர் கருதுவதுண்டு. மேல் நாடுகளில் இவ்விதமான கடிதங்கள் இல்லாமல் மாணவர்கள் கூடப் பிரயாணம் செய்வதில்லையாம். சமீபத்தில் நீலகிரி யிலிருந்து வந்த என்னுடைய நண்பர் ஒருவர் என்னுடைய விலாசமும் சரியாகத் தெரியாமல், காலை சுமார் பத்து மணிக்கு கடற்கரைக்குச் சென்றார். நீலகிரியில் இருந்தவர் காலையில் எதிர் வெயிலில் கடற்கரைக்குச் சென்றது முதல் குற்றம். பிறகு சுமார் இரண்டு மணி நேரம் வரையில் கடற் கரையில் நல்ல வெயிலில் வேடிக்கை பார்த்தார் போல் தெரிகிறது. அதனால் அவர் இருதய இரத்த அழுத்தம் காரணமாய் மரணமடைந்துவிட்டார். உடனே சென்னை போலீஸார் அவரை ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டு அச் செய்தியைப் பத்திரிக்கையில் வெளிப்படுத்தினார்கள். பிறகு அவருடைய குறிப்பு நோட்டில் ஏதோ ஒரு மூலையில் அவருடைய பெயரும், நீலகிரி விலாசமும் இருந்தன. அதைக் கண்டுபிடித்து நீலகிரிக்குத் தகவல் கொடுத்தார்கள். நான்கு ஐந்து நாட்களுக்குப் பிறகு திடீரென்று நான் பகல் உணவுக்காக வீட்டுக்குப் போனபொழுது, நீலகிரி நண்பர்கள் இரண்டு மூன்று பேர் என் இல்லத்தில் உட்கார்ந்து கொண்டிருந்ததைக் கண்டேன். அச் செய்தியைக் கேள்விப்பட்டதும் நானும் அவர்களுடன் ஆஸ்பத்திரிக்குச் சென்று, அவர்களுக்கு உதவி செய்து பிணத்தைச் சென்னையிலிருந்து நீலகிரிக்குக்கொண்டு செல்வ தற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தேன். நீலகிரி விலாசம் அவருடைய பையில் இருந்ததால் வீட்டுக்குத் தெரியப் படுத்துவதற்கு அது அதிகாரிகளுக்கு உதவியாக இருந்தது அல்லவா?

இந்தப் பிரயாண நூல் எழுதிக் கொண்டிருக்கும்போது கொஞ்சம் இளைப் பாறலாமென்று நினைத்து அக்டோபர்

1970 கலைமகளைப் படித்தேன். அதில் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் மேல் நாட்டுக்குப் பிரயாணம் செய்யும் பொழுது ஒரு சிக்கலில் சிக்கிக் கொண்டதை வாசித்தேன்: அதை அப்படியே ஈண்டு தருகிறேன்.

"விமானம் பம்பாயில் இரவு 8-15க்கு இறங்கியது. அங்கே அமைச்சரை வரவேற்பதற்குப் பலர் காத்திருந் தார்கள்.

பம்பாயில் உள்ள என்னுடைய நண்பர்களும் உறவினர் களும் வந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில் என்னுடைய பெட்டியை எடுத்து வைத்தேன். மறு நாள் காலையில் புறப் படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். விமான நிலையத்தைச் சேர்ந்த ஒருவர், "பாஸ் போர்ட் எங்கே?" என்று கேட்டார். என் கையில் உள்ளதைக் கொடுத்தேன். அப்போது "ஹெல்த் சர்டிபிகேட் எங்கே!" என்று கேட்டார். அதைக் கேட்டவுடன் எனக்குத் திடுக் கிட்டது. என் முட்டாள் தனம் எனக்குப் புலப்பட்டது. பத்து நாளைக்கு முன்பே சென்னைக் கார்ப்பரேஷனுக்குப் போய்க் காலரா, அம்மை ஊசிகளைக் குத்திக் கொண்டு வாங்கின உடல் நலச் சான்றிதழை என் மேஜையில் ஓரிடத்தில் வைத்திருந்தேன். வருகிறவர்களுடனும், போகிற வர்களுடனும் பேசிக் கொண்டே இருந்தபடியால் இன்ன இன்ன சாமான்களை எடுத்து வைக்க வேண்டும் என்று நண்பர்களிடம் சொல்லியிருந்தேன்.

அந்தக் கலவரத்தில், அந்தச் சான்றிதழை எடுத்து வைத்துக் கொள்ள மறந்து விட்டேன். பிறகும் நினைவு படுத்தவில்லை. பாஸ்போர்ட்டும் விசாவும், டிக்கட்டும் பயணத்திற்கு எவ்வளவு இன்றியமையாதனவோ அவ்வளவு இன்றியமையாதது இந்தச் சான்றிதழ். அது இல்லா விட்டால் வெளிநாட்டுக்குப் பயணம் செய்ய முடியாது. பல முறை வெளிநாடுகளுக்குச் சென்ற எனக்கு இது நன்ருகத்

தெரியும். ஆனால் இப்பொழுது நான் ஏமாந்து போய் விட்டேன். காலை எட்டு மணிக்குள் எப்படி அதை வருவிப்பது? நாளைக்கு நம்மால் புறப்பட முடியுமா? இந்தச் சிக்கலில் என்னுடைய மனம் தவித்தது. அங்கிருந்த அத்தனை பேரும் என்னைப் பார்த்துச் சிரிப்பது போலத் தோன்றியது. ''என்ன முட்டாள்தனம் செய்து விட்டோம்'' என்று, பிறருக்கு முன்னால் என் முக வாட்டத்தைக் காண்பிப்பதற்கு நாணி, ஏதோ பைத்தியக்காரச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருந்தேன். ''ஹெல்த் சர்ட்டிபிகேட்—ஹெல்த் சர்ட்டிபிகேட்'' என்று என்னுடைய உள்ளம் முணு முணுத்துக் கொண்டிருந்தது. பிறகு ஆண்டவன் கருணையால் எப்படியோ சென்றேன்'' என்று திரு. கி. வா. ஜ. எழுதி இருக்கிறார்.

பலர் இவ்விதமான சிக்கலில் சிக்க என்ன காரணம் தெரியுமா? நாம் பிரயாணம் செய்வதற்கு சுமார் ஒரு மாதத்திற்கு முன்பே என்னென்ன பொருள்களை எடுத்துச் செல்ல வேண்டுமென்று (*List*) பட்டியல் தயாரிக்க வேண்டும். அப்படி தயாரித்த பட்டியலைக் கையில் வைத்துக் கொண்டு, ''டக்—டக்'' என்று பொருள்களை எடுத்து வைத்துக் கொண்டு புறப்படுவது சுலபமல்லவா? நான் இப்படிச் செய்யும் பழக்கமுடையவன். ஏனென்றால் காட்டில் எனக்குத் தேவையான பொருள்களை, நான் யாரிடம் கேட்க முடியும். அப்படித் தேவையாகயிருக்கும் பொருள்களுக்கு நான் சுமார் மூன்று நான்கு மைல்கள் நடந்து, மலையடிவாரத்திற்குத்தான் வர வேண்டும். இது எவ்வளவு பெரிய ஆபத்து என்பது எனக்குத் தான் தெரியும். எனவே பயணம் செய்வது ஒரு கலைதான். ஆனால் அதில் சிக்கலுமுண்டு என்பதும் உண்மை.

# பயணத்தில் முக்கியம் எது

என்னுடைய நண்பர் சென்னை சைதாப்பேட்டையில் இருக்கிறார். அவர் பெயர் திரு. கிருஷ்டிபரங்கிமலை என்பது. அவருக்குப் பத்து குழந்தைகள். அவரும் நானும் திருமணமாவதற்கு முன் ஒன்றாகப் பழகினோம். ஒரு சமயம் எனக்கு உயிர் நிலையில் அடிப்பட்டு குருதி ஆறாகப் போய் கொண்டிருந்தது. அதைக் கண்டதும் நான் என்ன செய்வதென்று தோன்றாதவனாய்த் திகைத்துப் போனேன். உடனே திரு. கிருஷ்டி தன் வேட்டியைக் கிழித்துக் காயத்தைக் கட்டி என்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுப் போனார் இது நடந்தது 1939-ம் ஆண்டு. அன்று முதல், இந்த உதவி செய்து என்னைக் காப்பாற்றியதற்காக நான் மறக்காமல் அவர் வீட்டுக்குப் போவதுண்டு. அவருடைய பையன்களில் ஒருவன் நான் ஏதாவது கூறினால் அதை உடனே கேட்பது வழக்கம். எப்பொழுதோ நான் அவனிடம் ''இரயில் வண்டியில் அடிக்கடி பயணம் செய்கிறவர்கள் தங்களுடைய விலாசத்தை எழுதி வைத்துக் கொள்வது நல்லது'' என்று கூறினேனாம்.

ஒரு நாள், அந்தப் பையனை இரண்டு நாட்களாகக் காணோம் என்று தேடினார்கள். அவன் மின்சார வண்டியிலிருந்து, தவறி விழுந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப் பட்டான். ஆஸ்பத்திரியில் அவனுடைய சட்டைப் பையில் விலாசம் இருப்பதைக் கண்டு வீட்டுக்குத் தகவல் கொடுத்திருந்தார்கள். அந்த விலாசமும் ஆஸ்பத்திரியில் இல்லை என்றால் என்ன செய்ய முடியும்? புகைப்படமும் பத்திரிகையில் போட முடியாது. ஏனென்றால் வண்டியிலிருந்து விழுந்தவர்களுக்கு முகத்திலும், தலையிலும் காயங்கள்

ஏற்படும். அந்தக் காயங்களுக்கு ஆஸ்பத்திரியில் கட்டுப் போடுவார்கள். கட்டுடன் புகைப்படம் எடுத்தால் யாருக்கும் அடையாளம் தெரியாது. அல்லவா? இந்த சிக்கல்களுக்கெல்லாம் விலாசம் நம்முடைய மணிபர்ஸ்சில் இருந்தால் எவ்வளவு நன்மை தரும் என்பதை நீங்களே யோசித்துப் பார்க்கவும். மணமக்கள் திருமணம் ஆனதும் தேன் நிலவுக்கு வெளியூர்களை சுற்றிப் பார்ப்பதற்குப் போவதைக் காண்கிறோம். அப்படி வெளியூர்களுக்குப் போகும் தம்பதிகள் அந்த ஊரில் நடைப்பெறும் திருவிழா வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டே செல்லும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மக்கள் நெருக்கடியில் தன்னுடைய மனைவியின் கையைத் தவற விட்டு விடுவதுண்டு. தன் மனைவி தான் பின்னால் வருகிறாள் என்று கருதி அதேப் போல் புடவையைக் கட்டிக் கொண்டு வரும் மற்றொருவரைப் பார்த்து விட்டதால் சிறிது தூரம் சென்ற பின் திரும்பிப் பார்ப்பார். அப்பொழுதுதான் தெரியும். தன் மனைவியையும் குழந்தைகளையும் விட்டு விட்டோம் என்று, உடனே இவர் ஒரு பக்கம் தேடிக் கொண்டே போவார். அந்த நிலை ஏற்பட்டதும் உடனே பெண்கள் நின்ற இடத்திலேயே நின்று விட வேண்டும்.

ஏனென்றால் ஆண்கள் எப்படியும் அலைந்து அதே இடத்தில் வந்து கண்டு பிடிப்பார்கள். பெண்களும் தேடிக் கொண்டு இங்கு மங்கும் போனால்தான் ஆபத்து. அப்படிப் பெண்கள் எவ்வளவு நேரம் நிற்க வேண்டும் என்று ஒரு கேள்வி உதயமாகிறது அல்லவா? ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் அப்படி நிற்கலாம். ஆனால் மாலை நேரத்தில் ஆறு மணிக்குமேல் அப்படி மணிக்கணக்கில் நிற்பது அவ்வளவு நல்லதன்று. அப்படி வழி தவறித் தடுமாறும் பெண்கள், உடனே நல்ல தாய்மார்களாகப் பார்த்து அவர்களிடம் விஷயத்தைக் கூறி அவர்கள் மூலமாகவே போலீஸ் ஸ்டேஷனுக்கு விஷயத்தை தெரியப்படுத்துவது நலம். இரவுக் காலங்களில் பெண்கள் மிகவும் ஜாக்கிரதையாகப் பயணம் செய்ய வேண்டும். அதுவும் பெரிய நகரங்களாக இருந்தால்

பலர் நல்ல உடை அணிந்து கொண்டு, நல்லவர்களைப் போல் பேசி வந்து நம்மை மோசம் செய்து விடுவார்கள். என்பது திண்ணம். சில ஆண்டுகளுக்கு முன் சென்னையை சுற்றிப் பார்ப்பதற்காக வந்த மலேயாவைச் சேர்ந்த புதிய தம்பதிகள் முதலில் கடற்கரைக்குச் சென்றார்கள். தம்பதி களாக இருந்ததால், மணப் பெண்ணுக்கு கணவனின் பெயர் மட்டும் தெரியும். தன் கணவனின் பெயர் மட்டுமே உலகில் இருந்தால், பரவாயில்லை. ஒருவன் பெயரையே இன்று தமிழ் நாட்டில் நூற்றுக் கணக்கானவர்கள் அப் பெயரை வைத்திருக்கின்றனர். பிறகு இந்த தம்பதிகள் கடற்கரையிலிருந்து மூர்மார்க்கெட்டைப் பார்க்க வந்தார் களாம். மூர்மார்க்கெட்டில் பலவழிகள் இருக்கின்றன. நன்றாகப் பழகியிருப்பவர்கள் கூட வழி கண்டுப்பிடிப்பது கஷ்டம் என்றால், மலேயாவைச் சேர்ந்த புதிய மணமக்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமா?

கணவன் பின்னால் போன அந்தப் பெண், தன் கணவனை விட்டுவிட்டு எப்படியோ வெளியில் வந்து நடைப் பாதையில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறாள். இந்தப் பெண்ணைப் பார்த்த ஒரு வயதான உத்தமி அவளை விசாரித்து, ''அம்மா! நான் ஊருக்குப் போகிறேன். நீயும் என்னுடன் வா! அங்கே ஒரு நல்ல ஆசிரமம் இருக்கிறது. அங்கே விட்டுவிட்டால், அவர்கள் உன் புகைப் படத் தையும், உன் செய்தியையும், உன் கணவன் பெயரையும் பத்திரிகையில் போடுவார்கள். பிறகு உன் கணவன் உன்னைத் தேடிக் கொண்டு வருவார்.'' என்றுகூறி அழைத்துச் சென்று ஒரு கிறிஸ்தவ மடத்தில் விட்டு விட்டார். அந்த மடத்தில் (கான்வெட்) இந்தப் பெண்ணின் புகைப் படத்தையும் அந்தப் பெண்ணை பற்றிய செய்திகளை விளக்கமாகவும், சுருக்கமாகவும் ஒரு பிரபல பத்திரிகையில் வெளியிட்டார்கள். வெளியிட்ட மறுநாளே அவள் கணவன் அந்த மடத்திற்கு வந்து அந்த மடத்தார் என்ன 'செலவு செய்தார்களோ' அந்தப் பணத்தைக்

கொடுத்து விட்டுத் தன் மனைவியை அழைத்துச் சென்றார். இந்த சிக்கல்கள் ஏற்படுத்துவதற்குக் காரணம் என்ன?

யாராவது தவறிப் போனால் உடனே அவர்களுக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் சிந்தனைகள் சிதறுண்டு போகின்றன. அவர்கள் தடுமாற்றத்தால் ஒன்று கேட்டால் ஒன்று பதில் சொல்லும் நிலையையும் அடைவர். அந்த விதமான நிலையில் கொஞ்சம் தைரியமாகவும், செய்ய வேண்டியதை யோசனையுடனும் செய்யவேண்டும். இவ்வளவுக்கும் என்ன காரணம்? அப்பெண்ணிடம் அவள் கணவனுடைய விலாசம் இல்லாதது ஒரு பெரிய குற்றம்—அல்லவா? புதிய ஊரில் தங்கி இருக்கும் தற்காலிகமான விலாசத்தையும் மிகவும் அவசியம் என்பதை என் பயண அனுபவத்தில் உணர்தேன். மேலும் கணவன் பக்கத்தில் வரும்பொழுது மனைவிக்கு தனிமையாக ஏன் விலாசம் வேண்டும் என்று கேட்கும் பல மேதாவிகளையும் கண்டிருக்கிறேன். அப்படி ஓட்டலில் தங்குவதாக இருந்ததால் நம்முடைய உறவினர், மனைவி, மகள், மகன் முதலியவர்களிடமும் ஓட்டல் விலாசம் கொடுப்பது மிகவும் அவசியம். ஒரு ஓட்டலிலிருந்து மற்றொரு ஊருக்கோ ஓட்டலுக்கோ போனால், பழைய விலாசத்தை உடனே நீக்கி விட வேண்டும். கையில் இருக்கும் விலாசத்தை மறவாமலிருப்பது மிகவும் முக்கியமானதோர் பயணக் கலையாகும். இப்படி பயணம் செய்தால் கூடுமான வரையில் கஷ்டங்கள் அலைச்சல் முதலியவைகள் இல்லாமல் பயணத்தை இன்பமயமாக்கவும் சிக்கனமாகவும் ஆக்கலாம் என்பது திண்ணம். ஆனால் சில பெண்களிடம் சில ஆண்கள் நல்லதை எடுத்துக் கூறினாலும் அப் பெண்கள் தங்களுக்கே சுயமாக இருக்கும் கர்வம் ''தலைக்கனம்'' முதலிய கெட்ட குணத்தால் ''ஆண்கள் என்ன சொல்வது நாம் என்ன கேட்பது'' என்ற ஒரு மமதையால் தற்காலத்தில் பல ஆபத்துக்களில் சிக்குண்டு தவிப்பதைக் கண்டிருக்கிறேன். மேலும் ஆண்கள் படிக்காத முண்டங்களாக இருந்தாலும் எந்த ஆபத்திலிருந்தும் தப்பிப்

பிழைத்துக் கொள்கின்றனர். ஆனால் கல்விக் கற்றவர்களாக இருந்தாலும் பெண்கள் பெண்கள் தாம்.

சாதாரணமாய் என்னுடைய அனுபவத்தில், "நாங்கள் மிகவும் சாமர்த்தியமானவர்கள்" என்று கூறின பல மங்கையர்கள் கடைசியில் எவ்வளவு அனுபவக் குறைவுள்ளவர்கள் என்பதைத் தெரிந்துக் கொண்டேன். மேலும் சில ஆண்களும் தம் மனைவிமார்கள் நல்லதை எடுத்துக் கூறினால், "இவள் என்ன கூறுவது, நாம் என்ன கேட்பது" என்று நினைப்பதும் உண்டு. இக் காரணங்களால் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஆபத்துக்கள் உண்டாவது மிகவும் சகஜமாக இருக்கின்றன. மேலும் சிலர் இருவர், மூவர் ஒன்றாகச் சேர்ந்து ஓரிடத்திற்குச் செல்ல பஸ்ஸிலோ, இரயிலிலோ பயணம் செய்வார்கள். அப்படி பயணம் செய்யும் வண்டியில் கூட்டம் அதிகமாக இருக்கிறது என்று நினைத்து இந்த இருவரில் ஒருவர் சற்று தள்ளி நின்று விடுவார். கடைசியில் முதலில் ஒருவர் இறங்கிவிடுவார். முதலில் இறங்கியவர் நமக்குப் பின்னால் நண்பரும் இறங்குவார் என்று நினைத்துக் கொள்ளுவர். ஆனால், வண்டியில் இருக்கும் இரண்டாவது நண்பரோ அங்கு மற்றொருவரைப் பார்த்துவிட்டு அவர் தாம் தம் நண்பர் என்று நினைத்துக் கொண்டு வண்டியிலேயே பேசாமல் இருப்பார். ஆனால் முதலில் இறங்கியவர் திகைத்துப்போய், என்ன செய்வதென்று தெரியாமல் இறங்கிய இடத்திலேயே நின்று கொண்டிருப்பார். எனவே, எப்பொழுதும் இரண்டு மூன்று பேர் பயணம் செய்தால் அனைவரும் ஒரே இடத்தில் நிற்கவோ, உட்காரவோ வேண்டும். அப்படி முன்னும் பின்னுமாக பஸ் பிரயாணத்தில் இறங்கினால் ஏதோ—கையைக் காட்டி வண்டியை நிறுத்தலாம். அல்லது சுமார் ஐந்து, ஆறு மைல் தானே என்று நடக்கலாம் அல்லது அடுத்த பஸ்ஸில் ஏறிச் சென்று அடுத்த ஸ்டாப்பில் நிற்கும் நண்பரைச் சந்திக்கலாம்.

ஆனால் இரயில் பயணமாக இருந்தால் அப்படி செய்ய முடியுமா? இப்படி இறங்கித் தவிப்பவர்கள் பலரை நான்

நேரில் கண்டிருக்கிறேன். மேலும், இரயில் பயணத்தில் முதலில் இறங்கிய நண்பரிடமோ அல்லது இரயில் வண்டி யிலேயே நின்று விட்ட நண்பரிடமோ தான் இரயில் டிக்கட்டுகள் இருக்கும். மேலும் பயணச் சாமான்களை அவர் எடுத்திருப்பார் என்று இவரும், இவர் எடுத்திருப்பார் என்று அவரும் நினைத்துக் கொண்டு இறங்கி விடுவதும் உண்டு. இப்படிப் பல சிக்கல்கள் உண்டாவதை நான் நேரில் கண்டிருக்கிறேன். மேலும் இரயில் வண்டியிலிருந்து இறங்கும் நபர், யாரிடமும் "இந்த ஸ்டேஷனில் வண்டி எவ்வளவு நேரம் நிற்கும்" என்று கேட்கமாட்டார். அப்படிக் கேட்பது அவர்களின் கௌரவத்திற்கு குறைவு என்றுகருதும் முட்டாள் புத்தியுடையவர்களும் உண்டு. அப்படி நினைத்துக் கொண்டு, யாரையாவது கேட்பதும் உண்டு. அதற்கு அவர் "இந்த வண்டி 30 நிமிஷங்கள் நிற்கும்" என்று சொல்லி விடுவார்கள்! ஆனல் அந்த வண்டியோ மூன்று நிமிஷங் களுக்கு மேல் நிற்காது; அப்படி வண்டி புறப்பட்டு விட்டாலோ ஓடிவந்து ஏதாவது ஒரு போகியில் ஏறியதால் அது முதல் வகுப்பாகா, இருப்பது பின்னல் தான் ஏறியவர் களுக்குத் தெரியும். இவ்விதமான சிக்கல்களுக்கெல்லாம் என்ன செய்யவேண்டும்.

வண்டியை விட்டு இறங்கி காப்பிக்கோ, தண்ணீருக்கோ போக வேண்டியவர்கள் பயணிகளைக் கேட்காமல் இரயிவே சிப்பந்திகளைக் கேட்பது நல்லது.

ஒரு சமயம் சேலத்திலிருந்து ஒரு பணக்காரர் தன் மனைவியுடனும் தன் ஒரு குழந்தையுடனும் காரில் பயணம் செய்தார். அதற்குப் பின்னல்தான் எங்கள் காரும் சென்று கொண்டிருந்தது. முன்னல் போகும் காரின் பின் கதவு திடீரென்று திறந்தது. உடனே ஒரு குழந்தை வெளியில் விழுந்தது. அதைத் தாவிப் பிடிப்பதுப் போல் அத்தாயும் வெளியில் வந்து விழ இருவருக்கும் மண்டையில் நல்ல அடிப்பட்டது. வேகம் காரணமாகக் கார் சிறிது தூரம்

போய் நின்றது. "வண்டியில் நான் கண் அயர்ந்ததும், குழந்தை வண்டிக் கதவை திறந்தாள் திருப்பத்தில் கதவு திறந்ததும் குழந்தை வெளியில் விழுந்து விட்டது. குழந்தை விழுகிறதே என்று நான் தாவிப்பிடித்தேன்........."என்று கூறியவாறே அந்தத் தாய் அக்குழந்தையுடன் அங்கேயே உயிர் விட்டாள்.

பயணத்தில் அஜாக்கிரதையாக இருப்பதால், இதைப் போல கோடிக்கணக்கான ஆபத்துக்கள் ஏற்படுவதை நான் கண்கூடாகக் கண்டுள்ளேன். மற்ெருரு பயணத்தின் போது நாங்கள் குடும்பத்துடன் சிக்கிக்கொண்டோம். நாங்கள் சில ஆண்டுகளுக்கு முன் பம்பாய் போய் எங்கள் உறவினர் இல்லத்தில் தங்கியிருந்தோம். அவர்கள் வீட்டிற் சுமார் பத்து ஆண்டுகளாக மலேயாளப் பெண் ஒருத்தி வேலே செய்துக் கொண்டிருந்தாள். அந்தப் பணிப் பெண்ணே, அவள் பத்து வயது சிறுமியாக இருக்கும் பொழுது அவர்கள் பம்பாய்க்கு அழைத்துக் கொண்டு போனர்கள். இன்னும் அவளே, அவளுடைய வீட்டுக்கு அனுப்பவில்லே. காரணம் பம்பாயில் வேலேக்காரர்கள் கிடைப்பது மிகவும் கஷ்டமாம். மேலும், அவளே வெளியிலோ, பக்கத்து மாடிக்கோ அனுப்புவதும் கிடையாது. அந்தப் பணிப்பெண் பல முறைகள் பலவிதமான முயற்சிகள் செய்தும் அவர்கள் அவளே அனுப்புவதே இல்லேயாம். தன்னுடைய பெற்றேர்கள் உயிருடன் இருக்கிருர்களா? என்று கூட அவளுக்குத் தெரியாதாம். யாராவது அவர்கள் வீட்டுக்கு வந்தால் அந்தப் பணிப்பெண்ணே அவர்கள் எதிரில் கூட விடுவதில்லேயாம். இந்த நிலேமையில் நாங்கள் சில ஆண்டு களுக்கு முன் பம்பாய் போயிருந்தோம்.

நாங்கள் சர்வ சாதாரணமாய் எல்லோரிடமும் பழகினேம். சுமார் பத்து நாட்களுக்குப் பிறகு அந்தப் பணிப் பெண்ணேயும் அழைத்துக் கொண்டு எங்களே, இரயில் நிலேயத்திற்கு வண்டி ஏற்றிவிட வந்தார்கள். ஸ்டேஷனில் வந்தவர்கள் வண்டிப் போகும் பொழுது "டாட்டா"

என்று சொல்லி விட்டுப் போனார்கள். அன்று பம்பாய் இரயில் நிலையத்தில் மக்கள் கூட்டம் அதிகமாக இருந்தது. எனவே, அந்தக் கூட்டத்தில் ''யார் யார் கைக் காட்டு கிறார்கள்'' என்று ஒன்றும் தெரியவில்லை. ஆனால் அக்கூட்டத்தில் அந்தப் பணிப்பெண் மட்டும் அழும் கண்ணீருடன் இருந்ததைக் கண்டோம். பிறகு வண்டி போகும் சமயத்தில் அவளைக் காண முடியவில்லை. காரணம் கும்பல் அதிகம். வண்டி வேகமாக ஓடிக் கொண்டே இருந்தது. பக்க வாட்டத்தில் இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே வந்தேன். ஆனால் என் மனைவி மட்டும் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள்.

''என்ன யோசனை!'' என்று கேட்டேன். ஒரு பெருமூச்சு விட்டு, ''பாவம் அந்தப் பணிப்பெண்ணைப் பற்றித்தான் யோசனை செய்துக் கொண்டு வருகிறேன். கடைசி நேரத்தில் அந்தப் பெண்ணை அனுப்பி விட்டார்கள் பார்த்தீர்களா? அவள் கையில் ஏதாவது காசு கொடுக்கலாமென்று நினைத்தேன். என்ன கொடுமை! அவளுக்கு வேலை அதிகம். காலை நான்கு மணியிலிருந்து இரவு பத்து மணி வரை மாடு போல் உழைக்கிறாள். கால்களில் எல்லாம் ஒரே சேற்றுப் புண். இப்படியும் ஆண்டவன் பெண்களைப் படைக்கிறாரே! நான் தான் அவளுக்கு மருந்து கொடுத்துக் 'காலுக்குப் போடு' என்று கூறினேன். பத்து ஆண்டுகளாக வீட்டை விட்டுப் போக வில்லையாம். அவள் தன்னை அழைத்தும் போகும்படி என் காலில் விழுந்துக் கேட்டாள். நான், ''அது தவறு'' என்று சொல்லி விட்டேன். அவளை ஓர் அடிமை வேலைக்காரியைப் போல் வைத்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் வெளியில் சென்றால் இவள் மட்டும்தான் வீட்டில் இருக்க வேண்டுமாம். காரணம் பம்பாயில் உண்டாகும் ஆபத்துக்களை மட்டும் பத்திரிகையில் வாசித்துக் காட்டுவார்களாம். இக்காரணங்களைக் கொண்டு அந்தப் பணிப்பெண் வெளியில் வருவதற்கு கூட பயப்படுமாம். இருந்தாலும் பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆனதால் அவளை அவள் ஊருக்கு அனுப்பி விட வேண்டும். அவளுக்கு

ஊருக்குப் போக பிரியமாம். 'போகிறேன்' என்று பல முறை கூறியும் அடம் பிடித்தும் பார்த்து விட்டாளாம். பாவம்! இன்னும் எத்தனை ஆண்டுகள் அங்கே இருக்க வேண்டுமோ? ஆண்டவன் கண் வைத்தால் அவளுக்கு கருணையா? காட்ட மாட்டார்.'' என்று பேசிக் கொண்டே இருந்தோம்.

வண்டியும் அடுத்ததோர் பெரிய நிலையத்தில் வந்து நின்றது. வண்டி நின்ற சிறிது நேரத்திற்கெல்லாம் பம்பாயில் வேலை செய்த அந்தப் பணிப்பெண் ஓடி வந்து எங்கள் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ''என்னைக் காப்பாற்றுங்கள். என்னை என் பெற்றோரிடம் கொண்டு போய் விட்டு விடுங்கள். இது பெரிய தர்மம். என் டிக்கெட்டுக்கு இந்த காது கம்மலை வைத்துக் கொள்ளுங்கள்.'' என்று காது தோட்டை எடுத்துக் கொடுக்க வந்தாள். ''கொஞ்சம் கூட தாமதம் செய்ய வேண்டாம். உடனே கீழே இறங்கி டிக்கட்டை வாங்கிக் கொண்டு வாங்கோ!'' என்று என் மனைவி கூறினாள்.

உடனே அந்த ஸ்டேஷனிலிருந்து – சென்னைக்கு டிக்கெட்டு வாங்கினேன். அந்தப் பணிப்பெண்ணை சென்னைக்குக் கொண்டு வந்தோம். உடனே, பம்பாய்க்கு, ''நாங்கள் சுகமாக வந்துச் சேர்ந்தோம். நீங்கள் செய்த உதவிக்கு நாங்கள் மிகவும் கடமைப் பட்டுள்ளோம். அந்தப் பணிப்பெண்ணையும் நாங்கள் அதிகமாக விசாரித்தாகச் சொல்லுங்கள். நீங்கள் செய்துக் கொடுத்த பலகாரங்கள் வழியில் உபயோகமாக இருந்தன. உங்களுக்கு எங்கள் நன்றி'' என்று கடிதம் எழுதிப் போட்டு விட்டேன்.

அங்கிருந்தும் கடிதம் வந்தது. அதில் அந்தப் பணிப்பெண்ணைப் பற்றிய சங்கதியே இல்லை. சில நாட்களுக்குப் பின், அந்தப் பெண் கொடுத்த சில தகவல்களை வைத்துக் கொண்டு நான் கேரளாவில் அந்த இடங்கள் எல்லாம் இருக்கின்றனவா? என்று சென்னையில் வாழும் பல மலையாளிகளைக் கேட்டுத் தெரிந்துக்

கொண்டேன். ஒரு முடிவுக்கு வந்ததும், நானும், என் மனைவியும், குழந்தைகளும் கேரளாவுக்கு ஒரு விடுமுறைக்காகப் போனோம். அப்பொழுது அந்தப் பணிப்பெண் சாரதாவையும் அழைத்துக் கொண்டு போய் அங்கே ஒரு ஓட்டலில் என் குடும்பத்துடன் தங்க வைத்து விட்டு நான் மட்டும் அந்த விலாசத்திற்குப் போய்ப் பார்த்தேன். சரியாக இருந்தது. பெற்றோரின் அடையாளமும், தம்பி, தங்கைகளின் அடையாளமும் கூடுமான வரையில் சரிதான். பிறகு ஓட்டலுக்கு வந்து சாரதாவையும் என் குடும்பத்தாரையும் அழைத்துக் கொண்டு அந்தப் பணிப்பெண்ணின் பெற்றோர்கள் வீட்டின் முன்னால் கொண்டு போய் நிறுத்தினேன். அப் பெற்றோர்கள் தம் பெண்ணைக் கண்ட காட்சியையும், அவள் தன் பெற்றோரைக் கண்டதையும் எங்களால் வர்ணிக்கவே முடியவில்லை.

இறந்து போன பெண்ணை மீட்டுக் கொடுத்த தெய்வம் நீங்கள் என்று போற்றினார்கள். சில நாட்கள் அவர்கள் இல்லத்தில் இருந்தோம். பிறகு கடிதப் போக்குவரத்து நடந்தது.

எங்களைத் தெய்வம் என்றே அவர்கள் கடிதத்தில் எழுதுவார்கள். இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின், அந்தப் பணிப்பெண்ணை, அவள் மாமன் முறையுள்ள ஒரு அரசாங்க உத்தியோகஸ்தர், திருமணம் செய்து கொள்வதாகத் திருமண அழைப்பும் வந்தது. அந்த சாரதாவுக்கு இன்று ஐந்து, ஆறு குழந்தைகள் இருக்கின்றன. குழந்தைகளுக்குப் பள்ளி விடுமுறை என்றால், தன் கணவனுடன் ஒவ்வொரு ஆண்டும் எங்கள் இல்லத்திற்கு அவள் வராமல் இருப்பதில்லை..

என் பயணக் குறிப்பில் சிக்காத பல. ஆபத்துக்களும் சம்பவங்களும் வாசகர்களுடைய வாழ்க்கைப் பயணத்தில் ஏற்பட்டிருக்கலாம். அவைகளை அன்பர்களும் நண்பர்களும் எனக்கு விளக்கமாக எழுதி அனுப்பினால் உங்கள் மூலம் பயண அனுபவம் என்று அதை பிரசுரிக்கத் தகுந்த வகையில்

கோவைப் படுத்தி எழுதிப் பத்திரிகையிலும் என் பயண நூல்களிலும் பிரசுரித்து நம்முடைய வாசர்களுக்கு அவரவர் களின் பயணத்தில் நன்மையும், இன்பமும் உண்டாகும் படி செய்வோம். இதை எழுத உதவி செய்யும் அன்பர்களுக்கு நானும், நம், தமிழகமும், நம் இந்தியாவும், மற்ற நாடுகளும் என்றென்றும் கடமைப் பட்டுள்ளன என்பதைத் தாழ்மை யுடன் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

